# ஆவணம்

இதழ் 1

தமிழகத் தொல்லியல்
ஆய்வுக்கழக வெளியீடு

அரையாண்டு இதழ்
அக்டோபர், 1991.

..ாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
48, புத்தூர் நெடுஞ்சாலை, திருச்சிராப்பள்ளி-620 017.

## ஆசிரியர் குழு

முனைவர் எ. சுப்பராயலு
தலைவர், கல்வெட்டியல்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முனைவர் ப. சண்முகம்
இணைப் பேராசிரியர், தொல்லியல்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்.

முனைவர் கோ. விஜய வேணுகோபால்
தலைவர், கலை வரலாற்றுத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

திரு. நடன காசிநாதன்
இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.

பொறிஞர் கொடுமுடி ச. சண்முகன்
செயற் பொறியாளர், பொதுப்பணித்துறை, விழுப்புரம்.

புலவர் செ. இராசு
இணைப் பேராசிரியர், கல்வெட்டியல்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

திரு. கரு. இராசேந்திரன்
ஆசிரியர், மேலப் பனையூர், புதுக்கோட்டை.

## பொறுப்பாசிரியர்

டாக்டர் இரா. கலைக்கோவன்
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி.

## உதவி ஆசிரியர்

செல்வி மு. நளினி, கல்வெட்டாய்வாளர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி.

## எழுத்துவரைஞர்

திரு. மு. ம. கோபாலன், பட்டயக்கல்வி மாணவர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி.

# எண்ணங்களும் எதிர்பார்ப்புகளும்!

தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழகத்தின் வெளியீடாக மலர்ந் தி[illegible]ம் ஆவணம் அரையாண்டு ஆய்விதழ், அறிவியல் நோக்கில் பு[illegible]மிழக வரலாற்றை உருவாக்குவதில் கருத்துக் கொண்டுள்ளது. இதற்கான அடிப்படை முயற்சியாகப் புதிய கண்டுபிடிப்புகளைத் தொகுக்கும் பணிக்கு முதலிடம் தரப்பட்டுள்ளது. வரலாறு, இலக்கியம், தொல்லியல் சார்ந்த புதிய உண்மைகளை வெளிக்கொணர் வதில் ஆவணம் ஆர்வம் கொண்டுள்ளது. வளரும் தலைமுறையின ரையும், பொதுமக்களையும் நம் மரபு வழிப் பண்பாடு, கலைகள் இவற்றைப் பற்றி அறிந்துகொள்ளச் செய்வதுடன் அவர்களுக்கு நாட்டு வரலாற்றில் ஈடுபாட்டை உண்டாக்குவதும் ஆவணத்தின் நோக்க மாகும். இளம் ஆய்வாளர்களை உற்சாகப்படுத்துவதுடன் அவர்களை முறையாக நெறிப்படுத்தித் தமிழகக் கலை ஆய்வுகளில் ஈடுபடுத்த வேண்டும். வழிகாட்டல்களை ஆவணத்தின் உதவியோடும், சிறுசிறு கையேடுகள் மூலமாகவும் கிடைக்குமாறு செய்யும் எண்ணம் இருக்கிறது.

கல்வெட்டு, தொல்லியல், வரலாறு, இலக்கியம் போன்ற துறை களில் ஆய்வாளர்களுக்கும், ஆர்வலர்களுக்கும் ஏற்படும் நியாயமான ஐயங்களைத் தெளிவு செய்யும் கடமை தனக்கிருப்பதாக ஆவணம் கருதுகிறது. ஐயங்களை ஆய்வர்கள் ஆவணத்திற்குத் தெளிவுபட எழுதினால், அவ்வத் துறைசார்ந்த அறிஞர் பெருமக்களைக் கேட்டு ஆவணம் தெளிவுரைகளை வெளியிடும். கல்வெட்டுகளில் ஏற்படும் ஐயங்களை எழுதும்போது குறிப்பிட்ட கல்வெட்டின் முழுப்பகுதியையும் அனுப்பவேண்டும். சிற்பங்கள், கட்டட அமைப்புகள், பிற தொல்லியல் சான்றுகள் குறித்த ஐயமென்றால், ஒளிப்படங்கள், ஐயத்திற்குரிய பொருள் பற்றிய தெளிவான விளக்கம், வரைபடம் ஆகியவற்றை இணைத்து அனுப்பலாம்.

புதிய கண்டுபிடிப்புகளை அனுப்புவோர் ஏற்கெனவே தமிழகத் தொல்லியல் ஆய்வுக்கழகம் அனுப்பியுள்ள சுற்றறிக்கையில் கண்டுள்ள படிவத்தையொட்டி செய்திகளைத் தட்டச்சு செய்து அனுப்பவேண்டும். கிரந்த எழுத்துக்களை அவற்றுக்கு இணையான ஒலிப்புடைய தமிழ் எழுத்துக்களில் எழுதலாம். வர்க்க எழுத்துக்களை இங்கு வெளியிடப் பட்டுள்ள அமைப்பு முறையை ஒட்டி அந்தந்த கிரந்த எழுத்துக்குரிய தமிழ் ஒலிப்பு எழுத்துக்களுடன் எண் சேர்த்து எழுதலாம். இந்த இதழில் வந்துள்ள புதிய கல்வெட்டுகள் அனைத்திலும் இம் முறையே பின்பற்றப்பட்டுள்ளது. கல்வெட்டுகளைப் படியெடுக்கும்போது சில

எழுத்துக்கள் தெளிவில்லாமலும், பொரிந்தும், சிதைந்தும் இருக்கலாம். அப்படிப்பட்ட எழுத்துக்களை அவை வரும் இடம் நோக்கி இன்ன எழுத்துக்களாக இருக்கலாம் என ஊகித்து எடுத்துக்கொள்வதுண்டு. அப்படி ஊகிக்கப்பட்ட எழுத்துக்களை பகர அடைப்புக்குள் தருதல் வேண்டும். சில நேரங்களில் கல்வெட்டுகளில் சில எழுத்துக்கள் பொறிக்கப்படாது விடுபட்டும் போயிருக்கலாம். பொருள் நலம் கருதி அவ்வெழுத்துக்களை, அவை கல்வெட்டில் இடம் பெறாத போதும், இணைத்துக் கொள்ள நேரிடும். இப்படி இணைக்கப்படும் எழுத்துக்களைப் பகர அடைப்பிட்டு, அடைப்பின் அருகே ஒரு நட்சத்திரக் குறியும் சேர்த்துவிடல் நன்றாகும். இவ்விதழின் முதற்பகுதியில் வெளியாகியிருக்கும் புதிய கல்வெட்டுகளில் இம்முறைகள் பின்பற்றப் பட்டுள்ளன. கல்வெட்டுகளை அனுப்பும் ஆய்வாளர்கள் இம்முறைகளைப் பின்பற்றுவது நல்லது.

ஒளிப் படங்கள் அனுப்புவோர் அவற்றை பிளாக் செய்து அனுப்புவது நல்லது. பிளாக் செய்ய வாய்ப்பில்லாத இடங்களில் படங்களை ஆவணத்திற்கு அனுப்பி, பிளாக் செய்யும் செலவுகளைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளலாம்.

தமிழகத் தொல்லியல் வரலாற்றில் அரிய சாதனைகளைச் செய்திருக்கும் முன்னோடி அறிஞர் பெருமக்களை இன்றைய ஆய்வாளர்களுக்கு நினைவூட்டும் முகத்தான் 'பெருமைச் சுவடுகள்' என்ற பொதுத் தலைப்பினைத் தொடங்குகிறோம். இவ்விதழில் கல்வெட்டாராய்ச்சி அறிஞர் தி. நா. சுப்பிரமணியம் அவர்களைப் பற்றி கலாநிதி திரு. க. கைலாசபதி அவர்கள் எழுதி, பூர்வகலா இதழில் வெளியாகியிருந்த கட்டுரையை முதற் கட்டுரையாக வெளியிடுவதில் மகிழ்ச்சி கொள்கிறோம். பெரிதும் முயன்று திரு. தி. நா. சு. அவர்களைப் பற்றிய பல அரிய தகவல்களைத் திரட்டித் தந்துள்ள கலாநிதி கைலாசபதி அவர்கள் மிகச்சிறந்த அறிஞராவார். அவரைப் பெருமைப்படுத்தும் விதத்திலும், அவரது கட்டுரையின் சிறப்பைப் போற்றும் விதத்திலும் கட்டுரையில் எவ்வித மாறுதலும் செய்யாது அப்படியே வெளியிட்டுள்ளோம்.

மதிப்புரைப் பகுதி அடுத்த இதழில் இருந்து வெளியாகும். ஆவணத்தின் வாழ்நாள் உறுப்பினர்கள் எழுதிய நூல்களுக்கு முன்னுரிமை தரப்படும். மதிப்புரை வேண்டுவோர் தாம் எழுதிய நூலின் படிகள் இரண்டினை ஆவண அலுவலக முகவரிக்கு அனுப்பிவைக்கலாம். நூலின் உள்ளீட்டுக்கேற்ப தகுந்த அறிஞர்களைக் கொண்டு மதிப்புரை எழுதப்படும்.

வரலாறு, தொல்லியல், கோயிற்கலைகள், கல்வெட்டியல், இலக்கியம் தொடர்பான கருத்தரங்குகள், மாநாடுகள் நடத்துவோர் ஆவணத்திற்குத் தகவல் தந்தால் அவை பற்றிய செய்திக் குறிப்புகளையும், நிகழ்வுச் சுருக்கவுரைகளையும் ஆவணத்தில் வெளியிடலாம்.

ஆவணத்தை வெளியிடும் பொறுப்பை டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்திடம் ஒப்படைத்த தமிழகத் தொல்லியல் ஆய்வுக்கழக அன்பர்களுக்கு நன்றி தெரிவித்துக்கொள்ளும் அதே நேரத்தில் நாங்கள் இந்தப் பொறுப்பை ஏற்றுக்கொள்ள முதன்மையான காரணமாக இருந்தவர் பொறிஞர் திரு. கொடுமுடி ச. சண்முகன் என்பதை இங்குக் குறிப்பிட்டாக வேண்டும். மையத்தை அடுத்து ஆவணத்திற்கு அதிகமான அளவில் வாழ்நாள் உறுப்பினர்களைச் சேர்த்துத் தந்த பெருமையும் அவருக்கே உரியது.

புதிய கண்டுபிடிப்புகளையும், ஆய்வுக் கட்டுரைகளையும், வழங்கிய ஆய்வாளர்களுக்கும், அவற்றைப் பார்வையிட்டு இதழ் தயாரிப்புக்கு வழிகாட்டிய ஆசிரியர் குழுவினர்க்கும், உதவி ஆசிரியராய் இருந்து இவ்விதழின் உருவாக்கத்தில் பெருந்துணை புரிந்த செல்வி மு. நளினிக்கும், எழுத்து வரைஞர் திரு. மு. ம. கோபாலன், விளம்பரங்கள் பெற்றுத் தருவதில் பெரும் ஈடுபாடுகாட்டிய திரு. செங்குட்டுவன், திருமதி. வாணி செங்குட்டுவன் தம்பதியர், உதவியாளர் திரு. இரா. கண்ணையன் ஆகியோர்க்கும் ஆவணத்தின் நன்றிஉரியது. முனைவர் எ. சுப்பராயலு அவர்களின் வழிகாட்டல், இவ்விதழ் அமைப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் பேருதவியாக இருந்ததை நன்றியோடு குறிப்பிட விழைகிறேன்.

சிறந்ததோர் ஆய்விதழாக ஆவணத்தை அமைத்திடும் எண்ணம் நிறைவேற உங்கள் ஒவ்வொருவரின் ஒத்துழைப்பும் பெரிதும் தேவை. ஆவணத்தின் வளர்ச்சியும் வாழ்வும் உங்கள் கைகளில்தான் உள்ளது. தொடர்ந்து புதிய செய்திகளை ஆய்வறிஞர்களுக்கு ஆவண வழி தாருங்கள். ஆர்வமுடைய அன்பர்கள் அனைவரையும் ஆவணத்தின் வாழ்நாள் உறுப்பினர்களாக்கி உதவுங்கள்.

அன்புடன்,
இரா. கலைக்கோவன்

### கிரந்த எழுத்துக்களும் அவற்றிற்கு நிகரான ஒலிபெயர்ப்புடைய தமிழ் எழுத்துக்களும்

## உயிர் எழுத்துக்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| கிரந்தம் : | 𑌅 | 𑌆 | 𑌇 | 𑌈 |
| தமிழ் : | அ | ஆ | இ | ஈ |
| கிரந்தம் : | 𑌉 | 𑌊 | 𑌋 | 𑍠 |
| தமிழ் : | உ | ஊ | ரு. | ரூ. |
| கிரந்தம் : | 𑌌 | 𑍡 | 𑌏 | 𑌐 |
| தமிழ் : | லு. | லூ. | ஏ | ஐ |
| கிரந்தம் : | 𑌓 | 𑌔 | 𑌅𑌂 | 𑌅𑌃 |
| தமிழ் : | ஓ | ஔ | ० | : |

# உயிர் மெய் எழுத்துக்கள்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கிரந்தம்: | 𑌕 | 𑌖 | 𑌗 | 𑌘 | 𑌙 |
| தமிழ்: | க | க2 | க3 | க4 | ங |
| கிரந்தம்: | 𑌚 | 𑌛 | 𑌜 | 𑌝 | 𑌞 |
| தமிழ்: | ச | ச2 | ச3(ஜ) | ச4 | ஞ |
| கிரந்தம்: | 𑌟 | 𑌠 | 𑌡 | 𑌢 | 𑌣 |
| தமிழ்: | ட | ட2 | ட3 | ட4 | ண |
| கிரந்தம்: | 𑌤 | 𑌥 | 𑌦 | 𑌧 | 𑌨 |
| தமிழ்: | த | த2 | த3 | த4 | ந |
| கிரந்தம்: | 𑌪 | 𑌫 | 𑌬 | 𑌭 | 𑌮 |
| தமிழ்: | ப | ப2 | ப3 | ப4 | ம |
| கிரந்தம்: | 𑌯 | 𑌰 | 𑌲 | 𑌵 | 𑌶 |
| தமிழ்: | ய | ர | ல | வ | ச° |
| கிரந்தம்: | 𑌷 | 𑌸 | 𑌹 | 𑌳 | 𑌕𑍍𑌷 |
| தமிழ்: | ஷ | ஸ | ஹ | ள | க்ஷ |

2, 3, 4 என்பன வர்க்க எழுத்துக்களை ஒலி பெயர்க்கக் குறிக்கப்பட்டுள்ளன. கிரந்தத்தில் கூட்டெழுத்துக்களாக வருபவற்றைப் பிரித்துத் தனித்தனி எழுத்துக்களாகக் கொடுக்கலாம்.

# தொல்லியல் மேருவுக்கு பத்மபூஷண்

தொல்லியல் நாட்டமுடைய அனைவராலும் கே. ஆர். எஸ். என்று அன்பொழுக அழைக்கப்படும் கூத்தூர் இராமகிருஷ்ணன் சீனிவாசன் அவர்களுக்குக் குடியரசுத் தலைவரின் பத்மபூஷண் விருது 24. 3. 1991 அன்று புது தில்லியில் வழங்கப்பட்டது.

31-7-1910 இல் திருச்சியில் பிறந்த திரு. சீனிவாசன் தூய வளனார் தன்னாட்சிக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றிப் பின் புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் காப்பாட்சியராகப் பொறுப் பேற்ற நிலையில் அவரது தொல்லியல் வாழ்க்கை தொடங்கியது. அரிக்கமேடு அகழாய்வுப் பணியும், பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி யாருடன் சோழர் கலை பற்றி செய்த ஆய்வும் அவரைப் புடம்போட் டன. 1946 இல் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையில் உதவி கண்காணிப்பாளராகப் பொறுப்பேற்றவர் துணை மேலாண் இயக்குந ராகப் பணி ஓய்வு பெற்றார்.

இந்தியத் திருநாட்டின் அனைத்துக் கலைச்சின்னங்களையும் நேரிடையாகக் கண்டு ஆய்வுகள் செய்து பல்லவர் குகைக் கோயில்கள், தர்மராஜ ரதமும் அதன் சிற்பங்களும், தென்னிந்தியக் கோயில்கள், புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் போன்ற பல அரிய படைப்புக்களை வழங்கியுள்ள இப்பெருமகனாரின் ஈடுஇணையற்ற சேவைகளைப் பாராட்டி 1991 ஆம் ஆண்டுக்குரிய டாக்டர் மா. இராசமாணிக்கனார் விருதினை டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம் வழங்கிப் பாராட்டியது.

நூற்றுக்கணக்கான தென்னிந்தியத் தொல்லியல் ஆய்வாளர் களுக்கு இன்றும் இவரது இல்லம் ஒரு புனிதத்தலம். தொல்லியல் தொடர்புடைய எந்தத் துறையிலும் எது கேட்டாலும், எப்போது கேட்டாலும், தயங்காது விளக்கி உதவும் இவரது அன்புணர்வும், அருள் நெஞ்சும் போற்றற்குரியன.

தொல்லியல் உலகின் மேருவாய் மதிக்கப்படும் திரு. கூ. ரா. சீனி வாசன் அவர்களே இத்துறையின் சார்பில் பத்மபூஷண் விருது பெற்ற முதல்அறிஞர் ஆவார். இந்தியாவின் சிறந்த விருதைப் பெற்ற இப்பேரறிஞரை ஆவணம் அகமகிழ்ந்து பாராட்டுவதுடன் தமிழகத் தொல்லியல் மற்றும் தொடர்புள்ள துறைகளுக்கு இப்பெரியார் செய்த அருந்தொண்டுகளை நன்றியுடன் நினைத்துப் போற்றுகிறது.

# தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழகம்

தமிழ்நாட்டு வரலாற்றுக்கு அடிப்படைச் சான்றுகளைத் தரும் தொல்லியல் கண்டுபிடிப்புக்கள் பற்றிக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளும் முதன்மையான நோக்கத்துடன் தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழகம் அண்மையில் தொடங்கப்பட்டுள்ளது. 12-5-91 ஞாயிறன்று திருச்சிராப்பள்ளியில் டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்று ஆய்வு மையத்தில் கூடிய கூட்டத்தில் இதற்கு வித்திடப்பட்டது. மேற்படி ஆய்வு மையம், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம், தமிழ்ப் பல்கலைக்கழகம் இன்னும் வேறு சில நிறுவனங்களைச் சேர்ந்த பல தொல்லியல் ஆர்வலர் இக்கூட்டத்தில் இணைந்து இக்கழகத்தைத் தோற்றுவித்துள்ளனர். இதற்குப் பெரிதும் தூண்டுகோலாக அமைந்தவர் டாக்டர் இரா. கலைக்கோவன் என்பதைக் குறிப்பிட வேண்டும்.

அகில இந்திய அளவிலும், தென்னிந்திய அளவிலும் தொல்லியல், வரலாறு, கல்வெட்டியல் முதலிய துறைகள் சார்பாக நாடு தழுவிய கழகங்கள் சில இயங்கி வருகின்றன. ஆந்திரம், பஞ்சாப், மேற்கு வங்காளம் ஆகிய சில மாநிலங்களிலும் அவ்வம் மாநில அளவில் இது போன்ற கழகங்கள் நன்கு இயங்கிக் கொண்டிருக்கின்றன. தமிழ்நாட்டில் மாநிலம் தழுவிய ஓரிரு வரலாற்றுக் கழகங்கள் இருந்தாலும் அவை ஆண்டுக்கு ஒருமுறை ஓரிரு நாள் கூடிக் கலையும் நிலையிலேயே உள்ளன. ஆகவே தமிழ் நாட்டு வரலாற்றாசிரியர், ஆய்வர்களுக்குள் தொடர்ந்து கருத்துப் பரிமாற்றம் ஏற்பட வழியின்றி உள்ளது. இந்நிலையை மாற்றித் தமிழ் நாட்டு வரலாற்றில் ஒரு கிளர்ச்சியை ஏற்படுத்திப் புத்தூட்டம் அளிக்க வேண்டியே இக்கழகம் தொடங்கப்பட்டது.

இக்கழகம் குறைந்தது ஆண்டுக்கு இருமுறையாவது தமிழ்நாட்டு முக்கிய ஊர்களில் ஒன்றில் ஓரிரு நாள் கூடிக் கருத்தரங்குகள் நடத்தும். அக்கருத்தரங்குகளில் அண்மைக் கால புதிய கண்டுபிடிப்புக்கள் பற்றி விவாதிக்கவும் பழைய செய்திகளுக்குப் புதிய விளக்கம் பெறவும் வகை செய்யப்படும்.

இக்கழகம் அரசு நிறுவனங்களோ, பல்கலைக்கழகங்களோ செய்து வரும் தொல்லியல் பணிகளுக்குப் போட்டியாகத் தொடங்கப்படவில்லை. மேற்படி நிறுவனங்களின் கடமைகளைச் சிறிது பகிர்ந்து கொள்வதோடு, அவற்றுக்கு உறுதுணையாகவே செயல்படும். 'தரமான தமிழக வரலாறு' என்றஅடிப்படைக் குறிக்கோளை மையமாக வைத்து எல்லா நிறுவனங்களும் தங்கள் அறிவுச் செல்வங்களை மக்களோடு பகிர்ந்து கொள்ள ஒரு தூண்டுகோலாகவும் இக்கழகம் இயங்கும். இக்

கழகத்தின் சார்பாக 'ஆவணம்' என்ற ஒரு பருவ இதழை வெளியிட முடிவு செய்யப்பட்டுள்ளது.

இங்குத் தொல்லியல் என்பது எழுத்துச் சான்றல்லாத தொல் பொருள்களை மட்டுமே ஆராய்வது என்ற குறுகிய வரையறையைக் குறிக்கவில்லை. தொல்பொருள்கள் மட்டும் உள்ள தொல் பழங்காலம் (pre history), எழுத்துச் சான்றுகள் உள்ள வரலாற்றுக்காலம் (historical times) ஆகிய இரண்டையும் ஒரு சேரக் கருதும் பரந்த வரையறை மேற்கொள்ளப்படுகிறது. ஆகவே பழங்கருவிகள், கலங்கள், கட்டிடச் சின்னங்கள், சிற்பம், ஓவியம், காசு என்ற பல 'தொல்லியல்' சான்றுகளோடு கல்வெட்டுக்கள், பட்டயங்கள், பழஞ்சுவடிகள், இலக்கியங்கள் செவிவழிச் செய்திகள் என்ற யாவற்றையும் தொகுத்து வெளியிடுவதே ஆவணத்தின் குறிக்கோள். எந்தச் சான்றாக இருந்தாலும் மூலச்சான்றுகளுக்கு முதன்மை தரவேண்டும். அவற்றை யாவரும் எளிதில் அணுகிப் பயன்பெற வழி செய்ய வேண்டும். இக்குறிக்கோள்கள் ஈடேறும் வகையில் தமிழகத் தொல்லியல் ஆய்வுக் கழகத்தின் உறுப்பினர்எண்ணிக்கை பல்க எல்லாவற்றானும் உதவ வேண்டும் என்று வரலாற்றார்வலர் யாவரையும் வேண்டுகிறேன்.

அன்புடன்,
எ. சுப்பராயலு
அமைப்பாளர்

## எண்ணங்களை எழுதுங்கள்

ஆவணம் முதல் இதழைப் படிக்கும் அன்பர்கள் இந்த இதழின் அமைப்பு, இதில் இடம் பெற்றிருக்கும் செய்திகள், கட்டுரைகள் ஆகியவற்றைப் பற்றித் தத்தம் கருத்துக்களை எழுதுமாறு வேண்டுகிறோம். புதியனவாகவும், பயனுள்ளவையாகவும் எவ்வெப் பகுதிகளைச் சேர்க்கலாம் என்பதற்கும் வழி காட்டுங்கள். இவ்விதழில் வெளியாகியுள்ள ஆய்வுக் கருத்துக்களுக்கு மாறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும் தெரிவித்தருள்க. ஆவணம் உரியவற்றை வெளியிட்டு மகிழும்.

— ஆர்.

# புதிய கல்வெட்டுகள்

# புதிய கல்வெட்டுகள்

தமிழகம் எங்குமுள்ள தொல்லியல் ஆய்வர்கள் தங்கள் கள ஆய்வு களின்போது கண்டுபிடித்த புதிய கல்வெட்டுகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. இக்கல்வெட்டுகளில் கிரந்த எழுத்துக்கள் அவற்றிற் குரிய ஒலி தரும் தமிழ் எழுத்துக்களில் வர்க்க எண்ணுடன் தரப்பட்டுள் ளன. முதலில் கல்வெட்டு பற்றிய சுருக்கமான தகவலும் பிறகு கல் வெட்டு வரிகளும் என இப்பகுதி அமைகிறது. இப்புதிய கல்வெட்டுக ளுக்கு இவற்றைக் கண்டுபிடித்த ஆய்வர்களே முழுப்பொறுப்பு.

## 1. நாகைக் கல்வெட்டு

பா. ஜெயக்குமார்
ஆய்வாளர், தொல்தொழில் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம்.

இக் கல்வெட்டு தஞ்சாவூர் மாவட்டம், நாகபட்டினம் வட்டம், நாகபட்டினம் நாகநாதர் கோயில் கருவறைப் பின்பக்கச் சுவரில் தனி யாகச் சாய்த்து வைக்கப்பட்டுள்ள கற்பலகையில் உள்ளது. எழுத் தமைப்பைக் கொண்டு கி. பி. 8 - 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கொள்ளலாம். விளக்குக்கான பொற்கொடை பற்றியது. நாகபட்டி னத்தில் இதுவரை கிடைத்துள்ள கல்வெட்டுகளில் இதுவே காலத்தால் முற்பட்டது. இதில் நாகபட்டினத்தின் பெயர் 'நாகை' எனக் குறிப் பிடப்பட்டுள்ளது. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த தேவாரப் பாடல் களில் நாகபட்டினம் 'நாகை' என்றே கையாளப்பட்டுள்ளதை இங்குக் குறிப்பிடலாம்.

1 ... வான் அறுபத்[தெ]
2 ...ஞ்சும் ஏற்றிப் பொன் அறுபது
3 ல் ஆ... கழஞ்சின் வாய் ஒன்றேய் க...
4 . த்த... நிசதி உரிய் நெய் முட்டாமைக் குடுத்தட்டு
5 வோமானோம் பெருங்கடம்பூர் ஸபை$_4$யோம் [முட்டில்] த$_4$
6 ர்மாஸநத்து முன்பு நிற்கிலு நில்லாவிடிலும் எட்டரை
7 முதலாக தண்ட[ம்] ஒட்டினோம் பெருங்கடம்பூர் ஸபை$_4$யோ
8 ம் இவகளேவ எழுதினேன் நாகைப் பெருந்தட்டானாகிய
9 ...வரச்சிதன் துட்டமல்லனேன்.

## 2. அருந்தவபுரம் கல்வெட்டு

இரா. கோவிந்தராஜ்
ஆய்வாளர், கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம்.

தஞ்சாவூர் மாவட்டம், நீடாமங்கலம் வட்டம், அருந்தவபுரம். இவ்வூருக்கு அம்மாபேட்டையிலிருந்து தெற்குத் திசையில் செல்லும் சிறு சாலையில் புத்தூர், கோவில்பத்து கிராமங்களின் வழியாகச் செல்ல வேண்டும். சுமார் 6 கி.மீ. தொலைவு. பேருந்து வசதி கிடையாது. ஊரின் குளக்கரையில் அமைந்துள்ள உலகமாதேவர் கோயில் கருவறை நிலையின் இரு பக்கங்களிலும் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டுக் குரிய அரசன் மூன்றாம் குலோத்துங்க சோழன் (கி.பி. 1187).

இராஜகம்பீரீசுவரம் என்ற சிவன் கோயிலைக் கல்லால் புதுக்கியது பற்றிக் கூறும் இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் சேந்தமங்கலம் முதல் இராசேந்திரசோழனின் கரந்தைச் செப்பேட்டிலும் இடம்பெற்றுள்ளது. இப்பொழுது அவ்வூர் முற்றிலும் அழிந்துவிட்டது.

1 ஸ்வஸ்திஶ்ரீ திரிபுவன சக்ரவர்த்திகள்
2 மதிரை கொண்டருளிய குலோத்துங்க சோழ
3 தேவர்க்கு யாண்டு 10வது
4 நித்தவிநோத வளனாட்டு வீரசோழ வளனாட்டு
5 புத்தூர் ஏறின கலனையாரில் ப[ள்ளி]
6 கொத்தில் கூறு தில்லை நம்பியாந
7 வத்தராய னாடாழ்வார் இவ்வூர்
8 பிடாகை சேந்தமங்கலத்து உடையார்
9 இராஜகம்பீரீஸ்வரமுடையார்
10 கோயில் உபாநந்த்
11 தூபிபரியந்தம் செய்ய
12 அடங்கின...காசு...
13 யிட நிலைப்படி கல்கவி
14 உத்தரமும் [திருக்] கல்வாசலில்
15 கல்கவி உத்தரமும் கோமுகமும்
16 மலையினின்று கொ[டு]வர
17 கல்லடியிழுவை கூலி சூாசு 320
18 பணியாற் செய்து நாட்ட
19 பணிக் கூலி [காசு] 730 கூலியிட்டு
20 இத்தம்மம் செய்தான் தில்லை நம்பியான
21 வத்தராய னாடாழ்வான்.

# 3. அரியூர்க் கல்வெட்டு*

சு. இராசகோபால், வெ. வேதாசலம்,
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை.

மதுரை மாவட்டம், மதுரை வட்டம், அரியூரில், ஊரின் வெளியே வயலோரத்திலுள்ள முனியாண்டவர் பாறை என்ற சிறு குன்றில் வெட்டப்பட்டுள்ளது. பாண்டியன் ஸ்ரீவல்லபன் – மூன்றாம் ஆட்சி யாண்டு (கி. பி. 1124). இரு நாட்டுப் பிரிவுகளின் நில வருவாய் நிர்ணயம் பற்றிய அரச ஆணையைக் கொண்டுள்ளது. நாடு (அல்லது கூற்றம்) இடைக் காலத்தில் அடிப்படை நிர்வாகப் பிரிவாக இருந்தது என்பதற்கு நேரடியாகச் சான்று பகரும் மிகச் சில கல்வெட்டுகளில் ஒன்று என்ற வகையில் இது முக்கியமானதாகும்.

பாண்டி நாட்டில் ஏறக்குறைய நூற்றிருபது நாடுகள் இருந்தன. ஒரு நாடு சுமார் 25 சதுரமைல் பரப்புடையது; பத்துப் பதினைந்து ஊர்களைக் கொண்டது. இந்நாடுகளின் பெயர்கள் பெரும்பான்மை நாடு என்ற விகுதி பெற்றும், சில, கூற்றம், முட்டம், இருக்கை, குளக் கீழ், ஏரிக்கீழ், துண்டம் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றை விகுதியாகப் பெற்றும் இருந்தன. ஒவ்வொரு நாட்டிலும் பெரிய நிலக்கிழார்கள் ஒருங்கிணைந்த நாட்டார் என்ற குழு நிர்வாக அமைப்பாக இயங்கி வந்தது. பதினோராம் நூற்றாண்டு வரை அரசு இந்நாட்டார் குழுக் களின் இசைவு பெற்றே நிலவரி நிர்ணயித்தது. ஆனால் அதற்குப் பின் இவற்றின் சக்தி குறையத் தொடங்கியது. அரசும் இவற்றைப் புறக்கணிக்கத் தொடங்கியது. இருப்பினும் அடிப்படை நிலப்பிரிவு என்ற முறையில் தொடர்ந்து பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதி வரை ‘நாடு’ என்னும் அமைப்பு வழக்கில் இருந்தது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திருமடந்தையும் ஜயமடந்தையும் திருப்புயங்களில் இனிதிருப்ப இருநிலமும் பெருமை எய்த எண்டிசைகளும் குடை நிழற்ற மன்ன

2 வரெல்லாம் மரபிலே வருமுடிசூடித் தென்குமரி முதலாகிய திரை கடலே எல்லையாகப் பார் முழுதுங் கயலாணை பரந்து செங்கோலு டந் வ

3 ளர மன்னிய வீரஸிம்ஹாதனத்து உலக முழுதுடையாரோடும் வீற்றிருந்தருளிய மாமுதல் மதிக்குலம் விளங்கிய கோமுதல் கோச்சடைபன்மரான திரிபுவனசக்கரவ

---

* தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைக்கு நன்றி.

4 த்திகள் ஸ்ரீவல்லப தேவற்கு யாண்டு 3 ஆவது நாள் 138நால் பாகனூர்க் கூற்றத்துச் சோழாந்தக சதுர்வேதி மங்கலத்து வீட் டருளிய கோ

5 யிலில் உள்ளாலை அழகிய பாண்டியன் பள்ளிக்கூடத்து பாண்டிய ராஜனில் எழுந்தருளியிருந்து திருவாய் மொழிந்தருளினபடி மேலிரண்ய முட்டமும் கீழிரண்ய முட்டமும்

6 யாண்டு மூன்றாவது முதல் கடமை கொள்கைக்கு மாத்தால் பத்தொன்றாக வீர பாண்டியன் கோலாலளந்து...மேலிரண்ய முட்டத்து ஸ்ரீ வீரபாண்டியனுக்கு கொ

7 ப்ப பதினைஞ்சாங் காலால் நெல்லு பதின் கலனே தூணிப்பதக்கு [கீழிரண்ய] முட்டத்துக் கோலால் நிலமளந்து ஒன்பதின் கலனே தூணிபதக்கும் குறுவை வி

8 ளைந்த நிலத்துக்கு இக்கோலாலுங் காலாலுங் குறுவை் விளைந்த நிலத்துக்கு ஒன்று பாதி கடமை கொள்வதென்றும் துலா விறைத்து விளைந்த நிலத்துக்கு குறுவை வரி

9 செயில் ஒன்று பாதி கொள்வதென்றும் வரகு தினை விளைந்த நிலத்துக்கும் குறுவை புன்செயிற் பாதி [கீழாக] கொள்வதென்றும் புன்செய் விளைந்த நிலத்துக்கு மாத்தால் நாலு மரக்கால் கொள்

10 வதென்றும் நீர் நிலத்துக் குற்றெள் விளைந்த நிலத்துக்கும் மாத்தால் மூன்று மரக்கால் கொள்வதென்றும் நிலமளந்து கடமை கொள்ளத் திருவாய்மொழிந்தருளத் திருமந்திரவோலை தெ

11 ன்னவன் முதலி நாட்டு மூவேந்த வேளார் எழுத்தினாலும் திரு மந்திரவோலைக் கண்காணி மிழலைக் கூற்றத்து......குவலைய [ச]ந்திரனான குமணராய

12 ர் ஒப்பின் படியும் யாண்டு மூன்றாவது நாள் நூற்றெண்பத்தெட்டி னால் புகுந்த திருவாய்க் கேள்விப்படியும் கீழ்க்குண்டாற்று வெளியாற்றூருடையார் அரைய நமச்சிவாயத்தாரான கலிங்க

13 த்தரையன் ...... புரவுவரி திணைக்களத்து நாயக .. ... நாட்டு ஆற்றூருடையார் ...... மானாரரான வீரவிச்சாதிர மூவேந்த வேழா ரும் புரவுவ

14 ரி திணைக்கள நாயகஞ் சொ......காவனூர் கிழவன்......தேர் பொலிய......லம் புரவுவரி திணைக்கள நாயக முத்தூற்று

15 கூற்ற......உள்வரிப்படியாலுங் கல்வெட்டினமைக்கு கண்காணி ......

16 கருமாணிக்கன் ஸ்ரீராமனான......கணக்கு சோழ மண்டலத்து

17 ..............சோழ வள நாட்டு.........சோழ மண்டலத்து விஜைய ராஜேந்திர வளநாட்டு தேவூர்நாட்டு காவனூர் கிழவன் திருவொ

18 ற்றியூர் தேர் பொலிய நின்றானும் கண்காணியாக கல்வெட்டியது இப்படிக்கு அருளிச் செ............உடையார் திருவாய் ...........

---

## 4. அபினிமங்கலம் கல்வெட்டுகள்

முனைவர் கு. திருமாறன், மு. வீராசாமி, மு. நளினி,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சி.

திருச்சியிலிருந்து ஓமாந்தூர், புலிவலம் வழியாகத் துறையூர் செல்லும் சாலையில் புத்தனாம்பட்டியிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது அபினிமங்கலம். இவ்வூர்க் கோயிலில் அமைந்துள்ள பிள்ளையார் கோயிலுக்கும் பெருமாள் கோயிலுக்கும் இடைப்பட்ட பகுதியில் மண்ணில் புதையுண்டிருக்கும் கற்பலகையொன்றின் இருபக்கங்களிலும், பக்கத்திற்கொன்றாய் இக்கல்வெட்டுகள் காணப்படுகின்றன. முதல் கல்வெட்டின் காலம் கி. பி. 1745, சனவரி மாதம் இருபத்தோராம் நாள், திங்கட்கிழமை. இராமேசுவரத்தில் அன்னதானம் செய்வதற்கான செலவுகளுக்காக செட்டிக்குளத்தைச் சேர்ந்த வெங்கடாசல ரெட்டியார் அவனிமங்கலம் என்னும் ஊரை இராமேசுவரத்தைச் சேர்ந்த கிரி தனஷ்குடிநத்திரியன் என்பாருக்குக் கொடையாகத் தந்த தகவலைக் கல்வெட்டு எடுத்துரைக்கிறது.

இக்கல்வெட்டின் மேற்பகுதி ஐந்து பகுதிகளாகக் கோடிட்டுப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற் பகுதியில் அனுமாரின் வடிவமும், இரண்டாம் பகுதியில் கொடிக்கம்பமும், மூன்றாம் பகுதியில் பாயும் நிலையில் காளையொன்றும் காட்டப்பட்டுள்ளன. நான்காம் பகுதியில் நான்கு கைகளுடன் பெண் தெய்வமொன்றுவடிக்கப்பட்டுள்ளது. பின்கைகளில் வலப்புறம் முத்தலை ஈட்டியும் இடப்புறம் ஈட்டியும் பக்கவாட்டில் யாரையோ குத்துகின்ற மெய்ப்பாட்டில் ஓங்கப்பட்டுள்ளன. ஐந்தாம் பகுதியில் லிங்கம் உள்ளது.

# முதற் கல்வெட்டு

1 உ ஸ்ரீராமநாதஸாமி சகாயம் ஸ்வஸ்திஸ்ரீ
2 விசையாப்புதைய சாலிவாகன சகாற்த
3 ம் 1666 கலியுகம் 4845 இதன்மே
4 ல் செல்லா நின்ற ரத்தாட்சி ஸூ தையி மீ" கிஷ்ண பட்சம்
5 அமாவாசி சோம வாரம் ச₀ ரவண நட்செத்திரம் உதைய
6 புண்ணிய காலம் கூடிய சுபதினத்தில் ஸ்ரீமத் ராசா
7 திராச ராசபரமேசுவர வீரபிறதாப ஸ்ரீ வீரவே
8 ங்கடபதி தேவமகாராஸரவர்கள் கனகிரி நகறத்
9 தில் றத்தின சிம்காசனத்துக்கு உடையவர்களாயி பி
10 றிதிவி சாம்ராச்சியம் செயிது வருகிற நாளையி
11 ல் இராமீசுவரம் கிரி தநஷ்குடி னத்திரியனவர்க
12 ளுக்கு சதுற்த்த கோத்திரம் செட்டிகுளம் வல்ல
13 கோல நல்லப்ப ரெட்டியாரவர்கள் பவுத்
14 திரர் லிங்கா ரெட்டியார் அவர்கள் புத்திர
15 ர் ராச ஸ்ரீ வெங்கடாசல ரெட்டியாரவர்கள்
16 எழுதிக் கொடுத்த சிலா சாஸநம் சாஸனம
17 ாவது திருசிராபள்ளி சாவடிக்கி வடக்கு மளவ
18 னாடு வடவளி பத்து பாச்சூர் கூத்தத்துக்
19 கீள் பலாத்து மாகாணத்துக்கு நாயகமான
20 துரையூர் சீமையில் அவனிமங்கலம் கி
21 றாமம் இராமீசுரம் அன்னதான தற்ம
22 த்துக்கும் காசி அன்னதான தற்மத்துக்
23 கும் தாறாபூறுவமாக கொடுத்துயிரு
24 க்குறபடியினாலே ஓமாந்தூர் எல்லைக்கி
25 வடக்கு சாத்தனூர் எல்லைக்[கு]* கிளக்கு கோ
26 ட்டாத்தூர் எல்லைக்கி தெற்கு புதுனாபட்டி
27 எல்லைக்கு மேற்கு யிந்த எல்லை நாங்கனுக்கும் உள்ப
28 ட்ட நஞ்சை புஞ்சை மாவடை மரவடை நிதிநிஷ்
29 சேபூ சல தருபாஷாண ஆஷ்செண ஆகாமி சித்த ச
30 ாத்தியங்களும் அஷ்ட்டபோக தெசஸ்வாமியங்
31 களும் தானாதி விநிவிக்கிறயங்களுக்கு யோ
32 க்கியமாக ஆசந்திறாற்க்க ஸ்தாயியாயி ஆண்
33 டு அனுபவித்துக் கொண்டு தற்மத்தை பரி
34 பாலனம் செயிது வருவாற்களாகவும் யி
35 ந்தபடிக்கி இராமீசுவரம் கிரி தனஷ்குடின
36 த்திரியனவர்களுக்கு சதுர்த்த கோத்திரம் செ
37 சட்டிகுளம் வல்ல கோல நல்லப்ப ரெட்டி

38 யாரவர்கள் புத்திரர் ராஜஸ்ரீவேங்கட
39 ரசல ரெட்டியாரவர்கள் எழுதிக் கொ
40 டுத்த சிலாசாஸநம்।।*
45 வெங்கடாசல ரெட்டியாரவர்கள்
46 யிந்த தற்மத்துக்கு யாதாமொருவற் வாக்கு சகாயம் சரீ
47 ர சகாயம் அற்த சகாயம் செய்தாற்களோ அவர்கள் கா
48 சியிலே அனேகம் சிவபிறதிஷ்ட்டை செயித புண்ணி
49 யங்களை பெருவார்கள் யிந்த தற்மத்துக்கு யாதாமொரு
50 வற் விகர்தம் நினைக்குரார்களோ அவர்கள்
51 காசியிலே காராம் பசுவை கொலை செ
52 யித பாவத்துலே போவார்கள் யிந்
53 த சாஸநம் எழுதினது ராயசம் ரா
54 மலிங்கய்யன் கையெழுத்து பர்வ
55 தவற்த்தினி அம்பாலை மேத ஸ்ரீரா
56 மனாத ஸ்வாமி ஸஹாயம்உ

## இரண்டாம் கல்வெட்டு

இக்கல்வெட்டின் காலம் கி. பி. 1745 பிப்ருவரியாகும். காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் அவர்கட்கு செட்டிகுளத்தைச் சேர்ந்த வெங்கடாசல ரெட்டியார் காசியில் அன்னதானம் செய்வதற்கான செலவுகளுக்காக அவனிமங்கலம் என்னும் ஊரைக் கொடையாகத் தந்த செய்தியை இக்கல்வெட்டு தருகிறது.

இக்கல்வெட்டின் மேற்பகுதியும் ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதற்பகுதியில் லிங்கம் காணப்படுகிறது. இரண்டாம் பகுதியில் நான்கு கைகளுடன் பெண் தெய்வமொன்று முன்பு சொல்லப்பட்ட அதே கோலத்தில் காட்சி தருகிறது. மூன்றாவது நான்காவது பகுதிகளில் முறையே பாயும் காளையும், கொடிக்கம்பமும் உள்ளன. ஐந்தாம் பகுதியில் பைரவர் தன் வாகனமான நாயுடன் காட்சி தருகிறார். இவரது வலக்கையில் நெடிய முத்தலை ஈட்டியும் இடக்கையில் தலையோடும் காட்சி தருகின்றன. தலைமுடி புதியதொரு அமைப்பில் காட்டப்பட்டுள்ளது.

1 அன்னபூரணி விசாலாட்சி சகாயம் ஸ்வஸ்திஸ்ரீ விசையாப்புதய சா
2 லிவாகன சகாற்தம் 1666 கலியுகம் 4845
3 யிதின் மேல் செல்லாநின்ற ரத்தாஷ்ச ஹூ பங்குனி மாசம் (27) சுக்கில பட்
4 சமத் திசை குரு வாரம் உத்திரட்டாதி நெட்சத்திரமும் கூடிய சுப
5 தினத்தில் ஸ்ரீமத் ராசாதிராச ராசபரமேசுவர வீரப் பிறதா

*வரி எண் 40 முதல் 44 முடிய நான்கு வரிகளில் ''தா₃ந பாலவியோர் மத்₃யே'' என்று தொடங்கும் சமஸ்கிருத ஓம்படைக்கிளந தெலுங்கு எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

6 ப ஸ்ரீவீரவேங்கடபதி தேவ மகாராயரவர்கள் கனகி
7 ரி நகரத்தில் ரெத்தின சிங்காயனத்துக்கு உடையவ
8 ராயி பிரிதிவி சாம்ராச்சியம் செயிது வருகுற நா
9 ளையில் காசிவாசி தில்லைநாயகத் தம்பிரானவர்க
10 ளுக்குச் சதுர்த்த கோத்திரம் செட்டிகுளம் வல்லகுல
11 நல்லப்ப ரெட்டியாரவர்கள் பவுத்திரரான லிங்க
12 ா ரெட்டியாரவர்கள் புத்திரர் ராஜ ஸ்ரீ வெங்கடாச
13 ல ரெட்டியாரவர்கள் எழுதிக் கொடுத்த சிலா சாசன
14 ம் திருசிராபள்ளி சாவடிக்கு வடகரை மழவ நா
15 டு வடவெளி பத்து பாச்சூர் கூத்த[த்]துக் கீள் பலா
16 த்து மகாணத்துக்கு நாயகமான துறையூ
17 ர் சீமையில் அவனிமங்கலம் யென்கிற கிறாமம்
18 காசியில் அன்னதான தற்ம்மத்துக்கும் ராமீசு
19 வரம் அன்னதான தற்மத்துக்கும் தாரா
20 பூர்வமாயி குடுத்து யிருக்குர படியினாலே
21 ஓமாந்தூர் எல்லைக்கு வடக்கு சா
22 த்தனூர் எல்லைக்கு கிளக்கு கோட்
23 டாத்தூர் எல்லைக்கு தெற்கு புத்தனா
24 பட்டி எல்லைக்கு மேற்கு யிந்த எல்
25 லை னான்கினுக்கும் உள்பட்ட நஞ்சை
26 புஞ்சை மாவடை மரவடை நிதிநிட்
27 க்ஷேப்பூ சல தருபாஷாணம் ஆ
28 ட்சி ஆகாம சீத்த சாத்தியங்களு
29 ம் அஷ்ட்ட போக தேஜஸ்வாமியங்களு
30 ம் தானாதி விநிவிக்கிறயங்களுக்கு யோ
31 க்கியமாக ஆசந்திராற்கஸ்தாயியா
32 ய் ஆண்டனுபவித்துக் கொண்டு
33 தற்ம பரிபாலனம் செய்துக் கொ
34 ள்ளுவார்களாகவும் யிந்தப்படிக்கி
35 காசிவாசி தில்லைனாயக தம்பிரான்
36 அவர்களுக்கு சதுற்த்த கோத்திரம்
37 செட்டிகுளம் வல்லகுல நல்லப்ப ரெ
38 ட்டியாரவர்கள் புத்திரர் லிங்கா
39 ரெட்டியாரவர்கள் புத்திரர் ராஜ
40 ஸ்ரீ வெங்கடாசல ரெட்டியாரவ
41 ர்கள் எழுதிக் கொடுத்த சிலா சாச
42 னம்*

---

*வரி எண் 42-45இல் முன் சொன்ன அதே ஓம்படைக்கிளவி தெலுங்கு எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

46 இந்தப்படி வெங்கடாசல ரெட்டியார்
47 அவர்கள் இந்த தற்மத்துக்கு யாதா
48 மொருவர் வாக்கு சகாயம் சரீர சகாயம்
49 அற்த சகாயம் செயிதபேர்கள் காசியிலே
50 மகா சிவராத்திரியிலே அனேகம் சிவப் பிற
51 திஷ்டை செய்த புண்ணியங்களைப் பெறுவா
52 ர்கள் யிந்த தற்மத்துக்கு யாதாமொருவர்
53 விகர்தம் நினைக்கிற பேர்கள் காசியிலே
54 காராம் பசுவைக் கொண்ண பாவ
55 த்திலே போவார்கள் யிந்த சாசன
56 ம் எழுதினது ராயசம் ராமலிங்கய்
57 யன் கையெழுத்து சிவஸ்ஸஹாயம்.

## மூன்றாம் கல்வெட்டு

வயல் மேட்டில் காணப்படும் கல்தூண் ஒன்றில் இக்கல்வெட்டு காணப்படுகிறது. இக்கல்தூணின் நீளம் 242 செ. மீ. அகலம் 30செ.மீ.

கல்வெட்டு முற்றுப் பெறாதது போல் இருக்கிறது, ஆகாரவல்லவன் என்பதைக் குளத்தின் பெயராகக் கொள்ளலாம். தூம்பு செய்வித்தவன் காரானை உடையான்.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 இக்குளம் ஆ
3 கார வல்ல
4 வந் இத்தூம்
5 பு செய்வித்
6 தாந் காரானை
7 உடையானாந

---

## 5. தீவட்டிபட்டிக் கல்வெட்டு

### வெ. இரா. துரைசாமி, நாமகிரிப்பேட்டை

சேலம் தர்மபுரி தேசிய நெடுஞ்சாலையில் ஓமலூருக்கு வடக்கே சுமார் இருபது கிலோமீட்டர் தொலைவில் உள்ள தீவட்டிப்பட்டிக்கு மேற்கில் இருக்கும் தேர்முட்டிப் பெருமாள் கோயில் வாசல் நிலைகளில் காணப்படும் இக்கல்வெட்டின் காலம் சுமார் பதின்மூன்றாம் நூற்றாண்டாகலாம். அறுபது சிறு வரிகளைக் கொண்டுள்ள இக்கல்வெட்டில் கோயிலுக்குச் சதிர்நெல்லி என்னும் ஊரை இறையிலித் தேவதானமாக தந்த தகவல் கிடைக்கிறது.

1 கோச்ச
2 டபம்மர
3 ான திரி
4 புவன ச
5 க்கரவத்
6 திகள் சிரி
7 சுந்தர ப
8 ாண்டிய
9 தேவற்கி
10 யாண்டு இ
11 ருபத்தொ
12 ன்றாவது
13 கொங்கான வீர
14 சோழ மண்டல
15 த்து முகை நாட்டு
16 பொன்னார் கூ
17 டலில் சீகைலா
18 ய முடையனா
19 யற்கு கண்டிய ே
20 தவரும் வண்ணா
21 வுடையாரும் மு
22 கை நாட்டவரோ
23 ம் சதிர்நெல்லி
24 [யை] தேவதான
25 மாக நீர்வாத்து கு
26 டுத்தோம் நஞ்சை
27 ச புஞ்சை னாப்
28 பாக்[கெ]ல்
29 லையும்
30 கீழ் நோக்கி
31 ன கிணறும்
32 மேல் நோக்கி
33 ன மரமும்த
34 ட்டார்ப் பா
35 ட்டம் தறி
36 இறை ஈழம்பு
37 ஞ்சை கல
38 னை [கண்
39 ணா] லப் ப
40 ணம் உள்ள
41 ாயம் மற்று ெ
42 மப்பேற்பட்ட
43 துவும் சறு
44 வ மாநிய மா
45 க குடுத்தோ
46 ம் இவ்வற
47 த்தைக் கா
48 த்தான் பாதம்
49 எந்தலை
50 மேலே
51 அறத்தை
52 த அழியத்
53 தான் கங்
54 கைக் கரை
55 ரயில் க
56 ாராம் பசுவை
57 வக் கொன்
58 றான் பாவ
59 த்தே புகு
60 வாந்

---

## 6. தாச சமுத்திரம் கல்வெட்டு

### வெ. இரா. துரைசாமி, நாமகிரிப்பேட்டை

ஓமலூருக்கு வடக்கே பதினைந்து கிலோமீட்டர் தொலைவில், தீவட்டிப்பட்டிக்கு அருகில் உள்ள தாசமுத்திரத்தின் ஏரிக்கரைக் கன்னிமார் கோயிலருகே உள்ள பலகைக் கல்லில் இக்கல்வெட்டு காணப்படுகிறது. காலம் கி. பி. 1229. பதினேழு சிறுவரிகளில் அமைந்துள்ள இக்கல்வெட்டால், கச்சிப்பள்ளியில் அண்ணன் தம்பி இருவரும் ஏரியொன்று எடுத்த தகவல் கிடைக்கிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ ராஜராஜ ே
2 சாழ தேவற்கு திருவெ
3 ழுத்திட்டுச் செல்லா நி
4 ந்ற திருநல்லி யாண்டு ப
5 திநொந்றாவது வடபூவாணி
6 ய நாட்டு கச்சிப் பள்ளியி
7 ல் காமிண்டந் பொங்கி
8 லந் அமந்தாந் களியு
9 ம் எந்தம்பி[யு]
10 ம் இவ்விருவேமெ
11 ங்கள் கைய்யால்
12 மணலொழுக்கு இவ்
13 வேரி கட்டிநோம்
14 இவ்விருவோம் இத்த
15 ந்மம் அழிவு படாமற்
16 காத்தாந் காலெந்
17 தலை மேலின

---

# 7. திருத்தலையூர் உடையார் கோயிற் கல்வெட்டுகள்

கி. ஸ்ரீதரன், பதிவு அலுவலர்,
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை திருச்சி.

திருச்சி மாவட்டம் முசிறியிலிருந்து துறையூர் செல்லும் சாலையில் சுமார் 20 கி. மீ. தொலைவில் திருத்தலையூர் என்ற ஊர் உள்ளது. இவ்வூரில் சிவன் கோயில், பெருமாள் கோயில், மாரியம்மன் கோயில்கள் உள்ளன. சிவன் கோயில் சப்தரிஷீசுவரர் கோயில் என அழைக்கப்படுகிறது. இக்கோயில் நுழை வாயிலின் இருபக்கமும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

## (i) மூன்றாம் குலோத்துங்க சோழன் கல்வெட்டு

இக்கல்வெட்டு ''திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ திரிபுவன வீர சோழ தேவர்க்கு'' என்று தொடங்குகிறது. இக்கோயிலில் விளக்கு எரிக்க வத்தராயன் என்ற அரசு அலுவலர் (முதலி) தானமளித்ததைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்திஸ்ரீ திரி | 8 | மைந்த முதலிக |
| 2 | புவனச் சக்கரவ | 9 | ளில்.............. |
| 3 | த்திகள் ஸ்ரீதிரிபு | 10 | ..................... |
| 4 | வன வீர சோழ தே | 11 | [ந] வத்தராய |
| 5 | தவற்கு யாண்டு | 12 | னேன்.............. |
| 6 | 3......... .. ... | 13 | ................... |
| 7 | ..................ச | | |

எதிர்ச்சுவர் (தொடர்ச்சி)

| | | | |
|---|---|---|---|
| 1 | திருவிளக்கு இ | 4 | மாறுவாந் வல் |
| 2 | ட்டேன் வத்தரா | 5 | லவ[ரா]யன் |
| 3 | யனேன் இது | | |

## (ii) இராசராசதேவன் கல்வெட்டு

மூன்றாம் இராசராச சோழனது கல்வெட்டில் இக் கோயில் திருத்தலையூர் உடையார் எழு மருத[ந்] துறை உடைய நாயனார் கோயில் என்று குறிப்பிடப்படுகிறது. மருதமரம் இக்கோயிலின் தலமரமாக இருப்பதை இக்கல்வெட்டு குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். புலியூர் கிழவன் சோழன் பெருமாள் என்பவன் இக்கோயிலில் ஒன்றரை விளக்கு எரிக்க 800 காசு தானமாகக் கொடுத்ததாகவும் குறிப்பிடப்படுகிறது.

1 திரிபுவனச்ச
2 க்கரவத்திகள்
3 ஸ்ரீ இராஜராஜே
4 தவற்கு யாண்டு 30
5 வது திருத்தலையூர் உ
6 டையார் எழுமருதந்
7 துறை உடைய நாய
8 னார் கோயில் [திரு]
9 தலையூர் சிவப்பிராம
10 ணர்...........
11 .........மருத......
12 .........புலியூர் கிழவந்
13 சோழன் பெருமாள்
14 .........இவ்வூர்
15 கைம்மாத்து
16 ........ ங்கங்
17 ......இக்காசு எண்
18 ணூற்றுக்கும் பொ
19 லிசைக்குச் செல்
20 வதாக நாந் எரிக்க
21 கடவேனாக திருவிள
22 க்கு ஒந்றரை
23 இத் திருவிளக்கு
24 சந்திராதித்தவ
25 ரை எரிக்க கடவே
26 னானமைக்கு

---

## 8. கல்பாளையம் கல்வெட்டு

மு. வீரராசாமி, அர. அகிலா, மு. நளினி,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சி.

திருச்சி மாவட்டம், முசிறி வட்டத்தில், குணலையிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் உள்ளது கல்பாளையம். இங்குள்ள அய்யனார் சிலையருகே காணப்படும் பலகைக் கல்லில் உள்ள கல்வெட்டால் சனநாதநல்லூர் காணியுடைய புத்தாம்படையான் பழுவேட்டரையன் என்பார் பெருவாய்க்கால் வெட்டி, குளங்கள் கண்ட தகவல் கிடைக்கிறது. கீழைத் தலைவாயன் என்பது கிழக்குப் புறம் அமைந்த தலைவாயைக் குறிப்பதாகலாம். கல்வெட்டின் பன்னிரண்டாம் வரியிலும் பதின்மூன்றாம் வரியிலும் உள்ள சில எழுத்துக்கள் தெளிவாக இல்லை. கல்வெட்டின் காலம் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டாகலாம்.

1 குணலை
2 சநநாத ந
3 ல்லூர் காணியு
4 டைய புத்தா
5 ம் படையா
6 ன் பழுவே
7 ட்டரையநே
8 ந் பெருவா
9 க்கால் வெ
10 ட்டிக் குளங்
11 களுங் கண்
12 டு மனம செ
13 ண .
14 [சள] கீழை
15 தலைவா
16 யன் க

---

# 9. கலிங்குக் கல்வெட்டு

மு. வீராசாமி, அர. அகிலா, மு. நளினி,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சி.

திருச்சி மாவட்டம் இரத்தினக்குடியிலுள்ள பெருவளை (பெருவள) வாய்க்கால் படித்துறையில் இக் கல்வெட்டு காணப்படுகிறது. கி.பி. 1797ஆம் ஆண்டில் பொறிக்கப்பட்டுள்ள இக் கல்வெட்டால் திவான் சையது முர்த்திசா உசேன்கான் பகதூரின் பேஷ்கார் அருணாசலம் பிள்ளை என்பார் கலிங்கு ஏற்படுத்திய செய்தியைப் பெறமுடிகிறது. கலிங்கின் அகலம், நீளம் முதலியவை கல்வெட்டிலேயே குறிக்கப்பட்டிருப்பது சிறப்புக்குரிய தகவலாகும். ஆறாம் வரியிலிருந்து ஒன்பதாம் வரி வரை ஒவ்வொரு வரியின் பிற்பகுதியும், புதிய கல்லொன்று படியாக வைத்துப் பூசப்பட்டிருப்பதன் விளைவாக மறைந்துவிட்டன.

இக்கல்வெட்டு காணப்படும் பெருவளை வாய்க்கால் பெருவள வாய்க்கால் என்று அழைக்கப்படுகிறது: திருப்பைஞ்ஞீலி நீலிவனநாத சாமி கோயிலில் இருந்து அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டொன்று இப்பகுதியில் இருந்த பெரியவளவன் வாய்க்காலைக் குறிப்பிடுகிறது. அப்பெரிய வளவன் வாய்க்காலும் இப் பெருவள வாய்க்காலும் ஒன்றாக இருக்கலாம்.

1 உ ஶ்ரீராமசயம் உ ஸ்வஸ்திஶ்ரீ சாலிவாகன சகாப்த்த: வருஷம் 1719 கல்லிப்பத்த: 4898க்கு

2 மேல் செல்லா நின்ற காளயுக்தி ௵ ஆவணி மாசம் 1 உதி சுக்குல பஷ்சம் திறதியை செவ்வாய்

3 க் கிளமை உத்திர நஷ்சத்திரம் ஸித்தநாம யோகம் தை துலா காணம் ஸிம்ம லக்கினம் யிந்த சுபதினத்தில் நதுடு நகாம சுபா

4 அசாது கியிலை குதாம் வந்து நியாமத்து நவாபு யிசான முலுகு பாக்தர் அவர்கள் திவான் சயது

5 முற்த்திசா உசேன்கான் பாகதற் அவர்கள் பேஷ்க்கார்றய அருணா சலம் பிள்ளை அவர்கள் நத்துடு

6 னாலா கலிங்கில் கட்டி விச்சது உ இந்த கலிங் ...... மாணம் பொருத்தம் கலிங்கில்

7 அகலம் அடி $123\frac{1}{2}$க்கு நீளம் அடி 248......... கணம்கேட்

8 டைக் கண சீமைக்கி மயித்தர தாரை றச......... [ருசம] 975

9 பச்சை முத்து சேறுவை கார் கட.........

# 10. திருக்கோணம் கல்வெட்டுகள்

இல. தியாகராசன்
வரலாற்றுத்துறை, அரசு கலைக் கல்லூரி, அரியலூர்.

திருக்கோணம், திருச்சிராப்பள்ளி மாவட்டம், அரியலூர் வட்டம். பெரிய திருக்கோணம், செட்டித் திருக்கோணம் என்ற ஊர்களைக் கொண்டது. பெரிய திருக்கோணத்தில் சௌந்திர பெருமாள் கோயிலில் ஐந்து கல்வெட்டுகளும், ஆதிமத்யார்ஜுனேசுவரர் கோயிலில் ஒன்பது கல்வெட்டுகளும், செட்டித் திருக்கோணம் இரணேசுவரர் கோயிலில் மூன்று கல்வெட்டுகளும் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றில் நல்ல நிலையில் உள்ள ஆறு கல்வெட்டுகள் இங்குத் தரப்படுகின்றன. இக் கல்வெட்டுகளிலிருந்து இவ்வூர்கள் சேர்ந்து 11-13ஆம் நூற்றாண்டில் மதுராந்தகபுரம் என்ற பெரிய வணிக நகரமாக இருந்தது என்று தெரிகிறது. சங்கரப்பாடியார் (எண்ணெய் வணிகர்), சாலியர் (நெசவுத் தொழிலும் வணிகமும் செய்வோர்) முதலிய பல்வேறு வணிகர் குழுக்கள் இவ்வூரில் இருந்தன. இவ்வூரின் நகராட்சியைப்பற்றியும் சில செய்திகள் கிடைக்கின்றன.

## (i) செட்டித் திருக்கோணம் இரணேஸ்வரர் கோயில் கல்வெட்டு

இடம்: அர்த்த மண்டபம், கருவறை–வடக்கு, மேற்கு, தெற்குச் சுவர் குமுதம்

மன்னன், ஆட்சியாண்டு: முதலாம் இராசாதிராசன் - 31 (கி.பி.1049)

மதுராந்தகபுரத்து நகர மன்றத்தைச் சேர்ந்தவர் தங்கள் ஊரில் கூறு அல்லது நிலப்பங்கீட்டு முறையில் கருத்து வேறுபாடு ஏற்பட்டதன் காரணமாக அரசுக்கு முறையிட, அவ்வூரை மேற்பார்வை பார்த்துவந்த அரசு அலுவலர் (செம்பியன் சிகாமணிப் பல்லவரையன்) புதிதாக நிலப் பங்கீடு செய்து தந்ததாகவும் அதற்கு நகர மன்றத்தார் உடன்பட்டதாகவும் இக் கல்வெட்டு தெரிவிக்கிறது. இதற்கு இசைவொப்பம் அளித்தவர்களுள் சங்கரப்பாடியர், சாலியர் ஆகியோர் இருந்தனர்.

(இறுதியில் ஒம்படைக் கிளவியாக உள்ள பாட்டு கட்டளைக் கலித்துறையில் உள்ளதென்று புலவர் செ. இராசு கருதுகிறார். ஆனால் ஒரிரு இடங்களில் திருத்தம் தேவைப்படுகிறது).

1-3) ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர்தரு தன்தொங்கல்.........*
ஜெயங்கொண்ட

* 1-3இல் உள்ள மெய்க்கீர்த்தி படிக்கப்படவில்லை.

4 சோழனுயர்ந்த பெரும்புகழ் கோவிராஜகேஸரிவர்மரான ஸ்ரீ ராஜாதிராஜ தேவற்கு யாண்டு முப்பத்தொன்றாவது கடாரங் கொண்ட சோழ வளநாட்டு மதுராந்தக வளநாட்டு மதுராந்தக புரத்து நகரத்தோம் எம்மூர் ஸ்ரீ மதுராந்தகீச்₀வரமுடைய மஹா தேவர் திருமுற்றத்தே கூட்டக் குறைவறக் கூடியிருந்து எங்களூர் முன்பு கூறிட்டு அனுபவித்து எங்களில் சம்மதித்து எங்களூர் ஜீவித முடைய ஸ்ரீமஹிபாலராஜற்கு விண்ணப்பஞ்செய்ய உல...... . கொள்க வென்றருளிச் செய்ய முன்பிற் கூறுதவிர யாண்டு முப்பத் தொன்றாவது தங்களூர் பார்க்கின்ற புல்லாலியுடையான் எறப்புலி விச்சாதிரன் செம்பியந் சிகாமணிப் பல்லவரையன் கூறிடுவித்த கூறே தங்களுக்கு கூறொத்தமைஇல் இக்கூறே கூறாக கொண் டோம் மதுராந்தகபுரத்து நகரத்தோம். இக் கூறழிப்பாரும் கூறழிப்பிப்பாரும் மழியவேண்டுமென்பாருந் திருவாணை எங்க ளூர் மதுரா

5 ந்தகீச்₀வரமுடைய மஹாதேவர்க்கும் இக்கோயில் திருமேனிகளுக் கும் ராஜேந்த்ரசோழ விண்ணகர் அழகிய மணவாளற்கு மிரண சிங்கீச்₀வரமுடைய மஹாதேவர்க்கும் ப்ரஸந்ந தேவற்களுக்கும் நாங்கள் குடுத்த நிலங்கள் கொண்டு தங்களூர் சி₀வப்₃ராமணரும் வைகாநஸரும் எங்களுக்குத் தந்த ப்ரமாணப்படி நிவந்தம் செய் யக் கடவர்களாக இட்ட நிலங்களிறையிலி குடுத்தோம் மதுராந் தக நகரத்தோம், இப்பரிசு கூறழியாமைக்கு திருவாணையே ஆக கல்வெட்ட வாசகஞ் செய்தார்: கோனூருடையான் பட்டாலகனம் பலத்தாடியும் கெங்கனாரான ஜயங்கொண்ட ... ராஜேந்த்ர சோழ பாண்டிய...... செட்டியும் ஐயாறன் செயபாதமும் நாகன் கூத்த னான ராஜாதிராஜ தன்ம செட்டியும் மஹாதேவன் மலையும் தயா......லைத் தத்தனான மதுராந்தகத் தன்ம செட்டியும் அரங்கனாரரும் சேந்தன் சீராளனான விக்கிரம சோழத் தன்ம செட்டியும் ஊரான் மாதேவடிகளுந் திருவிளங்கோ

6 யில் திருவாலந்துறை.....வெண்காடனும் சீராளன் தில்லைக் கூத்தனும்......யம்பி கேசவனான ராஜவல்லபத் தன்ம செட்டியுஞ் சங்கரப்பாடியான்......ங்கனான மதுராந்தக மாயிலட்டியுந் தேசூர் திருவாலியான உத்தம சோழ மாயிலட்டியும் மழபாடி கணபதியும் சாலியர் மழபாடி மாகாளனான செம்பியார் சிகாமணி மாயிலெட் டியும்......மாயிலெட்டியும். காடன் கணவழியான முடிகொண்ட சோழ மாயிலெட்டி எழுத்தாலும் நகரவாரியன் மன்றன்......னான .... வித்தோம் மதுராந்தகபுரத்து நகரத்தோமிப் பரிசு கல்வெட் டெழுதினேன் கரணத்தான் முன்னூற்றுவன் தேவநேன் இவை எந்நெழுத்து. ஆக்கிவைத்தே னறத்தின் றிறம் அறமாயதெல்

லாங் காக்கிற பார்க்கிற தெல்லாம் பொதுவதனாலிதனைக் காக்குமித் தன்மை கடன் பூண்டவரடி யென்றலைமேலொக்க வைத்தேனவ்வக் காலத்துள்ளீர் மடைக்கலமே ஸ்வஸ்திஸ்ரீ அறமறவற்க அறமல்லது துணையில்லை உ

## (ii) பெரிய திருக்கோணம் ஆதி மத்யார்ஜுனேசுவரர் கோயிற் கல்வெட்டுகள்

### முதற் கல்வெட்டு

இடம் : அர்த்த மண்டபம், கருவறை – வடசுவர் முப்பட்டைக் குமுதம்

மன்னன், ஆட்சியாண்டு: இரண்டாம் இராஜேந்திரன் - 3 (கி.பி.1055)

கோயிலில் இரண்டாம் இராஜேந்திரன் எழுந்தருளுவித்த ராஜேந்திர நங்கையார் என்ற துர்க்கைக்கு சங்கரப்பாடி நகரத்தார் சந்திவிளக்கெரிக்கச் செய்த ஏற்பாட்டைப் பற்றியது.

1–5 ஸ்வஸ்திஸ்ரீ திருமருவிய செங்கோல்.........*

6 வீரஸிங்ஹாஸனத்திந் மீது வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி பன்மராந உடையார் ஸ்ரீ ராஜேந்திர தேவற்கு யாண்டு 3-ஆவது

7 கிடாரங்கொண்ட சோழவளநாட்டு மதுராந்தக வளநாட்டு மதுராந்தகபுரத்து மதுராந்தக ஈச்ஂவரமுடையார்

8 கோயில் திருச்சுற்றாலைக்குள்......................

9 ..................ஜேந்த்ர தேவர் துற்கையார் ராஜேந்த்ர நங்.........ஜனனாதப் பெருந்தெருவில்.....................

10 ............டியும் தேசுர மும்மலையாந உத்தமசோழ மாயிலட்டியும்

11 வேம்பந் கண்டனும்.........சீராளன் மஞ்சனும்...........அப்பனும் உள்ளிட்ட சங்கரப்

12 பாடி நகரத்தோம் வைச்சுக் குடுத்த பரிசாவது எங்கள்

13-25** ..................................................

---

* மெய்க்கீர்த்திப் பகுதி படிக்கப்படவில்லை.

** 13-25 வரிகள் படிக்குமாறு இல்லை.

26 க்கு ஸந்தி விளக்கு இருபத்து மூன்று எரிக்கச் செய்து குடுத்தோம் இச்சங்கரப்பாடி நகரத்தோம் இத்தேவர் கையா

27 ல்..................தமாகச் செய்து குடுத்த விளக்கு இந்த துற்கை யார்க்கல்லது எரிப்பிப்பார் திருவாணை இது பந்

28 மாஹேச்ᵒவர ரக்ஷை

## இரண்டாம் கல்வெட்டு

இடம்: கருவறை – மேற்கு, தெற்குச் சுவர் ஜகதி.

மன்னன், ஆட்சியாண்டு: இரண்டாம் இராஜேந்திரன்-3 (கி.பி.1055)

மேற்குறிப்பிட்ட துர்க்கைக்கு திரு அமுது முதலியன படைக்க நகரத்தவர் நிலக்கொடைஅளித்ததைப் பற்றியது. விஜ்ஜயி அர்ச்சனை என்ற சிறப்புப் பூசை குறிப்பிடப்படுகிறது.

1-6 ஸ்வஸ்திஸ்ரீ திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்..............* வீரஸிம்ஹாஸ

7 னத்து வீற்றிருந்தருளிய கோப்பரகேசரிபந்மராந உடையார் ஸ்ரீராஜேந்திர தேவற்கு

8 யாண்டு 3-ஆவது கிடாரங்கொண்ட சோழவளநாட்டு மதுராந் தக வளநாட்டு மதுரா

9 ந்தகபுரத்து நகரத்தோம் எங்களூர் ஸ்ரீ கைலாஸமான மதுராந் தக ஈச்ᵒவரமுடையார் ஸ்ரீகோ

10 யிலிலே கூட்டங் குறைவறக் கூடி இருந்து இத்வேர் ஸ்ரீகோயிலித் துற்கையார் ராஜேந்த்ர நங்கையார்க்கு

11 விஜ்ஜயி அர்ச்சனைக்கு நாங்கள் குடுத்த நிலமாவது சோழகுல வல்லி வதிக்கு மேற்கு சோழகேரள வாய்க்காலு

12 க்கு வடக்கு 1-கண்ணாற்று 3-ஞ் சதிரம் நிலம் [4 மா]வில் வடக்கடைய

13 நிலம் நீக்கி தெற்கடைய...தெற்கடைய க........கூறிட்டால்

14 .......,க்கு தென்கைஇல் கீழ்க்கையே தென் கையே.....

15 ..................................................................

* முதல் ஆறு வரிகளில் உள்ள மெய்க்கீர்த்திப் பாடம் கொடுக்கப்பட வில்லை.

16 கையார் ஸ்ரீராஜேந்த்ரசோழ........ இதன் மேற்கு

17 .........தென்கைய் ந.............

18 ..............உ வளைவு புறவளை.........

19-36* ......................... .............

37 நெல்லு நாழியும் ஆக நாள் 1-க்கு நெல்லு அறுநாழியாக நானூற்று........

38 கினுக்கு நெல்லு அய்......நிலங்கொண்டு இந்நிவந்தஞ் சந்திரா தித்த

39 வரை செலுத்தக் கடவர்களாக இப்பரிசு பிரமாணஞ் செய்து குடுத்தோம் மதுராந்தகபுரத்து நகரத்தோம்

40 இப்பரிசு பணியால் கேசவநான ராஜவல்லபத் தன்ம செட்டியார் வாசகத்தாலும்

41 இந்நகரப் பெருவாரிய........லும் இது னகரக் கணக்கு......னேன் எழுத்து இது துற்கையார்க்கு................

42 நாழியும் ஸந்தி மூன்றுக்கு நெ.........

43 மூந்றினுக்கு நெல்...................

44 மூந்றினுக்கு தயிரமுது நாழி உ

45 2-க்கு அடைக்காயமுதுக்கு...........

---

## மூன்றாம் கல்வெட்டு

**இடம்:** மகா மண்டபத் தென்சுவர்.

**மன்னன், ஆட்சியாண்டு:** விக்கிரம சோழன் - 9 (கி.பி. 1127)

இக்கல்வெட்டு பொறித்த ஆண்டு (கி. பி. 1127) வறட்சியான ஆண்டாக இருந்தது என்றும், அதனால் அரசுக்கு நிலவரி செலுத்தும் பொழுது ஊரில் பிறருக்கு விற்ற மடக்கு நிலம் பத்து போக எஞ்சிய

---

* 19-36 வரிகள் தெளிவாக இல்லை,

எண்பது மாவுக்கு மட்டும் வரி செலுத்த வேண்டும் என்றும், செலுத்தும் வரி மடக்கு நில அளவை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டு மென்றும் நகரத்தவர் முடிவுசெய்தனர். கமுகு பயிரிட்ட நிலங்களுக்கும் சிறிது வரி தள்ளுபடி செய்யவேண்டும் என்று முடிவாயிற்று.

1 ஸ்வஸ்திஸ்ரீ பூமாது புணர புவிமாது வளர நாமாது விளங்க ஜயமா

2 து நிலவத் தன்னிரு பதமலர் மன்னவர் சூட மன்னிய உரிமையில் மணிமுடி சூடிச்

3 செங்கோல் சென்று திசைதொறும் நடப்ப வெங்கலிநீக்கி மெய்யறந் தழைப்ப

4 க் கலிங்கமிரிய கடல்மலை நடப்ப வலங்கொளாழி வரை ஆழி நடாத்தி இ

5 ரு சுடரளவும் ஒரு குடை நிழற்கீழ் முக்கோக்கிழானடிகளோடு செம்பொன் வீரசிம்மாசனத்து வீற்றிருந்தருளிய கோப்

6 பரகேசரிபன்மரான சக்கரவத்திகள் ஸ்ரீ விக்கிரம சோழதேவற்கு யாண்டு 9-ஆவது விக்கிரம சோழ

7 வளநாட்டு மண்ணைகொண்ட சோழவளநாட்டு மதுராந்தக புரத்து ந

8 கரத்தோம் எங்களில் ஸப₄ா வ்யவஸ்தை பண்ணிந படியாவது இவ் வாண்டு வியாதிய

9 ாலே மநிச்சர் மரித்து போநமையாலும் ராஜேந்திரசோழப் பேராறு நீர் வழக்கம்மி

10 ந்றியே கருதிந வண்ணம் பயிர் செய்ய வொண்ணாமையிலும் முந்பு ஸ்வரூபியாய் இறுத்து வ

11 ருகிற மடக்கு மாத் தொண்ணூற்று மாவில் பத்து மாச் செய் அரூபி யார் வாங்கி நிலை நின்ற மடக்

12 கு மாவிலே இறுக்கக் கடவோமாகவும் இறுக்குமிடத்து கார் பசாநம் தந் நிலம் தாந் வேண்

13 டும் பயிர் செய்து மருதாற்றில் கரை கொண்ட இடங்களில் கமுகு நின்ற நிலம் நூறுக் கமுகு கீழெட்டு

14 மா நிலம் மடக்கியே நீக்க கடவோமாகவும் நீக்கி கொழுந்து உள்ள உட்பட்ட பயிர் மு

15 ட்டை வரி கோயிற்றமர் [குடிவாய்] உடந்பட ஒட்டிந காசு மடக்கு மாவிலே இறுக்க கடவ்

16 வோமாகவும் இப்பரிசல்லது இதுக்கு அழிவு சொல்லுவார் திரு வாணை முக்கோற் கிழ

17 ஏநடிகள் ஆணை மறுத்தான் னம் நகர விரோதம் செய்தாரை அக் காலங்களில்

18 ஊரவரே தீர்த்துக்கொள்ளக் கடவோமாகவும் நகர வ்யவஸ்தை பண்ணினோம் மதுராந்தகபு

19 ரத்து நகரத்தோம். இவை நகரம் பணியால் சூலமங்கலமுடையார் கேசவந் நா

20 நூற்றுவனேந் இவை யென் எழுத்து

---

## iii) பெரிய திருக்கோணம் சௌந்தரபெருமாள் கோயிற் கல்வெட்டுகள் முதற் கல்வெட்டு

**இடம்:** கருவறை வடக்கு, மேற்கு, தெற்குச் சுவர் பட்டிகை பீடம்.

**மன்னன், ஆட்சியாண்டு :** அதி ராஜேந்திரன் - 3 (கி.பி.1070)

நகரத்தவர் பெருங்கூட்டம் கூடி அரசனுக்கு வெற்றி வேண்டியும், தங்கள் ஊர்க்கு நன்மை வேண்டியும் கோயிலில் அன்றாட பூசை, விளக்கேற்றல், அயனம், விஷு, கிரகண காலங்களில் விழாக்கள், மடம் ஆகியவற்றுக்கான செலவுகளுக்கு நிலக்கொடை செய்தமை பற்றியது. கொடுத்த நிலங்களின் அளவுகளை முதலில் சாதாரண அளவில் கூறி, அதற்கிணையான 'மடக்கு' அளவைக் கொடுத்திருப்பது கவனிக் கத்தக்கது. மடக்கு என்பது இன்று வழங்கிவரும் 'Standard Land' என்பதற்கு நேரான சொல். அதாவது அரசால் நிர்ணயிக்கப்பட்ட தரத்தை உடைய நிலம்.

1 ஸ்வஸ்திஸ்ரீ திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டல மன்னுயிர் தோறும் இன்னருள் சுரந்து நிறை நிழல் பரப்பி நிற்ப முறை மையிற் செங்கோல் திசைதொறும் செல்லத் தங்கள் குலமுதற்

பருதியின் வலிசேர் புவனிக்கும் ஒற்றையாழி யுலாவ நற்றவத் திரு மலர்ச் செல்வியும் இருநிலப் பாவையும் புணர்ந்து பொதுமை துரந்து தன்னுரிமைத் தேவியராக மார்பினில் சுடர்மணி மகுடம் சூடி நெடுநில மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க வீரமும், தியாகமும் ஆரமெனப் புனைந்து வீரசிம்மாசனத்து உலகமுழு துடையாரோடும் வீற்றிருந்தருளி மாப்புகழ் மனுவுடன் வளர்த்த கோப்பரகேசரிவர்ம்மரான உடையார் அதி ராஜேந்த்ர தேவர்க்கு யாண்டு 3-ஆவது கடாரங்கொ

2 ண்ட சோழவளநாட்டு மதுராந்தக வளநாட்டு மதுராந்தகபுரத்து நகரத்தோம், இவ்வாட்டை சிங்க நாயற்று அபரபக்ஷத்து நாலாந் தியதி சநிக்கிழமை பெற்ற அஸ்வதி நாளன்று, எங்களூர் ராஜேந்த்ர சோழப் பேராற்றங்கரையில் ராஜராஜன் பத்தல் ப[ர]க்கக் கூடின கூட்டமுத்திறமுமிருந்து, ஸக்ரவத்தி ஸ்ரீபுஜங் கள் வர்த்திக்க வேண்டுமென்றும் நம்மூர்க்கு நன்றாகவும், திரு மேற்கோயிலான ஸ்ரீராஜேந்த்ர ஆழ்வாரான அழகிய மணவாளற் கும், ஸ்ரீதேவிக்கும் ஸ்ரீபூமி பிராட்டிக்கும் பெருமாள் முதலியார்க் கும் இறையாழ்வானுக்கும் திருஉத்ஸவ மணவாளற்கும் வெண்ணைக் கூத்தாழ்வானுக்கும்

3 உய்யக்கொண்டாழ்வார்க்கும் திருவடிகளுக்கும் அர்ச்சநாபோஹத் துக்கும் திருச்சென்னடைக்கும் திருவிளக்குக்கும் உத்தரமயனமும் தக்ஷிணமயனமும் ஐப்பசி விஷுவும் சித்திரை விஷுவும் க்3ரஹணங் களுக்கும் திருவிழா மடப்புற முள்ளிட்டு பல நிவந்தங்களுக்கு, நாங்கள் குடுத்த நிலங்களாவன: சோழகுலவல்லி வதிக்கு கிழக்கு சோழ பாண்டிய வாய்க்காலுக்கு வடக்கு முதற்கண்ணாற்று முதற் சதிரநிலன் காலிது ஒன்பதாந்தர மடக்கி நிலன் அரைக்காணி கீழரையும், இவ்வதிக்கு மேற்கு சோழகேரள வாய்க்காலுக்கு வடக்கு இரண்டாங்

4 கண்ணாற்று இரண்டாஞ் சதிர நிலன் காலில் வடக்கடைய நில னிரண்டு மாவிது பதினொன்றாந்தர மடக்கி நிலன் கீழரைக் காலும், இங்கே நாலாங் கண்ணாற்று முதற் சதிர நிலன் காலில் தெற்கடைய நிலன் ஒரு மாவரை இது பதிநொன்றாந்தர மடக்கி நில......, மூன்றாங் கண்ணாற்று முதற் சதிர நிலங் காலிலானை யோடைக்கு மேற்குள்ள நிலத்தில் வடமேற்குச் சார நிலன் ஒரு மாவிது பதினொன்றாந்தர மடக்கி நிலன் கீழிருமாவரையும், சோழகுலவல்லி வதிக்கு மேற்கு முடிகொண்ட சோழ வாய்க் காலுக்கு தெற்கு இரண்டாங் கண்ணாற்று நாலாஞ் சதிர நிலன் காலில் மேற்கடைய நிலம் மாகாணி யிது ஒன்பதாந்தர ம

5 டக்கி நிலன் கீழரையே அரைக்காலும், சோழ சிகாமணி வதிக்கு மேற்கு முடிகொண்ட சோழவாய்க்காலுக்கு தெற்கு முதற் கண்ணாற்று ஆறாஞ் சதிர நிலங் காலில் வடக்கடைய நிலனிருமாவரையிது......தன் கீழாறு மாக்காணியும், தெற்கடைய மாக்காணி யிது எட்டாந்தரமடக்கி நிலன் கீழரையே மாகாணியுமாக நிலன் மூன்று மாக்காணி மடக்கி நிலன் கீழ் முக்காலே அரைக்காலும், வானவன் மாதேவி வதிக்கு மேற்கு முடிகொண்ட சோழவாய்க்காலுக்கு தெற்கு முதற்கண்ணாற்று முதற் சதிர நிலன் காலில் கிழக்கடைய நிலனிரண்டு மாவில் வடக்கடைய நிலன் மா

6 காணிக் கீழ் முக்காலே யொருமாவிது பதினொன்றாந்தர மடக்கி நிலன் கீழ் மூன்று மாக்காணியும், மிவ்வதிக்கு மேற்கு சோழகேரள வாய்க்காலுக்குத் தெற்கு ஐஞ்சாங்கண்ணாற்று இரண்டாஞ் சதிர நிலன் காலில் வடகிழக்கு சார நிலன் காணியரைக் காணிக் கீழரையே ஒன்பதாந்தர மடக்கி நிலன் கீழொன்பது மாக்காணியும் நீக்கி நிலன் நான்கு மா முத்திரிகைக்கீழ் நான்கு மாவிது பதி னொன்றாந்தர மடக்கி நிலன் கீழரையே யரைக்காணி முந்திரி கையுமாக கால் மடக்கி நிலன் கீழ் முக்காலே நான்கு மாக்காணி யரைக்காணியும், வானவன் மாதேவி வதிக்கு மேற்கு சோழகேரள வாய்க்காலுக்கு வடக்கு முதற்கண்ணாற்று

7 இரண்டாஞ் சதிரத்து மேற்கடைய மூந்று மாவில் வடக்கடைய முக்காணி முந்திரிகைக் கீழெட்டுமா முக்காணிக் கீழ் முக்காலே யொருமாவில் கிழக்கடைய நிலன் அரைக்காணிக் கீழ் முக்காலே யொருமாவிது ஆறாந்தரமடக்கி நிலன் கிழக்காலே காணியுமிங்கே இரண்டாங்கண்ணாற்று முதற் சதிரத்து.......மடக்கின நிலனிரண்டு மா முக்காணி யரைக்காணிக் கீழ்ழொருமாவில் தெற்கடைய நிலன் மாகாணி யரைக்காணி முந்தி[ரி]*கைக் கீழ் முக்காணிக் கீழ் முக்காலே யொருமாவில் கிழக்கடைய வீரராஜேந்திரன் திருநந்த வான நிலனொருமா விதைஞ்சாந்தர மடக்கி நிலன் னரைக்காணியும் சோழ சிகாமணி வதிக்கு மேற்கு சோழ பாண்டிய வாய்க்காலுக்கு வடக்கு முத.........

8 நிலன் ஒருமாவிது பதினொன்றாந்தரமடக்கி நிலன் கீழ் மூன்றுமா மு

9 க்காணியும் சந்திராதித்தவற் இதுவேய் தரமாக வித்தரமழிக்கப் பெறாதோமா

10 ய் எங்களூர் ஸாமுதாயமாக விட்டு வாணிகம் செய்யுமிடத்துக்.....

11 தேவர்க்குப் பாதியும் அழகிய மணவாளர்க்குப் பாதியும் எற்றைக்கு

12 ......த்து நகரத்தோமிப்படி கல்வெட்டுக்கு வாசகம் அணிய்யுபி தேசனான ராஜவல்

13 லங் கிழானீச்ஂ வரன் வயிரமேகன் வாசகத்தாலும் சங்கரப்பாடி யான் சூர ஆடவல்லானா.........*

## இரண்டாம் கல்வெட்டு

இடம் : அர்த்த மண்டபத் தென்சுவர்

மன்னன், ஆட்சியாண்டு : இரண்டாம் சடையவர்மன் விக்கிரம பாண்டியன்-4 (கி. பி. 1348)

நகரத்தவர் ஊர் ஏரிகளைத் தூர் எடுத்துப் புதுப்பிப்பதற்குக் கொடுக்கவேண்டிய வரி குறித்துத் தங்களுக்குள் செய்துகொண்ட ஒப்பந்தம். ஒருவேலி நன்செய் நிலமுடையவர்கள் குளத்தில் வரை யறுக்கப்பட்ட குழி நான்கை வெட்டுவதற்கு வரி கொடுக்கவேண்டும். புன்செய்யாகப் பயன்படும் நன்செய் நிலத்துக்கு வேலி ஒன்றுக்கு ஒரு குழி என்று நிர்ணயிக்கப்பட்டது. இவை தவிர, ஏரியில் விளையும் மீன்வருவாய், வாசற்குழி, பேர்ப்பணம் என்ற வரிகளிலிருந்து வரும் வருவாய் ஆகியவற்றையும் ஏரிப் பராமரிப்புக்கே பயன்படுத்துவதென முடிவாயிற்று.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடபன்மர் திருபுவ

2 னச் சக்ரவத்திகள் ஸ்ரீவிக்ரமபா

3 ண்டிய தேவர்க்கு யாண்டு 4-வது

4 ஆவணி மாஸம் மதுராந்தகபுரத்து நகரத்தோம் நகரவ்யவஸ்தை பண்ணின பரி

5 சாவது பழியஞ்சிப் பேரேரி உள்ளிட்ட ஏரிக்குளம் வெட்டுகைக்கு நிச்சயி

6 த்தபடி நன்செய் நிலத்துக்குப் போகத்துப்படி வேலி

7 யொன்றுக்கு நாலு குழியும் நன்செய் நிலத்துப் புன்செய்க்கு வேலி ஒன்

---

* இறுதி வரிகள் சிதைந்துவிட்டன.

8 றுக்கு ஒரு குழியும் இவ்வேரிக்கால் பாசிப் பாட்ட முதலும் வாசற் குழியும் பே

9 ரொன்றுக்கு ஒரு பணமும் ந ..... ய பல மண்டலங்களிலும் இருக்கிற டே

10 பர்களும் பேரொன்றுக்கு ஒரு பணமும் இம்முதல்கள் தண்டுமிடத்து மண்கல

11 ந்தகத்தும் வெண்கலமெடுத்துங் கொள்ளக் கடவதாகவுமிப்படிக்கு முதலானதி

12 லொன்று பாதி பழியஞ்சிப் பேரேரி வெட்டவும் நின்ற ஒன்று பாதி பல ஏரியும் வெட்ட

13 வுமிப்படி சம்மதித்து நகர வ்யவஸ்தை பண்ணினோம் மதுராந்தக புரத்து நகரத்தோம்.

---

## 11. பழங்கூர் மதகுத் தூண் கல்வெட்டு

கொடுமுடி ச. சண்முகன்,
செயற் பொறியாளர், பொதுப்பணித்துறை, விழுப்புரம்.

திருக்கோவலூர் வட்டத்தில் பழங்கூர் ஏரி அய்ரோப்பியப் பொருளாதார உதவியுடன் செப்பனிடப்படுகிறது. அந்த ஏரியில் பழைய மதகின் உள்வாய் இன்றும் ஓரளவு நல்ல நிலையில் உள்ளது. நாழிகை வாயில், சேத்தடி துளைகளுடன் கூடிய மதகு, அதன் இரண்டு தூண்களும் நல்ல நிலையில் உள்ளன. தூணின் மேற்பலகைக்கல் விழுந்துவிட்டது. தூண்களை ஒட்டிய பின்புறச் செங்கல் சுவர் இன்றும் உள்ளது. பூச்சுப் பெறாத பழைய செங்கல் சுவர் கரையிலிருந்து சுமார் 20 அடி உள்வாங்கி அமைந்துள்ளது. புதிய மதகு அருகில் கட்டப்பட்டுள்ளது.

பழைய மதகுத் தூண்களில் ஒன்றில் கல்வெட்டு காணப்படுகிறது. மலையன் மலையனான குலோத்துங்க சோழக் கோவலராசன் என்பவர் திட்டிட்டு வென்றான் என்ற பெயருடைய தூம்பொன்றினை எடுத்த தகவல் இக்கல்வெட்டால் பெறப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்வஸ்திஸ்ரீ இ | 7 | மலையநாந |
| 2 | த் தூம்பு திட் | 8 | குலோத்து |
| 3 | டிட்டு வெ | 9 | ங்க சோழக் |
| 4 | ன்றான் இது | 10 | கோவலராஜ |
| 5 | இடுவித்த[ர] | 11 | ன் |
| 6 | ன் மலையந் | | |

---

## 12. சொரையப்பட்டு கல்வெட்டு

கொடுமுடி ச. சண்முகன், விழுப்புரம்.

திருக்கோவலூரிலிருந்து மணலூர்பேட்டை செல்லும் சாலையில் ஏழாவது கிலோமீட்டரில் உள்ள சொரையப்பட்டு கிராமத்தைச் சார்ந்து ஒரு சிறிய ஏரி அமைந்துள்ளது. அதன் முழுகடைப் பகுதியில் ஒரு குண்டுக் கல்லில் உரலொன்று வெட்டப்பட்டுள்ளது.

குண்டுக் கல்லின் உடற்பகுதியில் ஆழமாகக் கொத்தப்பட்ட இரண்டு வரிக் கல்வெட்டு ஒன்று உள்ளது. காலம் எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டாகலாம். ஏரி பிற்காலத்தியது. சலிவன் மகன் பெறிநாரணன் நன்கொடையாக இருக்கலாம். தற்போது வெடிமருந்து வைக்கப் பயன்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ சலிவன் பெ | 2 | றி நாரணந் |

---

## 13. திருவாசி மாற்றுரை வரதீசுவரர் கோயிற் கல்வெட்டுகள்

மு. நளினி, வே. கல்பகம், இரா. கலைக்கோவன்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சி.

திருச்சி முசிறி சாலையில் திருச்சியிலிருந்து பத்து கிலோமீட்டர் தொலைவிலுள்ள சிற்றூரே திருவாசி. இங்குள்ள மாற்றுரை வரதீசு வரர் கோயில் டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தால் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டபோது படியெடுக்கப்படாத பல புதிய கல்வெட்டுகள் பார்வைக்குக் கிடைத்தன. இவற்றுள் ஆறு கல்வெட்டுகள் இப்பகுதியில் இடம் பெறுகின்றன. கல்வெட்டுகளில் இக்கோயில் பாச்சில் திருவாசிராமம் என்று அழைக்கப்படுகிறது.

## முதற் கல்வெட்டு

**இடம்:** மேற்குத் திருச்சுற்று மாளிகையின் வலக்கோடியில் உள்ள திரு முன்னின் வலப்புற நிலை. கல்வெட்டுள்ள இக்கல் தலை கீழாகப் பதிக்கப்பட்டுள்ளது. நிலையில் செய்யப்பட்டிருக்கும் வேலைப்பாட்டால் கல்வெட்டின் ஒரு பகுதி சிதைந்துள்ளது.

**மன்னன்:** முதலாம் பராந்தகன் - 13 (கி.பி. 920)

கோயிலைச் சார்ந்த பதிபாதமூலத்தாரிடமிருந்து பெற்ற செம் பொன்னைக் கொண்டு இறைவனுக்குப் பட்டங்கள் செய்தளிக்கப்பட்ட தகவல் கிடைக்கிறது. இக்காலத்தில் கோயிலில் ஸ்ரீகார்யம் ஆராய்ந் தவர் சேந்தன் நக்கன்.

1 [ஸ்வஸ்தி] ஸ்ரீ [மதி]ரை
2 கொண்ட கோப்பரகே
3 ஸரிபன்மற்கு யா
4 ண்டு 19ஆவது ந[ா]
5 ள் இருநூறு பாச்சி
6 ல் திருவாச்$_0$ராமத்து பெ
7 ருமானடிகளுக்கு சேந்
8 தனக்கன்னாராச்சியி
9 ல் பதிபாத மூலத்தா
10 ரை தளி[க்]*குதண்டி கொண்
11 [ட] செம்பொந் பாச்சில்
12 [க] ல்லால் நிறை ப [தின்]
13 கழஞ்சேய் மூ[ன்று ம]
14 ஞ்சாடியும்....
15 பட்டம் ஒன்று..
16 நாற் கழஞ்சே..
17 க்காலே இரண்டு [மஞ்]
18 சாடியும் ஆகப் [பொ]
19 ன் பாச்சில் கல் [லால்]
20 பதின்ஐங்கழ.....
21 ற் கொட்டி வைத்த [பட்ட]
22 ம் ஒன்று இது [பந்]
23 மாஹேச்$_0$வர ரக்ஷை

## இரண்டாம் கல்வெட்டு

**இடம்:** இரண்டாம் கோபுர வாயிலின் கிழக்குச் சுவர் - வலப்பகுதி (வாகனங்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் இடத்தருகே)

மன்னன் விக்கிரம பாண்டியனா, பராக்கிரம பாண்டியனா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆட்சியாண்டு-5. முகமதியர் படையெடுப் பில் ஊரிலுள்ள தென்னந் தோப்புகள் பாழானதால், கோயில் தானத்தாரும், ஊரவரும் புதிதாகத் தென்னங்கன்றுகளை நடுவதற்கும், கோயில் இறைவனுக்குத் திரு அமுது படைப்பதற்கும் பதியிலார், பணிமக்கள் மனைகள் தவிர்த்துப் பிற மனைகளின் பேரில் வரி தண்ட ஏற்பாடு செய்த தகவல் இக்கல்வெட்டால் கிடைக்கிறது. புள்ளியிட்ட இடங்களில் கல்வெட்டு சிதைந்துள்ளது.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோற்சடைபந்மரான திரிபுவனச்ச ....... கிறம பாண்டிய தேவற்கு யாண்டு அஞ்சாவது .....பூர்வ பக்ஷத்து திகை..

2 நாயற்றுக் கிழமையும் பெற்ற உத்திரத்து நாள் உடையார் திரு வாசிராமமுடைய நாயனார் கோயில் தானத்தாரும் ஊரவரு ..... மூர் தெங்கு துலுக்கன் வெட்டி

3 ப் போகையில் தெங்கு வைக்க வேணுமென்று செ[ா]ல்லுகையில் நம்மூர் நத்தத்[து] மனைகள் காணியுடையார் உடையபடி.......ல தந்தாமுக்குள்ள பலம் வ........

4 களுக்கும் தெங்கு வைக்கவும் நாயனார்க்கு திருவமுது கறியமு துக்கு கோயிற் பரிக்க......பதியிலார் தேவரடியார் சேவை மனைக ......[ப]ணி மக்கள் மனைகளும் கழி

5 த்து உள்ள மனைகளுக்கு ஆண்டொன்றுக்கு மனை[ஒ]ன்றுக்கு பன்னிரெண்டாக வ........ரய குடுக்கவும் திருக்காவணத்து......... மனைகளிலும் ஆண்டெ

6 டான்றுக்கு .......... ளண்டி ....... றை [பூ]ட்ட உடன்படி மனை.. .......

7 ......... இப்படிக்கு ....... வரும் பணியால்.......மங்கலமுடையான் மு.... ....

## மூன்றாம் கல்வெட்டு

இடம் : தெற்குத் திருச்சுற்று மாளிகையின் குமுதம், ஜகதி.

மன்னன் : மூன்றாம் குலோத்துங்க சோழன்

இக்கோயில் நிர்வாகிகள் அனைவரும் ஒருங்கமர்ந்து கோயிலுக் குச் சொந்தமான நிலத்தைப் பெருமங்கலத்தைச் சேர்ந்த சிலருக்கு (உடன் பிறந்தார்?) ஆதிசண்டேசுவரப் பெருவிலையாக விற்றுத் தந்த செய்தியைக் கல்வெட்டு தருகிறது.

1 கோப்பரகேஸரிபன்மரான திரிபுவன சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத் துங்க சோழ தேவற்கு.........ஞாயிற்று அபர பக்ஷத்து ஸத்தமியும் ..... பெற்ற உத்திராடன் னாள்....... ஜ வள நாட்டு ........ உடையார் திருவாசிராமமுடையார் கோயி....... ருளால் இக் கோயில் பதிபாதமூலப் பட்டுடைய பஞ்சாச்சாரிய தே........கோயிற் கணக்கு ......ஸ்ரீ [கார்ய]ஞ் செய்வார்களும் இவ்வனைவோம் சண்

டேசுவர விலை.......டப் பெரு.......பெருமங்கலமுடையான் செந் தாமரைக் கண்ணன் ஏ [ற]ஞ்சொ....... பெருமங்கலமுடை

2 யான் செந்தாமரைக் கண்ணந் பெரியாண்டானுக்கு .....டியான் செந்தாமரைக் க...........செந்தாமரைக் கண்ணந் சூரிய தேவற் கும்..........டையான் சோறுடையான்.........கள் விற்றுக் குடுத்த நில விலையாவண .........திருவாசிராமமுடையார் தேவதானம் பொன்னருளாள நல்லூரில் வீரசோழந் அணுக்கரில் வீதிவிடங்க[ந்] பக்கல்.......கெல்லை ஊர் வாய்க்காலுக்கு வடக்கு மீபாற் கெல்லை வடக்கு......... வடபாற் கெல்லை விக்கு[ந பு]றத்துக் கும் தெற்கும் திருமடை விளாக........விசைந்த பெருநான் கெல்லை உள்பட்ட சொண . பம் முதல் .மநிலம் இருமாவரை....... நிலத்[து] .ல்லமன

3 ... ......றம கிளி மயக்கல் நாலு மாவுக்கு ..,....... தெற்கும்... ...... தெற்கும் வட....... . காலும் திருமடை விளாகத்து மனை........, கெல்லை[ப் பூ] சரை ஒழுக்கைக்கு மேற்கு தென்[பா]ற்......... இவ்விசைந்த பெருநான்கெல்லையும் உள்பட்ட மனை[¼]கோலும் இம்மனைக்கு........ [மேல்] நோக்கின மரமும் கீழ் நோக்கின கிணறும் உடும்போடி ஆமை தவழியுள்பட......ளாந எம்மில் இசைந்த விலைப்பொருள் [ெ]ச கண்டிக்கம

4 ............ஆவணக்களியே காட்டேற்றி.......செலவறக் கொண்டு .........பாச்சில்........வாசிராம பெருந் தெருவி......இந்த விளை நிலமும் மனை இர.......ண்டார் ...... (இதற்குமேல் கல்வெட்டு முழுவதுமாகச் சிதைந்துள்ளது).

## நான்காம் கல்வெட்டு

இடம் : இரண்டாம் கோபுரத்தின் சுவர்ப்பகுதி, குமுதவரி.

செய்தித்தொடர்புடைய இரு கல்வெட்டுப் பகுதிகள் கோயிலின் சுவரிலும் குமுதவரியிலும் வரித்தொடர்பின்றிக் காணக்கிடக்கின்றன. இவை ஒரே கல்வெட்டின் இரு பகுதிகளாகலாம்.

இவ்விரண்டனுள் சுவர்ப்பகுதி கல்வெட்டு இக்கோயில் தளிப் பெண்டுகளும், கோயிற் பணியாளரும் கோயிலில் இருந்து குறிப்பிட்ட அளவு பொன்னை முதலாகப் பெற்று அதற்கு ஈடாக (பொலிசையாக) குறிப்பிட்ட அளவு நெல் அளப்பதாகவும் அதற்குத் தங்கள் பணிக் காணி களையே தலைச்ச மாடாக(பிணையாக) வைப்பதாகவும் ஒப்புக்கொண்

டிருப்பதைச் சுட்டுகிறது, ஆடலில் மிகத் தேர்ந்திருந்த பெண்களுக்கே தலைக்கோலி பட்டம் தரப்பட்டதை இலக்கியமும் வரலாறும் உணர்த்துகின்றன. இக்கல்வெட்டு இக்கோயிலில் இருந்த தலைக்கோலியரை அடையாளம் காட்டுகிறது. முதலாம் இராசராசன் தஞ்சை ராஜராஜீசுவரத்தில் குடியேற்றிய தளிச்சேரிப் பெண்டிருள், பாச்சில் திருஆச்சிராமத்து ஆடல் நங்கையரும் அடங்குவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

குமுதவரிக் கல்வெட்டும் ஏறத்தாழ இதே செய்தியைத் தருகிறது. ஆனால் பணியாளர்கள் திருஅமலீசுவரத்துக் கோயிலைச் சார்ந்தவர்கள். திருஅமலீசுவரம் பாச்சில் கிராமத்தைச் சேர்ந்த பழங்கோயிலாகும். தற்போது இக்கோயில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் பாதுகாப்பில் உள்ளது.

இக்கல்வெட்டுப் பகுதியின் ஓரிடத்தில் குறிக்கப்படும் மூன்று தளிகள் பாச்சிலைச் சேர்ந்த திருஆச்சிராமம், திருஅமலீசுவரம், திருமேற்றளி ஆகிய மூன்று கோயில்களைக் குறிப்பதாகலாம். எழுத்தமைதி கொண்டு இக்கல்வெட்டின் காலத்தைப் பதினோராம் நூற்றாண்டாகக் கொள்ளலாம்.

## i) சுவரிலுள்ள கல்வெட்டுப் பகுதி

1 ண்டு இநிவந்தம் சந்
2 திராதிச்சவல்ச் செய்வ
3 தாகவும் இநிவந்தத்துக்கு
4 முதலாக பொன் கொண்டா
5 ர் இத்தளி தேவனார் நக்கன
6 கம் தன் பங்கேய் தலைச்ச
7 மாடாகக் கொண்ட பொன்ஏழு
8 கழஞ்சினால் அளக்கு நெல் ஏ
9 ழு கலமும் மேற்படியின்
10 நாள் நக்கன் அழகியான
11 நக்கன் சோழ தலைக்
12 கோ[லி] கொண்ட பொன் த
13 ந் பங்கிலேய் தலைச்ச
14 மாடாக கொண்ட பொன்
15 ஐங்கழஞ்சினால் அ
16 ளக்கு நெல்லு ஐஞ்க
17 லமும் மேற்படி நக்கன்
18 மோடியான மும்மு
19 டி சோழ தலைக்கோலி தன்
20 பங்கேய் தலைச்ச மாடாக
21 கொண்ட பொன் பதின் கழ
22 ஞ்சினால் அளக்கு நெல்
23 லு பதிந் கலமும் மேற்
24 படி தளி நக்கன்க் கொற்
25 றமான வீதிவிடங்கத்
26 தலைக்கோலி தன் பங்
27 கேய் தலைச்ச மாடா
28 க கொண்ட பொன் ப
29 திந் கழஞ்சிநாலும்
30 அளக்கு நெல்லு பதிந்
31 கலமும் மேற்படி நக்க
32 நெதிரி தன் பங்கேய் த
33 லைச்ச மாடாக கொண்ட
34 பொன் பதினஞ் கழஞ்சி
35 னால் அளக்கு நெல்லு ப
36 தினைஞ் கலமும் மேற்ப
37 டி நக்கந் ஆவடுதுறை த
38 ந் பங்கேய் தலைச்சமா

39 டாகக் கொண்ட பொன் ஐ
40 ஞ் கழஞ்சினால் அளக்கு
41 நெல்லு ஐஞ்கலமும்
42 மேற்படி நக்கன் மோடி த
43 ந் பங்கேய் தலைச்சமா
44 டாகக் கொண்ட பொன் இருக
45 ழஞ்சரையால் அளக்கு
46 நெல்லு இரு கலவரையு
47 ம் மேற்படி இத்தளி உவ
48 ச்சன் அணுக்கன் பொநன்
49 தன் உவச்ச பங்கேய்த
50 லைச்ச மாடாக கொண்ட பொ
51 ந் பதிந்முற் கழஞ்சரைக்
52 கு அளக்கு நெல்லு [பதி]
53 ந் முக்கலவரை மேற்படி
54 இத்தளி ஸ்ரீ கோயிலு
55 டையாண் சிஞ்கந் பட்
56 டாலகந் சிஞ்கந் சோ
57 ழநும் சிஞ்கந் பதிய
58 ய்யனும் எங்கள் மாண்ப்பங்கேய் தலைச்ச மா
59 டாகக் கொண்ட பொந் பதிந் முக்கழஞ்சிநால்
60 அளக்கு நெல்லு பதிந் முக்கலமும் மேற்ப
61 டி இத்தளி ஸ்ரீ கோயிலுடையாந் நெதிரந்
62 ஐய்யநு நெதிர பரசுராமநும் பொந்நநெ
63 [திர] நும் தங்கள் மாண்ப் பங்கேய் தலைச்ச மாடா
64 க கொண்ட பொன் நாற்க்கழஞ்சிநால் அளக்கு நெ
65 ல்லு நாற்கலமும் மேற்படி தளிக் காளமுடைய
66 ஆச்சந் இளம் பெருமாந் தந் காளப் பங்கேய் த
67 லைச்ச மாடாக கொண்ட பொந் பதிந் கழஞ்சிநா அ
68 ளக்கு நெல்லு பதிந் கலமும் மேற்படி காந்தற்ப்
69 பந் பொந்நையந் தில்லை அழகந் [காள] பங்[கே]
70 ய் தலைச்ச மாடாக கொண்ட பொந் பதிந் [கழஞ்சிநால்]
71 அளக்கு நெல்லு பதிந் கலமும் மேற்படி தளி கா
72 ந்தற்ப்பந் மெய்மட்டி ஐஞூற்றுவந் விழுமியா
73 ந் மெய்மட்டி பங்கேய் தலைச்ச மாடாக கொண்ட பொ
74 ந் இரு கழஞ்சிநால் அளக்கு நெல்லு இரு கலமும் இத்
75 தளி வண்ணக்கு கணக்குடைய இளங்குவந[ன்] தில்
76 லை அழகந் வண்ணக்கப் பங்கேய் தலைச்ச மாடாக கெ
77 காண்ட பொந் பதிநைஞ் கழஞ்சிநால் அளக்கு நெல்

78 லு பதிநைஞ் கலமும் மேற்படி தளி கு......
79 டைக்கநும் கொண்ட திருநெய்யமும்.......
80 டம்பநுமாய் கொண்ட பொந் முக்கழஞ்சிநால் அ
81 ளக்கு நெல்லு முக்கலமும் மேற்படி தளி திரு நிச்ச
82 ல் அரைய்யந் மூந்று தளியில் இவந் க[ா] ணி பங்
83 கேய் தலைச்ச மாடாக கொண்ட பொந் முக்கழஞ்சிநா
84 ல் அளக்கு நெல்லு முக்கலமு மேற்படி தளி
85 தச்சன் காரி இரவி தந் தச்சப் பங்கேய் தலைச்ச மாடா
86 க்கொண்ட பொந் முக்கழஞ்சிநால் அளக்கு நெல்

## ii) குமுதத்திலுள்ள கல்வெட்டுப் பகுதி*

1 ......திருவமலீச்ஂவரத்து ஸ்ரீகோயில்லுடையான் கவுசியந் ஆச்சந் பொந்நந் திருவமலீச்ஂவரத்தில் மாண்பங்க்கும் ஆச்சார்ய போகமும் தலைச்ச மாடாக கொண்டப் பொந் இருபத்தைஞ் கழஞ்சிநால் அளக்கு நெல்லு இருபதைஞ் கலமும் மேற்படி தளி காந்தற்ப்பந் கணவதி கங்

2 ...... நா அளக்கு நெல்லு பதிந் கலமும் [மே]மற்படி தளி விளக்குப் ப[ங்கு]டைய்ய குமரந் அம்பலவந் தந் விளக்கு பங்கேய் தலைச்ச மாடாக கொண்ட பொந் ஐய்ஞ் கழஞ்சிநால் அளக்கு நெல்லு ஐய்ஞ் கலமும் மேற்படி தளி நக்கந் குராவியாந் திருவரங்க தலைக் கோலி தந் மூந்று தளியிலும் பிறந்துடை

3 ......கு நெல்லு இருபதிந் கலமும் மேற்படி தளித் தேவந்......கந் திருவையாறு.........ந தலைக்கோலி கொண்ட பொந் பதிந் கழஞ் சிநால் அளக்கு நெல்லு பதிந் கலமும் இப் பொந்நுக்கு தன் பங்கே தலைச்ச மாடாவதாகவும் நக்கந் கற்பயகவல்லி உடையார்க்கு சிறு காலை பயற்று

## ஐந்தாம் கல்வெட்டு

இடம்: இரண்டாம் கோபுரத்துக் கிழக்குச் சுவர் — அரைத் தூண் களுக்கு இடையிலும் குமுத வரியிலும்.

துடையூர் சபையார் திருவாசிராமம் உடையார்க்குக் கால்வேலி நிலத்தை விற்று இறை நீக்கித் தந்த செய்தி பெறப்படுகிறது. நில விலையாகக் கொண்ட காசு ஐந்து. நிலத்தை இறையிலி செய்தமைக்கு

---

* கல்வெட்டு வரிகளின் முதற் பகுதிகள் கட்டடப் பகுதிக்குள் சிக்கி யுள்ளன. கல்வெட்டு முற்றுப் பெறாமல் உள்ளது.

இறைக்காவலாகக் கொண்ட காசு இருபது. துடையூர் சபையின் உறுப்பினர்கள், மத்யஸ்தன் ஆகியோர் பெயர்கள் உள்ளன. கல்வெட்டின் தொடக்கமும் முடிவும் கிடைக்கவில்லை.

1 அடைய போதாத
2 நிலங் கொள்வதாக
3 வும் ஆக இந்நிலங் கா
4 லுக்குங் கீழ்பாற் கெ
5 ல்லை இத்தேவர் உவ
6 ச்சப் பங்குக்கும் துை
7 டயூர் திருக்கடம்பந்
8 துறை மஹாதேவர் தே
9 வதானம் ஸ்ரீகரண வ
10 யக்கலுக்கு மேர்க்கு
11 தென்பாற் கெல்லை
12 ஸூர்ய்யன் அம்பலத்
13 தாடி நிலத்துக்கு வட
14 க்கு மேல்பாற் கெல்
15 லை எங்களூர் பண்ட
16 வெட்டியாநுக்கு விட்
17 ட நிலத்துக்கு கிழக்கு
18 ம் வடபாற் கெல்லை திரு
19 ச் சிற்றம்பல வாய்க்காலுக்
20 குத் தெற்கும் ஆக இவ்விசை
21 த்த பெருநான் கெல்லையுள்
22 அகப்பட்டு $\frac{1}{4}$ இந்நிலம் கா
23 லும் விற்றுக் குடுத்த விலைப்
24 பொருள் அந்றாடு நற்காசு நெல்
25 லுக்கும் பொன்னுக்கும் செ
26 சல்லி கொண்ட காசு 5 இ
27 க்காசு ஐஞ்சும் ஆவணக்க
28 ளியே கைச் செலக் கொண்டு
29 விற்று விலையாவணம் செ
30 ய்து குடுத்தோம் திருவாசி
31 ராம முடையார்க்குத் து
32 டையூர் ஸபை$_4$யோம்
33 ..... நிலத்துக்கு இதுவேய் விலை யாவணமும் பொருள் மாவறு
34 தி பொருட் சிலவோலை யாவதாகவும் இதுவல்லது வேறு பொருமாவறு

35 திப் பொருட் சிலவோலை காட்டக் கடவரல்லாதாராகவும் இ

36 சைந்து இக்காசு ஐஞ்சும் கொண்டு இந்நிலம் காலும் விற்

37 [று வி]லையாவணஞ் செய்து குடுத்தோம் திருவிச்$_0$ராமமுடை யார்க்கு து

38 டையூர் ஸபை$_4$யோம் இந்நிலத்துக்கு இறைக்காத்துக் குடுக்கக் கடவோமாக கொண்ட காசு 20 இக்காசு இரு[ப]தும் கடவோ மாகவும்

39 இந்நிலத்துக்கு வந்த இறை எச்சோறு குலை குரம்பு செந்நீர் வெட்டி வேதினை

40 காத்துக் குடுக்கக் கடவோமாவதாகவும் இந்நிலத்துக்கு நீர்பாயும் வழி....பாச்சி கொள்ளப் பெறுவாராக

41 வும் அரசறி வெட்டியும் இறையும் சபையோமே காத்து குடுப்பதாக ......இப்பரிசு இந்நிலம் காலு

42 க்கும் விலைக்கும் இறை காவலுக்குமாக கொண்ட காசு 25 இக்காசு இருபத்தைஞ்சும் ஆவணக்களியே கைச் செல்ல

43 க் கொண்டு இந்நிலம் காலும் ச$_0$ந்திராதித்தவல் இறையிலி செய்து குடுத்தோம் திருவாச்$_0$ரமம் உடையார்க்கு இப்படியே கல்

44 லிலுஞ் செம்பிலும் வெட்டிக் கொள்ளப் பெறுவாராகவும் விற்றுக் குடுத்தோம் துடையூர் ஸபை$_4$யோம் ஸபை$_4$யிலிருந்து

45 தேவாகதவன் பணியாலும் கமுதுவன் பூதன் வாமனன் பணிப் பணியாலும் கவிசியன் திரு[வரங்க] தேவ நாராயணன் பணியா லும் பாரதாயன்

46 தாழி அங்கி பணியாலும் கேட்டெழுதினேன் இந்நாட்டு பெருதூர் மத்யஸ்தன் முந்நூற்றுவன் பள்ளிகொண்டான் கருணாகரப் பிரியநேந் இவை [என்] எழுத்து

47 இப்படி அறிவேந் திருவரங்க தேவன் பருவாயநேன்

## ஆறாம் கல்வெட்டு

இடம்: இரண்டாம் கோபுரத்துக் கிழக்குச் சுவர் – வலப்புறம்.

மன்னன்: முதலாம் இராசராசனின் பதினாறாம் ஆட்சியாண்டு (கி. பி. 1001)

உடையார் ராஜராஜதேவரின் அரண்மனைப் பணிப்பெண் ஒருவர் (பெயர் முழுமையாகக் கிடைக்கவில்லை – ஐயாறியான நித்த மாணிக்கம்) இறைவனுக்குத் திரு அமுது வைத்துப் படைக்க வெள்ளியாலான தட்டு ஒன்றைத் தந்த தகவல் கிடைக்கிறது.

1 ஸ்ரீ.....................16 ஆவ
2 து உடை[யார்]ராஜராஜ தே
3 வர் பெரி[ய வேள]த்தில்பெண்
4 டாட்டி சாவ...ஐயாறி
5 யாந பா...க. நித்த மாணி
6 க்கம் திரு[வாசிரா]ம உடையார்
7 க்கு அமு [து செய்] தருள இட்டவெ
8 ள்ளி மண்[டை].. நால் நிறை
9 பாச்சில் கல்...நூற்று நாற்பதிந்
10 கழஞ்சஙை....மேற்படியா
11 ன் இட்ட....ல் ஒன்று நி
12 றையா....கல்லால் ஒ
13 .. ..........................
14 ண்டிநால் நிறைபா...
15 ச் லால் நூற்று ஐய்
16 ... கழஞ்சு இது பதிபா
17 ... ருடை பைஞ்சாற்றி
18 ... [மா]ஹேச்ஃவரரும் ரக்ஷை
19 ... வெக்க அறமல்ல
20 து இல்லைய்

---

## 14. தாழந்தொண்டிக் கல்வெட்டு

எஸ். இராமச்சந்திரன், காப்பாட்சியர்,
மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகம், தஞ்சாவூர்.

தஞ்சை மாவட்டம், சீர்காழி வட்டம், திருமுல்லைவாசலை ஒட்டியுள்ள தாழந்தொண்டி என்ற ஊரிலிருக்கும் சபாநாயகர் தோப்பு என அழைக்கப்படும் திடலின், குளக்கரையிலிருந்து ஒரு கல்வெட்டு தஞ்சாவூர் மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகத்திற்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டுள்ளது. தஞ்சை மராட்டிய அரசர் இரண்டாம் துளஜாவின் ஆட்சிக் காலத்தில் (3—12 –1770) சீர்காழிச் சீமையில் நரசிங்க காடேராவ் என்பவர் நிர்வாகம் செலுத்திக் கொண்டிருக்கும்

போது, புள்ளிருக்கும்வேளூர் (வைத்தீசுவரன் கோயில்) ராயஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க, தாழந்தொண்டியைச் சேர்ந்த சிதம்பரப் படையாச்சி, தாண்டவராய உடையான் ஆகிய இருவரும் சேர்ந்து சபாபதி கட்டளை திருவிளக்குக்குத் தோட்டம் போடுவதற்கு இரண்டாயிரம் குழி நிலம் கொடையாக வழங்கிய செய்தி இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் என்பவர், தருமபுர ஆதீனத்திற்குக் கட்டுப்பட்ட கட்டளைத் தம்பிரான் ஆவார். இவரது உருவச் சிற்பம் வைத்தீசுவரன் கோயிலில் உள்ளது எனத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தால் பதிப்பிக்கப்பட்டுள்ள ''தஞ்சை மராட்டிய கல்வெட்டுகள்'' (பக்கம் 177) மூலமாக அறிகிறோம். நரசிங்க காடேராவ் என்பவர் தஞ்சை அரசர் பிரதாபசிம்மனின் (1736–1763) உறவினரான மல்லார்சி காடேராவின் புதல்வராக இருக்கலாம். கி. பி. 1770 ஆம் ஆண்டு மே மாதத்தைச் சேர்ந்த வைத்தீசுவரன் கோயிற் கல்வெட்டில் மல்லார்சி காடேராவ் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது (மேற்படி நூல் ப. 175). எனவே அதன் பின்னர் மல்லார்சி காடேராவ் மரணம் அடைந்தார் எனக் கருதலாம். 1770 ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்திற்குள் நரசிங்க காடேராவ், சீர்காழிச் சீமையின் நிர்வாகத்தை ஏற்றிருக்க வேண்டும்.

1 ஸ்வஸ்திஸ்ரீ மன் மகாமண்டலேஸுரன் அ
2 ரியராயர் தள விபாடன் பாஷைக்குத்த
3 ப்பு வராத கண்டன் கண்டனாடு கொண்
4 டு கொண்டனாடு குடாதான் சோழ மண்ட
5 ல தாபனாசாரியன் பூற்வ தெஷ்சிண பட்
6 சிம உத்தர சத்த சமுத்திரமும் எம்மண்
7 டலமுங் கொண்டு யீழந்துறை கொ
8 ண்ட ராசாதிராச ராசபரமேசுபர ராசமாத்தி
9 ாண்ட ராசகெம்பீர ராசவரோதய ராசசி
10 ரோமணி ராசாக்கள் தம்பிரான் அசுபதி
11 கெசபதி நரபதி தனபதி தொண்டிய
12 ன் சதுர வித உபாயத்தினாலேயும் விசைய
13 நகர வீர சிங்காதனத்திலும் எழுந்த
14 ருளியிருக்கின்ற ஸ்ரீ கிஷ்ண தேவ மகாரா
15 யருக்கு பின் அளகாபுரியாகிய தஞ்ச நக
16 ராதிபதியாகிய ராயமானிய ராயஸ்ரீ ரே
17 காசி மகாராசா சாயபு அவர்கள் முதல் ரா
18 யமாணிய ராயஸ்ரீ துளசி மகாராசா சாயபு
19 அவர்கள் பிறிதிவி ராஷ்சிய பரிபாலன
20 ம் பண்ணி அருளா நின்ற நாளாவன சாலி

21 யவாகன சகாபிதம் ௵ 1692 கலி
22 யுகாத்தம் 4871 ௵ மேல் செல்
23 லா நின்ற விகுற்தி ௵ காற்த்திகை மீ 21
24 சோமவாரமும் மிறுகசீருஷ நஷ்சத்திரமும்
25 சுபயோக சுபகறணமு[ம்] பெத்த சுபதினத்தி
26 ல் அனாதி ஷ்தலமான சிதம்பரம் சபாபதி
27 கட்டளைக்கு ராயமானிய ராயஸ்ரீ நரசிங்க க
28 ரடேராகு சாயபு அவர்கள் முகாசில் ஸ்ரீ
29 காழிச்சீமை புள்ளிருக்கும் வேளூர் ராய
30 ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தம்பிரானவர்கள்
31 முகாந்தரமாக திருமுல்லை வாயில்
32 மாகான[ம்] தாழந்தொண்டி சிதம்பர ப
33 டையாச்சி தாண்டவராய உடையான்
34 யிருவரும் சம்மதித்து தற்ம தான சாதனப்
35 பட்டயம் எழுதிக் குடுத்த வயனம் என் கி
36 ருமம் பத்துக் கட்டு நிலத்தில் சபாபதி கட்டளை
37 திருவிளக்குக்கு தோட்டம் போட்டுக் குடுத்த
38 நிலம் ஊருக்குத் தெற்கு தாழையடி
39 க்குட்டைக்கு மேற்க்கு வடுகனடப்புக்கு வ
40 டக்கு வழிக்கரை வாய்க்காலுக்கு கிழ
41 க்கு யிது னாங்குள் பட்ட நிலம் பதினா
42 லடிக் கோலால் குழி 2000 யிந்த ரெண்ட
43 ாயிரங்குழி நிலத்தில் யிருக்குற மரந்த
44 லை செல நிதி தரு பாஷாணம் நிதி நிட்
45 செபத்துடனே சந்திராதித்தியாள் உள்ள
46 வரைக்கும் ஆண்டு அனுபவீத்துக் கெ
47 காள்வாராகவு[ம்] யிந்த தற்மத்துக்கு யா
48 தாமொருவர் அகிதம் பண்ணினால்
49 அவரவர் மாதா பிதா குரு கோஹத்தி ப
50 ண்ணின தோழத்திலே போவாராக
51 வும் யிது அறிந்து யாதொரு சாதிக்
52 காறர் தற்மத்தை பரிபாலனம் பண்
53 ணிக் கொண்டு வந்த பேர்கள் புத்
54 திர மித்திர களத்திராதிகளுடனே சுக
55 ஞ்சீவியாக யிருப்பாராகவும் உ
56 யிந்தப்படி சிதம்பர படையாச்சி
57 தாண்டவராய உடையான்.

# 15. புதுக்கோட்டை மாவட்டக் குமிழிக் கல்வெட்டுகள் *

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

புதுக்கோட்டைப் பகுதியில் ஏராளமான குளங்களும், ஏரிகளும் உள்ளன. பெரும்பாலும் இவை ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை. இவற்றுள் பலவற்றின் மதகுக் கட்டடங்களில் அம்மதகுகள் கல்லால் அமைக்கப்பட்ட செய்தி கல்லெழுத்துக்களில் பதிக்கப்பட்டுள்ளது. மதகின் உறுப்புக்கள் குமிழி, குமரிக்கல், மணவாளக்கல் என்று பெயர் கொண்டுள்ளன. கீழே கொடுக்கப்பட்டுள்ள 9-10ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் சிலவற்றில் அரசன் பெயர் இல்லை என்பது கவனிக்கத்தக்கது. இவ்வாசிரியரால் இதுவரை முப்பதுக்கும் மேற்பட்ட குமிழிக் கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஏழு கல்வெட்டுகள் இங்குத் தரப்பட்டுள்ளன.

## முதற் கல்வெட்டு

இடம்: திருமயம் வட்டம், கண்ணனூர் பெரியகுளத்து வடக்கு மடையின் தரையில் கிடக்கும் சதுரக் கல்லில் உள்ள கல்வெட்டு.

காலம்: கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு.

1 கோச்சடை
2 ய மாறற்கு யா
3 ண்டு 10.திர்
4 .வதி...
5 [ண்]டு துறு
6 மா நாட்டுத்
7 துறுமாத்
8 துள் தென்
9 னவன் பராந்தகதரை
10 யனான குன்றனூரனை
11 ச் சாத்தி இவர் மகன்
12 ஸ்ரீ ராசிங்கப் பேரைய
13 னான அரையன் இகழா
14 நிலை கண்ணனூர்க் கு
15 ளத்துக் கட்டின கு[மி].

* இக்கட்டுரையாசிரியர் கண்டுபிடித்த குமிழிக் கல்வெட்டுகளுள் சில ஏற்கனவே ஒரு கட்டுரையில் விவாதிக்கப்பட்டுள்ளன. (காண்க: 'புதுக்கோட்டைப் பகுதியில் குமிழிக் கல்வெட்டுகள்' — தமிழ்க் கல்வெட்டுகள் செய்தனவும், செய்யவேண்டுவனவும் கருத்தரங்கத் தொகுதி, தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறை வெளியீடு, டிசம்பர் 25-26, 1989.)

## இரண்டாம் கல்வெட்டு

**இடம்:** கீரனூரிலிருந்து ஐந்து கி.மீ. தொலைவில் உள்ள குளத்தூர் வட்டம், சேத்திமுத்திப்பட்டிக் கண்மாயின் பழைய மடைத் தூணில் உள்ள கல்வெட்டு.

**காலம்:** கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு.

1 ஸ்ரீ செ
2 வூர் ம
3 ங்கல
4 முடையா
5 ன் குவா
6 வ[ன]க்
7 கன் வெ
8 நல் மண
9 வாட்டி
10 [மு]ணன்
11 எழுவி
12 நாட்டின
13 குமரிக்க
14 ல்

---

## மூன்றாம் கல்வெட்டு

**இடம்:** திருமயம் வட்டத்தில் உள்ள இடையாத்தூர் தெற்குக் கண் மாயின் பெரிய மடைத்தூணில் உள்ள கல்வெட்டு.

**காலம்:** ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ 'கோவிரா
2 ஜகேசரிபந்மர்க்கு யா
3 ண்டு எட்டாவது
4 ஒல்லையூர்க் கூற்ற
5 த்து இடை ஆற்
6 றூர்ப் படாரங்
7 காடன் ஆன
8 கருமாணிக்க
9 ச் செட்டி மக்க
10 ள் காடஞ்சாத்
11 தனும் காடங்
12 கண்டனும்
13 [நிள] பொகப்பட்ட
14 [பே]ர் இக்குமி
15 ழி

---

## நான்காம் கல்வெட்டு

**இடம்:** குளத்தூர் வட்டம் விசலூர் பெரிய கண்மாயின் மேற்கு மடையில் உள்ள கல்வெட்டு.

**காலம்:** கி. பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ..
2 ...[ற]வூர் ப..தந
3 .,டானாயின வி
4 ண்ணனக்கன்
5 [நி]றை சந்திரன்
6 செய்வித்த
7 [கரு]ங்கற் [கூவ]ம்

---

## ஐந்தாம் கல்வெட்டு

இடம் : கொடும்பாளூர் முசுகுந்தேசுவரர் கோயில் அருகிலுள்ள கண் மாயின் தெற்கு மடையில் உள்ள கல்வெட்டு.

காலம் : கி. பி. ஒன்பது அல்லது பத்தாம் நூற்றாண்டு.

1 ஸ்வஸ்திஸ்ரீ ..
2 அஞ்ஞூற்றுவர் ர
3 க்ஷை செய்வித்தான்
4 சாத்தன் னீலன்

---

## ஆறாம் கல்வெட்டு

இடம்: குளத்தூர் வட்டம், உப்பிலிக்குடி பெரிய கண்மாய் மடைத் தூணில் உள்ள கல்வெட்டு

காலம்: கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 குளமங்
3 கலனாட்
4 டு தெங்
5 கங்கு
6 டையா
7 ன் பா[மு]
8 டி எத்
9 த பாத[ம்]
10 ஆன ப
11 லமுடி
12 கொண்
13 ட சோழ
14 ப் பேரை
15 யன்னா
16 ட்டி வித்
17 த மண
18 வாள க[ல்]
19 லு

---

## ஏழாம் கல்வெட்டு

இடம்: குளத்தூர் வட்டம், ராசிபுரம் பெரிய கண்மாயின் நடு மடையில் உள்ள பழைய மடைத்தூணில் உள்ள கல்வெட்டு.

காலம்: கி. பி. பதின்மூன்றாம் நூற்றாண்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ மீமெ
2 சங்கிளி னாட்டு
3 இராஜாச்ம ரிய
4 புரத்து குழுமி
5 [ஏ]ழு அழிவு சேர்
6 த்து இம்மண
7 வாளக் கல்லு
8 செய்வித்தா
9 ந் சேமன்

---

# 16. பெரியார் மாவட்டத்தில் மூன்றாம் வீரவல்லாளனின் புதிய கல்வெட்டுகள்

புலவர். செ. இராசு.
இணைப் பேராசிரியர், கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-613 005.

சிறப்புமிக்க போசள மரபில் மூன்றாம் நரசிம்மன் மகனாகத் தோன்றிய மூன்றாம் வீரவல்லாளன் 1291இல் முடி சூடினான். இதுவரை இம் மன்னன் 1292 முதல் 1342 வரை ஆட்சி புரிந்ததாக எழுதினர்.[1] ஆனால் 1343இல் பொறிக்கப்பெற்ற வல்லாளன் கல்வெட்டு கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.[2] செங்கம் நாரணகுப்பத்தில் வல்லாளனின் 53ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (1344) கிடைத்துள்ளது.[3] எனவே மூன்றாம் வல்லாளன் ஆட்சிக்காலம் 1291 - 1344 வரை ஆகும்.

மூன்றாம் வீரவல்லாளன் 1311இல் தில்லி சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் தளபதி மாலீக்காபூரிடம் தோல்வியடைந்தான். தலைநகர் துவாரசமுத்திரம் அழிக்கப்பட்டது.[4] மீண்டும் 1327இல் தில்லி சுல்தான் துக்ளக்கினால் பல தொல்லைகளை வீரவல்லாளன் சந்தித்தான். இருப்பினும் 1323 முதல் 1341 வரை பெரியார் மாவட்டப் பகுதியில் தொடர்ந்து மூன்றாம் வீரவல்லாளன் கல்வெட்டுகள் பல கிடைத்துள்ளன.

'முகம்மதியப் புயல்காற்று அடிக்கும்போது தலை சாய்ந்து அது அடங்கியவுடன் மீண்டும் சிறிதுகாலத்தில் தலை நிமிர்ந்து கொண்டான்' என்று வீரவல்லாளனைப் பற்றிக் கோவைகிழார் சி. எம். இராமச்சந்திரஞ் செட்டியார் குறிப்பிடுவார்.[5] கொங்கு நாட்டில் இசுலாமியர் படையெடுப்பில் அழிந்த பல கோயில்கள் வல்லாளன் காலத்தில் புதுப்பிக்கப் பட்டன.[6]

போசளர் பற்றி வெளியான சில கல்வெட்டுகளாலும், அண்மைக் காலப் புதிய கண்டுபிடிப்புகளாலும் கீழ்க்கண்ட கருத்துக்கள் அறியப் பட்டுள்ளன.

போசளர்களுக்குக் கொங்கு நாட்டை ஆள ஆட்சிப் பிரதிநிதிகள் இருந்துள்ளனர். அவர்கள் 'பிரதானி', 'மகாபிரதானி' என அழைக்கப்பட்டனர். பல்வேறிடங்களில் பல பிரதானிகள் இருந்துள்ளனர். பிரதானியைவிட மகாபிரதானி உயர்ந்தவன் போலும். வீரவல்லாளன்

காலத்தில் 'மோட குலைய குலகமல மார்த்தாண்ட சித்கரகண்ட இம்மடி இராகுத்தராய மாதப்பத் தண்டநாயகன்' மகா பிரதானியாக இருந்துள்ளான். இவனுக்குப் பின் இவன் மக்கள் வீரசிக்க கேத்தையத் தண்ட நாயகன், சிங்கயத் தண்ட நாயகன், இரேச்சயத் தண்டநாயகன் ஆகியோர் கொங்கு நாட்டின் பல இடங்களில் பிரதானியாக அதிகாரம் செலுத்தியுள்ளனர்[7]. பல்வேறு இடங்களில் தம் கல்வெட்டுக்களையும் பொறித்துள்ளனர். தந்தையின் அதிகாரத்தின் பொழுதும் சில கொடைகளை அளித்துள்ளனர்.

மாதப்பனின் சிறப்புப் பெயர்களால் 'சித்கரகண்டநல்லூர்', 'இராகுத்தராயநல்லூர்' என்று ஊர்களும், 'சித்கரகண்டன்சந்தி', 'இராகுத்தராயன்சந்தி' என்று வழிபாடுகளும் ஏற்பட்டுள்ளன.[8]

நொய்யல் ஆற்றுக்குத் தெற்கேயும் காங்கயம் வட்டத்தில் இராமக்கராம்பாளையத்திலும், தாராபுரம் வட்டத்தில் மறவபாளையத்திலும் (கொற்றனூர்) வீரவல்லாளன் கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன.

பெரியார் மாவட்டத்தில் மூன்றாம் வீரவல்லாளன் கல்வெட்டுக்கள் ஏற்கெனவே திங்களூர் (1307), ஆப்பக்கூடல் (1318), விசயமங்கலம் (1323, 1327), டணாயக்கன் கோட்டை (1323, 1338), சிவகிரி (1329), பெருந்தலையூர் (1335), அறச்சலூர் (1335), கத்தாங்கண்ணி (1336), ஈரோடு (1340), விண்ணப்பள்ளி (1341), ஆதியூர் (1325), குன்னத்தூர் (1325–1343), மறவபாளைம், அந்தியூர் ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன.[9],

## புதியனவாகக் கண்டுபிடிக்கப்பெற்ற கல்வெட்டுகள்

| | வட்டம் | ஊர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1 | பவானி | எண்ணமங்கலம் | 1334 |
| 2 | காங்கயம் | இராமக்கராம்பாளையம் | 1334 |
| 3 | பெருந்துறை | மொசக்குத்திவலசு | 1334 |
| 4 | பவானி | பருவாச்சி | 1335 |
| 5 | பெருந்துறை | மொசக்குத்திவலசு | 1336 |
| 6 | கோபி | கூகலூர் | 1338 |
| 7 | பவானி | பட்டிலூர் | 1338 |
| 8 | ஈரோடு | அறச்சலூர் | — |

இவைகளில் 1, 4, 8 எண்ணுள்ள கல்வெட்டுகள் ஈரோடு கலைமகள் கல்விநிலைய அருங்காட்சியகத்தில் உள்ளன. 2 எண் உள்ள கல்வெட்டு தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையில் உள்ளது.

## எழுத்தில் புதுமை

அறச்சலூர் அறச்சாலையம்மன் கோயிலில் வாயிற்படியாக ஒரு துண்டுக்கல் வைத்துக் கட்டப்பட்டுள்ளது. வீரவல்லாளன் காலத்தில் கரைய வேட்டுவரில் செய்யான் பல்லவராயன் என்பவன் செய்த ஒரு கொடையை அக்கல்வெட்டு குறிக்கிறது. அச்செய்தி அந்நிலைகால் கல்லில் கீழிருந்து மேலாக எழுதப்பட்டுள்ளது. இது மிகவும் புதுமை யான முறையாகும்.

## கல்வெட்டுகள்

## i) பவானி வட்டம், எண்ணமங்கலம். வாவித்தோட்டக் கல்வெட்டு

1 ஸ்வஸ்திசீ
2 வீரவல்லாளதே
3 வர் பிருத்விராஜ்ய
4 ம் பண்ணி அரு
5 ளா நின்ற சீமுக
6 வருஷத்து பங்
7 குனி மாதம் 30
8 தீ வடகரை நா
9 ட்டில் சிலம்பூரி
10 ல் நாயனார் பந்தீ
11 ஸ்வரமுடையார்
12 இறங்கலாய்க்கி
13 டக்கையில் இ
14 வ்விறங்கல் மீ
15 ட்டு வூர்க்கிசைய
16 ம் பண்ணி அ
17 முதுபடிக்கு இ
18 வ்வூரில் நிலத்
19 திலே னாயினா
20 ர் கொல்லர்க்கு
21 நிலம் கீழ்பாற்
22 கெல்லை இட்டே
23 டறிக்கு மேற்கு, இ
24 தன் வடபாற்கெ
25 கல்லை வம்ம
26 கவுண்டன்
27 நிலமான பூமி
28 க்குத் தெற்கு, இத
29 ன் மேல்பாற்
30 க்கெல்லை ஆ
31 ற்றுக்குக் கிழக்
32 கு, இதன் தெ
33 ன்பாற்கெல்
34 லை ஊர் மதிளு
35 க்கு வடக்கு
36 இன்னான்
37 கெல்லைக்
38 குட்பட்ட நி
39 லம் இறை
40 யிலியே
41 போகமா
42 கக் கல்
43 வெட்டிக்கு
44 டுத்தோ
45 ம், இவ்வூர்க்
46 காணியு
47 டைய கு
48 றும்பர்க

49 ளோம்.
50 இப்படி
51 க்கு சிற
52 ம கவு
53 ண்டன் மக
54 ன் இவி
55 பந்தன் எ
56 ழுத்து. இவ
57 ன் தம்பி இர
58 ாசாக் கவுண்
59 டன் எழுத்து.
60 இவன் தம்
61 பி சொண்
62 ணகவுண்
63 டன் எழுத்து.
64 இவன் மகன்
65 பெரியப்பன்
66 குப்பன் எழு
67 த்து. இப்படி
68 க்கு பெரிய
69 மாரு சொண்
70 ணன் எ
71 ழுத்து. இப்
72 படிக்கு பெ
73 ரியமாரு வகு
74 த்தன் எழுத்
75 து. பெரியம
76 கூதன் எழு
77 த்து. காரிரா
78 மன் இராம
79 கவுண்டன்
80 எழுத்து. இப்
81 படிக்கு இவர்
82 கள் சொல்ல
83 இக்கைய் எ
84 ழுதினபடிக்
85 கும் இந்தக் கல்
86 வெட்டுப் பாரி
87 சம் எழுதி
88 னேன் நடு
89 விக் கவுண்
90 டன் பந்திய
91 ப்பனேன். ச
92 ந்திராதித்தவ
93 ரை நடத்திக்
94 குடுப்போமா
95 கவும். இத்த
96 ன்மம் செலு
97 த்துவான் சீ
98 பாதம் தலை
99 மேலே. யித்
100 தை யிற
101 ங்கல் செ
102 ய்வான் வ
103 ழியே
104 ழெச்சம்
105 மறுவா
106 ன்.

---

## ii) காங்கயம் வட்டம் இராமக்கராம்பாளையம் நத்தக்காட்டுக் கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ வீரவல்
2 லாள தேவர் பிருத்விரா
3 ஜ்யம் பண்ணி அருளா நி
4 ன்ற பவ வருஷத்துச் சி
5 த்திரை முதல் ஸ்ரீமது
6 மஹா பிரதானி இம்மடி
7 இராகுத்தராயன் மா
8 தப்ப தண்ணாயக்கர்

9 குமாரன் இரேச்சய
10 தண்ணாயக்கன் காங்
11 கய நாட்டுக் கீரனூர்
12 நாயினார் ஆதிநாதீ
13 ஸ்வரமுடையார்க்கு
14 இவ்வூர் கால்பாடு* கா
15 வலர் நல்லூரான இ
16 ராகுத்தராய நல்லூ
17 ர் சர்வ மானியமா
18 க உதகம் பண்ணிக்
19 குடுத்தேன். இவ்வூர்
20 நன்செய் புஞ்
21 செய் நாற்
22 பாற்கெல்லை
23 யும் தேவகன்மி
24 குடிக்கடைத்து
25 ஊரார்க்குத் தி
26 ருப்பணி செய்வி
27 ப்பானாகவும். இத்த
28 ன்மம் பன்மாஹே
29 ஸ்வர ரகைஷ.

---

## iii) காங்கயம் வட்டம் மொசக்குத்திவலசு வேடன் காட்டுக் கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ வீரவல்லாள தே
2 வர் பிருத்விராஜ்யம் ப
3 ண்ணி அருளாநின்ற ப
4 வ சம்வத்ஸரத்து தை ம
5 ாத முதல் மோட குலைய குல க
6 மல மாத்தாண்ட சித்கர
7 கண்ட இம்மடி ராகுத்த
8 ராய மாதப்ப தெண்ணயக்
9 கர் குமாரர் சிங்கய தெண்
10 ணாயக்கரேன் வடபரிசார
11 நாட்டு சேவூரான செம்பி
12 யன் கிழானடி நல்லூர்
13 திருமேற்கோயில் நாய
14 னார் அமர பெருமாளு
15 க்கு வீரசோழ வளநாட்
16 டு உத்தமசோழச் சதுர்வே
17 திமங்கலம் இன்னா
18 யினார் திருவிடையா
19 ட்டமாக ஸர்வமானிய
20 மும் உதகம்பண்ணி
21 குடுத்தேன். இப்படி செ
22 ம்பிலும் சிலையிலும்
23 வெட்டிக் கொள்வார்கள
24 ாக உதகம் பண்ணிக் குடு
25 த்தேன் சங்கம தெண்ணாய
26 க்கனேன். இது ஸ்ரீ வை
27 ஷ்ணவர் ரகைஷ. பன்
28 மாஹேஸ்வரர் ரகைஷ.

---

## iv) பவானி வட்டம்-பருவாச்சிக் கல்வெட்டு

1 ஸ்ரீ நன்மங்கலஞ் சிறக்க
2 ஸ்வஸ்திஸ்ரீ வீரவல்லாள
3 தேவர் திருவிராச்சியம்

---

* கால்மாடு ?

4 பண்ணியருளாநின்ற பவ வருஷ
5 த்து மாசிமாதம் உ
6 வடகரை நாட்டு பருவாச்சியான அகளங்க
7 நல்லூர்...
8 கள்....

---

## v) மொசகுத்திபாளையம் அமைநாச்சியம்மன் கோயிற் கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ வீ
2 ரவல்லாள
3 தேவர் பிருத்
4 விராஜ்யம்
5 பண்ணி அ
6 ருளாநின்
7 ற தாது சம்
8 வத்சரத்
9 து அற்பசி ம
10 ாதம் வீர
11 சோழவள
12 நாட்டு வ
13 யிரன்பள்
14 ளியான உ
15 த்தமசோ
16 ழச் சதுர்வே
17 திமங்கல
18 த்து தேவ்
19 வும் கோயி
20 லும் இவ்வூ
21 [ர்]

---

## vi) கோபி வட்டம் கூகலூர் மத்தியபுரீசுவரர் கோயிற் கல்வெட்டு

1 .. வல்லாளதேவர் பிருத்விராச்சியம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1260

2 காஞ்சிக்கூவல் நாட்டில் கூவலூரில் வெள்ளாளன் பூமகளில் சொக்கன்.....

3 ஆண்டாருக்கு சந்தியா தீப விளக்கு ஒன்றுக்கு இக்கோயில் காணியுடைய

4 சிவப்பிராமணன் ஆளுடைய நாயக நம்பியார் வசம் குடுத்த பணம் 10. இப்பணம் பத்தும் கொண்டு

5 சந்திராதித்தர்வரை செலுத்தக் கடவதாகவும். இப்படிக்கு இது
6 பன்மாஹேஸ்வர ரகைஷ.

---

## vii) பவானி வட்டம்
## பட்டிலூர்க் கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ நன்மங்கலஞ்சிறக்க
2 வீரவல்லாள தேவற்குப்
3 பிருத்விராஜ்யம் பண்ணி யருளாநின்ற
4 ஈஸ்வர வருஷத்துத் தை மாதம் வடகரை
5 நாட்டுப் பட்டில் ம..வாய் வேட்டுவரில்
6 பிள்ளை....................
7 ........................
8 அத்த மண்டபமும் மகாமண்டபமும் அழிவு
9 சேர்ந்து தூபி பரியந்தமாக சாந்தும்
10 பண்ணி எழுவித்து நிர்மாலியத்
11 தொட்டியும் சமை[ப்பித்தேன்].

---

## viii) ஈரோடு வட்டம்
## அறச்சலூர் அறச்சாலையம்மன் கோயில்
## வாயிற்படிக் கல்வெட்டு

| | | | |
|---|---|---|---|
| 12 | [வர் | 6 | நன்ம |
| 11 | ாளதே | 5 | ன்மம் |
| 10 | வல்ல] | 4 | ண்ட த |
| 9 | கவீர | 3 | யன்க |
| 8 | ஞ்சிறக் | 2 | லவரா |
| 7 | ங்கல | 1 | [பல்] |

---

### குறிப்புகள்

1. Sewell, R., **Historical Inscriptions of South India, Genealogical Tables**, P. 351, (1292 - 1342); இராமச்சந்திரஞ் செட்டியார், சி. எம்., கொங்கு நாட்டு வரலாறு, பக். 58 - 66 (1292 - 1341); Rangacharya V., **A Topographical list of the Inscriptions of the Madras Presidency**, P. 534 (1292 - 1340).
2. ARE, 169 of 1892.
3. ARE, 65 of 1934.
4. சேதுராமன், என்., பாண்டியர் வரலாறு, ப. 179.
5. இராமச்சந்திரஞ் செட்டியார், சி. எம்., மேலது, ப. 66.

6. எண்ணமங்கலம், பட்டிலூர்க் கல்வெட்டுக்களில் இக்குறிப்பு காணப் படுகிறது ; 'இறங்கல் மீட்டு' 'அழிவு சோர்ந்து' என்பன அப்பொருளில் அமைந்த தொடர்கள்.

7. மொசக்குத்திவலசு, இராமக்கராம் பாளையம், டணாயக்கன் கோட்டைக் கல்வெட்டுக்களில் இக்குறிப்புகள் காணப்படுகின்றன.

8. ARE, 588 of 1905 ; 442 of 1906 ; 189 of 1909 ; 174 of 1966 ; SII. V. 223.

9. SITI, I, 258 ; ARE 174 of 1966 ; 552, 588 or 1905 ; 437, 444 of 1906 ; 290 of 1962 ; 373 of 1955 ; 278 of 1962 ; 273, 277 of 1920 ; 14 of 1891 ; 106 of 1936 ; 178 of 1920 ; 153 of 1968 : 190 of 1968.

---

## பாராட்டி வாழ்த்துகிறோம்

14–9–91 சனிக்கிழமை புதுக்கோட்டை மாவட்டம், ஆவுடையார் கோயில் வட்டம், மணமேல்குடியில் நடைபெற்ற குலச்சிறை நாயனார் விழாவில் தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் குன்றக்குடி திருமடத்தின் சார்பில் புலவர். செ. இராசு (இணைப் பேராசிரியர், கல் வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்) அவர்களுக்கு அவர்தம் பணிகளைப் பாராட்டிக் கலைச்செல்வர் என்னும் பட்டம் வழங்கப்பெற்றது.

15 - 9 - 91 ஞாயிற்றுக்கிழமையன்று டாக்டர் மா. இராச மாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கல்வெட்டாய் வாளர் செல்வி மு. நளினி அவர்களுக்குத் திருச்சி நகரத்தின் மிகச்சிறந்த இளைஞர் என்ற விருதையும் பரிசையும் திருச்சி ராக்டவுன் ஜேசீஸ் சங்கம் வழங்கிப் பாராட்டியது. ரோட்டரி சங்க ஆளுநர் திரு. இராகவன் பரிசை வழங்க ஜேசீஸ் சங்க இயக்குநர் திரு. அண்ணாமலை செல்வி. நளினியின் முயற்சி களையும், பணிகளையும், திறமையையும் வியந்து பாராட்டி வாழ்த்தினார்.

தங்கள் தளராப் பணிகளால் புதிய பெருமைகளைப் பெற் றிருக்கும் இவ்விரு கல்வெட்டு வல்லுநர்களுக்கும் ஆவணம் தன் உளம்கனிந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறது.

# இரண்டாம் பகுதி

# 1. ஆடுதுறைச் செப்பேடு

திரு. அ. அப்துல் மஜீது,
கண்காணிப்புத் தொல்லியல் அலுவலர்,
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை.

திருச்சிராப்பள்ளி மாவட்டம், பெரம்பலூர் வட்டம், ஆடுதுறை குற்றம் பொறுத்தேசுவரர் கோயில் செப்பேடு. செயல் அலுவலர் திரு. குஞ்சிதபாதம் மூலம் பெறப்பட்டது. காலம் — 1798 மே 22; 27 செ.மீ. x 16 செ.மீ. அளவுடைய இச்செப்பேட்டில் இரு பக்கமும் எழுதப்பட்டுள்ளது. ஆடுதுறை, பராவாயி என்ற இரு மாகாணங்களில் அடங்கிய பதினேழு ஊர்களைச் சேர்ந்த நிலக்கிழார், உழவு குடிகள், நெய்வோர் மற்றும் பிற தொழில் செய்வோர் இணைந்து கோயிலுக்கு வைத்துக் கொடுத்த மகமை பற்றியது. மகமை என்பது பொதுச் செயல்களுக்காக விரும்பிச் செலுத்தப்படும் ஒரு சிறு சமூக வரி.

முன்பக்கம்

1 சு$_0$ப$_4$மஸ்து ஸ்வஸ்திஸ்ரீ விஜையாப்$_4$யுதயா சா$_0$லிவாக
2 ண ச$_0$காப்$_3$த$_3$ம் 1720 கல்யப்$_3$த$_3$ : 4899
3 யிதின் மேல் செல்லா நின்ன காளயுத்தி நாம
4 ஸம்வத்ஸ்ஸரம் உத்தராயணம் க்$_3$ரீஷ்மறுது ஜ்யேஷ்ட
5 மாஸம் சு$_0$க்ல பக்ஷம் ஸப்தமியும் உத்திர பல்கு$_3$நி
6 நக்ஷத்திரமும் சு$_0$ப$_4$யோக$_3$ சு$_0$ப$_4$கரணமும் பு$_3$த$_4$ந்
7 சு$_0$ப$_4$தினத்தில், ஆடுதுரை குத்தப் பொறுத்தேசுவ
8 ர ஸ்வாமிக்கு, ஆடுதுரை மாகாணம் பராவாயி மாகாணம் மகா
9 செனங்கள் குடியள் பலபட்டடை உள்பட தான
10 சாதன பட்டயம் பண்ணிக் குடுத்தபடி : ஸ்ரீ சோ
11 ழ மண்டலம் கொள்ளடம் காவேரியாத்துக்கு வடக்கு
12 ச்$_0$வேதநதிக்கு தெற்கு வழுதலம்பட்டு சாவடிக்கு
13 மேற்கு பச்சை மலைக்கு கிழக்கு, அரியலூர்ச் சீமை
14 உகளூர்ப்பத்தில்ச் சேந்த ஆடுதுரை மாகாணம்
15 அத்தியூர் உகளூர் கீழ்மாத்தூர் கழனிவாசல் அ
16 ரசலமங்கலம் வடக்கலூர் அகிலாண்டபுர
17 ம் வயலூர் ஆக்கனூர் பாளையம் ஆக கிறாமம் 10
18 பராவாயி மாகாணம் கசுப்பா பராவாயி நன்னை ஆ

19 ண்ட குரும்பூர் இலுப்பூர் கல்லை ஓலப்பாடி வயல்
20 ப்பாடி ஆக கிறாமம் 7 ஆக மாகாணம் 2க்கு கிறாமம் 17 யி
21 ந்த பதிநேழு கிறாமத்தாரும் சம்மதிச்சு, எங்கள் கி
22 றாம சாகுபடியாயிருக்கிற நஞ்சை பிஞ்சை தோ
23 ட்டக்கால் நிலத்தும் பேரிலே காணிக்கி ஒரு பண
24 ம் வீதமும் பலபட்டடை தரிக்கு மாதம் 1க்கு பணம் $\frac{1}{8}$ பணம் வீதமும்
25 தேவாலயம் பிறம்மாலயம் நீங்கலாக அகிலாண்
26 ட கோடி பிரம்மாண்ட நாயகரான ஸ்ரீகுத்தம்
27 பொறுத்தேசுவற சுவாமி அபிஷேக நிவேதனம்
28 திருமாலை திருவிளக்குவாகிய கயிங்கரிய
29 ங்களுக்காக மகமை திட்டம் செயிது தா
30 னம் பண்ணியிருக்குறோமான படியினா
31 லே எங்கள் புத்திற பவுத்திற பாறம்பரி
32 யந்தத்துக்கும் அரமனை அடங்கல் நிலம
33 ளந்த கணக்கு கூடின துகைக்குள்ள மக
34 மை பணம் ஸ்ரீ சுவாமி கயிங்கரியத்துக்கு
35 ஆசந்திறார்க்க ஸ்தாயியாயு கல்லுங் கா
36 வேரியும் உள்ள மட்டுக்கும் தற்மம் நடப்பி
37 ச்சுகொண்டு வருவோமாகவும், யிந்தப் ப
38 டிக்கு நாங்கள் ரெண்டு மகாணத்தாரும்
39 சம்ம[தி]*ச்சு யிந்தப்படிக்கு மகமை தான சா
40 சனம் பண்ணி குடுத்தோம். ஸ்வத்த$_3$வா

பின்பக்கம்

41 ச$_0$ணம் புண்யம் பரத$_3$த்தாநு பாலநம்
42 பரத$_3$த்தாபஹாரேண ஸ்வத$_3$த்தாம் நி
43 ஷ்பலம் ப$_4$வேத்தா$_3$ந பாலயோர் ம
44 த்$_3$த்$_4$யே தா$_3$நாசேயோநு பாலநம்
45 தா$_3$நாத் ஸ்வர்க்$_3$க$_3$மவாப்நோதி பால
46 நாத$_3$ச்ச்யுதம் பத$_3$ம். அத்தியூர் நீலப்ப
47 ரெட்டி செல்லப்புடையான் சுப்பிறமனி
48 ய படையாச்சி முத்துரெட்டியார்
49 உகளூர் அரியாபுள்ளை வயித்தினா

50 த பிள்ளை போந்தைய் நயினார் னாறாய
51 ணன் படையாச்சி கீழ்மத்தூர் அப்பாசமி
52 அய்யா கலிதீத்தா படையாச்சி கழ
53 னிவாசல் மாச்சீ ரெட்டி பாப்பு ரெட்டி கரும்பாயி ப
54 டையாச்சி ஆக்கனூர்பாளையம் கா
55 த்த பெருமாள் நயினார் வயல்ப்பாடி
56 வேலையப்புடையார் பிச்சைபுடையார்
57 வயலூர் வேலாயுதம் பிள்ளை வரகுடை
58 யார் அகிலாண்டபுரம் மகாகணபதிய்ய
59 ன் வெங்கிடசல படையாச்சி அரசலமங்கல
60 ம் அப்பாவய்யன் அளவாய்யன் வடக்கிலூர்
61 முத்து ரெட்டி ராமலிங்கம் ரெட்டி பரவா கோ
62 னேரியாப்புள்ளை வேப்பூர் குட்டிப்புடையர்
63 முத்து ரெட்டியர் கல்லை சுப்பரமணிய நயி
64 னார் ஓலைப்பாட்டி வெங்கிடாசல படையா
65 ச்சி வெங்கிட்டராம பிள்ளை நன்னை கோனே
66 ரியா புள்ளை இருசப்படையாச்சி. யிந்தபடி
67 அனைவரும் சம்மதிச்சு யென்ன யென்னைக்கு
68 கல்லும் காவேரியும் பில்லும் பூமியும் உள்ள மட்டுக்கு
69 யிந்தபடி கயியெழுதிக் குடுத்து சாதனம் பட்டையம்
70 பன்னி அகிலாண்ட கோடி பிராம்மாண்டநாயகர்
71 ஸ்ரீ குத்தம் பொறுத்தேசுவற சுவாமிக்கு யிந்த சாதனு
72 த்துக்கு அழிம்பு சொன்ன பேரும் நினைத்த பேரும் கெ
73 ங்கை கரையிலே காராம் பசுவைக் கொண்ண
74 தோஷத்திலே போக கடவனாகவும்.

## 2. குளிராட்டிக் குகை ஓவியங்கள்

காமராசர் மாவட்டம் வத்ராயிருப்பு என்னும் ஊரிலிருந்து ஐந்து கிலோமீட்டர் தொலைவில் தானிப்பாறை என்ற மலை அடிவாரம் உள்ளது. இது மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ளது. அடிவாரத்திலிருந்து மலையில் ஏறினால் ஒன்பது கிலோ மீட்டர் தொலைவிலுள்ள சுந்தர மகாலிங்கம் கோயிலை அடையலாம். கோயிலிலிருந்து சாப்டூர் செல்லும் பாதையில் ஆறு கிலோ மீட்டர் தொலைவு மலைமேல் நடந்து சென்றால் குளிராட்டி என்ற இடத்தை அடையலாம். இங்கு இயற்கையாய் அமைந்துள்ள குகையொன்றில் இருபது ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. குளிராட்டி ஆற்றின் அருகில் சிறிய குகையொன்றில் ஐந்து ஓவியங்கள் உள்ளன. இவ்வோவியங்கள் பற்றித் தகவல் தந்தவர் மகாலிங்க மலையில் வசிக்கும் திரு. கு. நாகராசன்.

இக்குகை ஓவியங்களுள் ஒன்று காவி நிறத்திலும், மற்றவை யாவும் வெள்ளை வண்ணத்திலும் தீட்டப்பட்டுள்ளன. இந்த ஓவியங்களில் மனித வடிவங்களும், மான், யானை, ஆடு முதலிய விலங்கு வடிவங் களும் காணப்படுகின்றன. ஆடு போன்ற மிருகத்தைப் பிடித்த நிலையில் மனிதன், தாயும் சேயும், விலங்குக் கூட்டங்கள், பல குறி யீடுகள் என இவை அமைந்துள்ளன. பல ஓவியங்கள் சிதைந்த நிலையில் தெளிவற்று உள்ளன. வரலாற்றுக்கு முற்பட்ட மனிதனின் கருத்துக்களையும், கலையுணர்வையும் எடுத்துக் காட்டுவதாக இவ் ஓவியங்கள் அமைந்துள்ளன.

தகவல்: ஆர். பாலச்சந்திரன், திருத்தங்கல்.

---

## 3. நேமத்தான்பட்டியில் தொல்லியல் சின்னங்கள்

காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரி மாணவர்கள் நேமத்தான் பட்டியிலுள்ள தைலமரக் காடுகளில் சுமார் 30 ஏக்கர் பரப்பளவில் கல்திட்டைகள், பதுக்கைகள், கல்வட்டங்கள் முதலியவற்றைக் கண் டறிந்துள்ளனர். நாற்பது சென்டி மீட்டர் அகல வாய்ப்பகுதியும் ஒரு மீட்டர் உயரமும் உடைய முதுமக்கள் தாழியொன்றும் இம் மாணவர் களால் அகழ்ந்தெடுக்கப்பட்டுத் தற்போது தமிழ்க் கல்லூரியில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. இத்தாழியுடன் பல்வேறு கருப்பு, சிவப்பு, கருப்பு சிவப்புப் பானையோடுகள், சிறு மட்கலன்கள், இரும்புப் பொருட்கள் ஆகியனவும் மாணவர்களால் சேகரிக்கப்பட்டுள்ளன. இவற்றைப் பார்வையிட்டு ஆராய்ந்த தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டாய் வாளர் திரு. சு. இராசகோபால், முதுமக்கள் தாழி மணல் கலந்த மண்ணால் செய்யப்பட்டு செந்நிறமாக இருப்பதாக அறிக்கையில் தெரி வித்துள்ளார். இரும்புப் பொருட்கள் மண்வெட்டி அல்லது களைக் கொத்தியின் பகுதிகளாக இருக்கலாம் என்று கருதும் திரு. இராச கோபால், இவற்றின் காலத்தைக் கி.பி. முதல் நூற்றாண்டாக இருக்க லாமென்று கணித்துள்ளார்.

காரைக்குடி செஞ்சைப் பகுதியில் தேனாற்றுப் படுகையில் முது மக்கள் தாழிகள் ஏராளமாக காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இப் பகுதிகளில் முனைப்பான ஆய்வு மேற்கொள்ளப்பட்டால் பெருங்கற் காலப் பண்பாடு பற்றி மேலும் பல செய்திகள் கிடைக்கலாம்.

தகவல்: திருமதி. நா. வள்ளி, காரைக்குடி.

---

# 4. தலைவாய்ச் சான்றோம்

மு. ம. கோபாலன்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்

திருச்சிக்கு மேற்கே, திருச்சி-கரூர் பெருவழியில் ஒன்பது கி. மீ. தொலைவில் அமைந்துள்ள அல்லூரில் உள்ள நக்கன் கோயில் கல்வெட்டுகள் ஒன்றனுள் 'தலைவாய்ச் சான்றோம்' என்ற நுட்பமான பொருள் பொதிந்த சொல் ஒன்று காணக் கிடக்கிறது. அச் சொல் பற்றி இருவகையான பொருள் கூறப்படுகிறது. அவற்றுள் எது பொருத்தமானது, அதற்குத் தகுந்த சான்றுகள் உளவா என்று ஆராய்ந்து பார்த்தலே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

அல்லூர் நக்கன் கோயில் கருவறைத் தென் சுவரில் உள்ள முதலாம் பராந்தகனின் 37ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில், அக்காலத்தே, அல்லூர் தலைவாய்ச் சான்றோம் பதினொருவர், அல்லூர் சிறியான் புல்லான் என்பவனுக்கு நிலத்தை விற்ற செய்தி கிடைக்கிறது,

கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ மதிரையும் ஈழமு
2 ங் கொண்ட கோப்பரகேசரி பந்ம
3 ற்க்கு யாண்டு 37 [ஆ]வது இவ்
4 வாண்டு உறையூர் கூற்[ற]த்து அல்லூர் த
5 [லை] வாச்சா[ன்]றோம் பதின்னொருவோம் இவ்வூ(ர்)
6 எங்கள் நிலம் வெட்[டி]ப் பேறு அல்லூர் ஊ
7 ரின் வடகிழக்கின் னிலம் காவிரி [செ]பருகிக் குலை
8 [உ]டைத்து மண[ல்]லிட்டுப் புன்செய்யாகக் கிடக்க
9 ஆறேழாட்டைக்கால் பயிர் ஏறாதே பாழ் கிடக்க இ
10 ந் நிலத்தை விலைக்குக் கொள்வீரில்லையோ
11 வென்று முற்கூற அல்லூர்ச் சிறியான்பு
12 ல்லன் நான் விலை கொண்டு.........*

திரு எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் தம் நூலொன்றில் ''அல்லூர்த் தலைவாய்ச் சான்றோம் பதின்னொருவோம்'' என்று இக்கல்வெட்டில் குறிப்பிடப்படுவோரைக் கற்றுச் சிறந்த அறிஞர் பெருமக்கள் பதினொருவர் அடங்கிய உள்ளூர்க் குழு என்று கூறுகிறார்.[1]

---

* கல்வெட்டு தொடர்கிறது. இக்கட்டுரைக்கு இப்பகுதியே போதுமானது என்பதால் தொடர்ச்சி விடப்பட்டுள்ளது. S. I. I. Vol. VIII, Ins. No. 689

1 S.R. Balasubramaniam, Early Chola Temples, p. 13.

அறிஞர் நொபொரு கரஷிமா 'தலைவாய்ச் சான்றோம்' என்ற இச் சொற்களுக்குரிய பொருள் தமக்குச் சரியாகத் தெரியவில்லையாயினும் இச்சொற்களால் குறிக்கப்படுவோர் நீர்ப்பாசனத்திற்குப் பொறுப்பேற்று ஆற்றின் தலைவாய் மதகினை நிர்வகித்தவர்களாக இருக்கலாம் என்றும் கூறுகிறார்.[2] ஐயப்பாட்டுடன் கூடிய ஒரு கருத்தாக இதனை அவர் தெரிவித்திருந்தாலும் இதில் சில உண்மைகள் பொதிந்து உள்ளன.

இக்கோயிலிலுள்ள அரிஞ்சய சோழனின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில், இச்சான்றோர் 'தலைவாயர்' என்று மட்டுமே குறிப்பிடப்படுகிறார்கள். 'சான்றோம்' என்ற சொல் அங்குக் கையாளப் படவில்லை என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும். கல்வெட்டு வரிகள், 'சிறியான் புல்லன் தலைவாயரிடை விலை கொண்ட நிலம், என்று கூறுகின்றன.[3] எனவே சான்றார், சான்றோம் என்ற சொற்கள் இல்லாமலேயே அவர்களின் தன்மையை உணரலாம் என்ற வகையில் அச்சொல் அங்கே கையாளப்பட்டுள்ளது. மேற்சொன்ன இரு அறிஞர் பெருமக்களுமே இக்கல்வெட்டைப் பற்றிக் குறிப்பிட வில்லை என்பது வியப்பாக உள்ளது.

தலைவாய் என்ற சொல் மிகத் தொன்மையான சொல்லாகும். இச்சொல் சங்க இலக்கியமாகிய பத்துப் பாட்டில் இறுதிப் பாட்டாகிய மலைபடுகடாமில் 475-வது வரியில் இடம் பெறலைக் காணலாம்.[4]

''வனைகலத் திகிரியிற் குமிழி சுழலும்
துனைசெலற் றலைவாய் ஓவிறந் தொலிக்கும்
காணுநர் வயாஅங் கட்கின் சேயாற்றின்''

நச்சினார்க்கினியர் உரை: குயவன் வனைகின்ற மட்கலத்தின் சக்கரம் போல குமிழி சுழன்று தோன்றும் விரைந்த செலவினையுடைய வாய்த்தலையின் ஒழிவின்றி ஓடும் யாறு.

காவிரியினின்றும் அல்லூருக்குச் சற்றே தொலைவில் வடக்கு மற்றும் தென்கரையில் பிரியும் வாய்க்கால்களின் முகப்பில் அமைந்த மதகுகள் உள்ள இடங்கள் முறையே வாய்த்தலை, பேட்டைவாய்த்தலை

---

2 Noboru Karashima, Allur & Isanamangalam, Tokyo, Japan, P. 153.

3 S. I. I. Vol. VIII, Ins. No. 692

4 பத்துப்பாட்டு, மலைபடுகடாம், வரி 475, நச்சினார்க்கினியர் உரை, பக். 441; 491.

என்று நெடுங்காலமாக வழங்கப்பட்டு வருதல் இங்கு நோக்கத்தக்கது. எனவே தலைவாய் என்ற சொல் நச்சினார்க்கினியர் காலத்திலேயே வாய்த்தலை என்று மருவி விட்டது என்பதும் ஓர் அரிய செய்தியாகும்.

சான்றார் என்ற சொல்லுக்கு வருவோம். தலைவாய் மதகுகள் திறந்த நாள், நேரம், நீர் வெளியேற்றம், மதகுகளை மீண்டும் அடைத்த நாள், நேரம் ஆகிய செயற்பாடுகளுக்குச் சான்று கூறுபவர்களாக அவர்கள் இருந்திருக்கலாம். அது பற்றியே அவர்கள் தலைவாய்ச் சான்றார் என்று அழைக்கப்பட்டனர் என்று கருதலாம்.*

---

## 5. பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக்கள்


எ. சுப்பராயலு,<br>
கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்.<br>
M. R. ராகவவாரியர்,<br>
வரலாற்றுத்துறை, கோழிக்கோடு பல்கலைக்கழகம்.


தேவர் திருமகன் மாவட்டம் (முன்பு ராமநாதபுரம் மாவட்டம்), திருப்பத்தூர் வட்டம், பூலாங்குறிச்சியில் கண்மாய் மதகையொட்டியுள்ள குன்றின் சரிவுப்பகுதியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் முதன் முதல் 1979 மே மாதத்தில் வெளியுலகுக்குத் தெரியவந்தன. இவற்றை மேலைப்பனையூர் ஆசிரியர் திரு. கரு. இராசேந்திரன் கொடுத்த தகவ

---

* கபிலர் அகவல் என்ற நூல் ஒன்றில் கபிலர் என்பவர் தமக்கு உடன் பிறந்தார் ஆண்பால் மூவரென்றும் பெண்பால் நால்வர் என்றும் குறிப்பிட்டு, அப் பெண்மக்கள் நால்வருள் ஒருவராகிய உறுவை என்பாள் காவிரிப்பூம்பட்டினத்தில் கள் விலைஞர் சேரியில் சான்றார் அகந்தனில் வளர்ந்தனள் என்று கூறுகிறார் (கபிலர் அகவல், கபிலர், வரிகள் 108-109, மற்றும் அடிக்குறிப்பு பக்.10). அந்தச் சான்றார் என்பார் நாடார் என்று அடிக்குறிப்பு சுட்டு கிறது. மேற்சொன்ன கள் விலைஞர்களுக்கு சான்றார் என்ற பெயர் வழங்கியது என்பதை நாம தீப நிகண்டும் குறிக்கிறது (நாம தீப நிகண்டு– வி. வையாபுரி பிள்ளை, பக். 46, வரி 166, 1930). சான்றார் என்பார் இக்காலத்தில் சானார் என்றழைக்கப் படுவதைக் காணலாம். இந்தக் கருத்தையே தென்னிந்திய கோயிற் சாசனங்கள் பாகம் 3, பகுதி 2இல் காணப்படும் சாசனச் சொல் அகராதியும் தெரிவிக்கின்றது (பக். 1441).

லின்பேரில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் திருச்சி கிளையில் பணிபுரிந்த தொல்லியல் அலுவலர் திரு. துளசிராமன் வெளிப்படுத்தினார். உடனடியாக அத்துறையினரால் இவை படியெடுக்கப்பட்டு இவற்றின் முக்கியத்துவம் பற்றிய செய்தி செய்தித்தாள்களில் (இந்தியன் எக்ஸ்பிரஸ் 1979 மே 23) வெளியிடப்பட்டது. அடுத்து இதைப்பற்றி 1981 ஜனவரி மாதம் மதுரையில் நடந்த ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டில் அத் துறையின் அன்றைய இயக்குநர் திரு. இரா. நாகசாமி 'தமிழ்நாட்டில் ஒரு நிகரில்லாக் கல்வெட்டுக் கண்டுபிடிப்பு' என்ற ஓர் ஆங்கிலக் கட்டுரை படித்தார். ஆனால் கல்வெட்டுக்களின் பாடம் எங்கும் கொடுக்கப்படவில்லை. இக்கல்வெட்டுக்கள் 1982இல் மைய அரசு கல்வெட்டியல் துறையினரால் படியெடுக்கப்பட்டது. ஆனால் பாடம் வெளியாகவில்லை. 1983 மே மாதத்தில் நாங்கள் இக்கல்வெட்டுக்களைப் படியெடுத்தோம். முழுப்பாடம் கிடைத்ததன் விளைவாக 18-7-83இல் மதுரை வரலாற்றுக் கழகத்தில் 'பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக்கள்-ஒரு மறுபார்வை' என்ற ஒரு கட்டுரை எ.சுப்பராயலுவால் படிக்கப்பட்டது. இந்தக் கட்டுரையினால் உந்தப்பட்டு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் அன்றைய (பொறுப்பு) இயக்குநர் திரு. நடனகாசிநாதன் இக்கல்வெட்டுக்களை மீண்டும் படியெடுக்கச்செய்து முழுப்பாடங்களையும் பெற்றுத் தம் துறைக் கூட்டத்தில் ஒரு கட்டுரை படித்தார். தொடர்ந்து வெளியான தம் துறை வெளியீடான தொல்லியல் கருத்தரங்கு தொகுதி இரண்டில் அவருடைய ஆங்கிலக் கட்டுரையோடு கல்வெட்டுக்களின் முழுப் பாடங்களும் வெளியிடப்பட்டன. அண்மையில் வேறிரு கட்டுரைகள் பூலாங்குறிச்சி எழுத்துக்களைப் பற்றியும், சமுதாயப் பொருளாதாரச் சூழல் என்பது பற்றியும் வெளியாகியுள்ளன (பார்க்க: நூற்பட்டியல்). ஆயினும் இதுவரை இக்கல்வெட்டுக்களின் வரலாற்று முக்கியத்துவத்தைப்பற்றி தமிழில் ஒரு கட்டுரைகூட வெளியாகவில்லை என்பது வருந்தத்தக்கது. தமிழ்நாட்டு வரலாற்றாய்வில் பொதுவாக உள்ள இந்த மந்தநிலையை மாற்றவேண்டும் என்ற குறிக்கோளுடன் துவக்கப்பட்டுள்ள இவ்வாவண இதழில் பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக்களை முறையாக ஆய்விற்கு எடுத்துக்கொள்ளும் ஒரு முயற்சியே இக்கட்டுரை.

தம் கட்டுரையில் திரு. நாகசாமி இக்கல்வெட்டுக்கள் ஒரே கல்வெட்டின் மூன்று பகுதிகள் என்று கருத்துத் தெரிவித்தார். எங்கள் ஆய்வில் குறைந்தது இரு தனிக் கல்வெட்டுக்கள் உள்ளன என்று தெரிய வந்தது. அதனைத் திரு. காசிநாதனும் பின்பு ஏற்றுக்கொண்டார். கல்வெட்டின் எதிரில் நின்றோமானால் இடதுகைப்பக்கம் ஒரு கல்வெட்டும் வலதுகைப்பக்கம் ஒரு கல்வெட்டும் தெளிவாகத் தெரிகின்றன. இரண்டுக்கும் இடையில் மிகவும் தேய்வுற்ற நிலையில் சில வரிகள் உள்ளன. இடது கல்வெட்டு அதிகமாகச் சிதைந்திருந்தாலும், அதன்

தொடக்கமும் இறுதியும் தெளிவாக உள்ளன. வலது கல்வெட்டும் ஒரு முழுக் கல்வெட்டாகக் காணப்படுகிறது. ஆகவே இடையில் உள்ள வரிகளை மூன்றாவது ஒரு தனிக்கல்வெட்டு என ஊகிப்பது தவறாகாது.

கல்வெட்டுப் பொறிப்பின் இடத்தையும் அளவையும் பார்க்கும் பொழுது இக் கல்வெட்டுக்களை மௌரியப் பேரரசன் அசோகனின் பாறைக் கல்வெட்டுக்களுக்கு ஈடாகக் கூறலாம். இவை பெரிய எழுத்துக் களையும் நீண்ட வரிகளையும் கொண்டுள்ளன. இடது கல்வெட்டும் நடுக் கல்வெட்டும் ஒவ்வொன்றும் சுமார் 5 மீட்டர் உயரமும் 3.5 மீட்டர் அகலமும் கொண்டுள்ளன. அதாவது மேலிருந்து கீழ் நோக்கிவர வரி களின் நீளம் அதிகமாகின்றது. வலது கல்வெட்டு இரண்டு மீட்டர் உயர மும் 5 மீட்டர் அகலமும் உடையது. மூன்றிலும் எழுத்துக்கள் 5 முதல் 7 செ.மீ. அகலமும், 5 முதல் 17 செ.மீ. உயரமும் கொண்டுள்ளன. எழுத்துக்கள் ஆழமாக வெட்டப்பட்டுள்ளன. இருப்பினும் பாறையைச் செதுக்கிச் சமம் செய்யாமலே எழுத்துக்கள் வெட்டப்பட்டதனால் பல இடங்களில் பாடம் பெறுவது கடினமாக உள்ளது. மேலும் இப்பாறை இயற்கையிலேயே உரிந்து சிதையும் தன்மை கொண்டிருப்பதால் பல நூற்றாண்டுகள் மழையிலும் வெயிலிலும் இருந்து கல்வெட்டுகள் ஆங்காங்கு தேய்ந்தும், சிதைந்தும் உள்ளன. நடுக்கல்வெட்டு பெரும் பாலும் அழிந்துவிட்டது. இடதுபக்கக் கல்வெட்டின் முற்பகுதி பெரிதும் போய்விட்டது. வலதுபக்கக் கல்வெட்டு மட்டும் பெரும்பகுதி நல்ல நிலையில் உள்ளது.

எழுத்தமைதியைக் கொண்டு பார்க்கும் பொழுது மூன்று கல்வெட் டுக்களுக்குள் வேறுபாடு ஏதும் இல்லை. இவற்றின் எழுத்துக்கள் பல் லவ மன்னன் சிம்மவிஷ்ணு கால (550-575) நடுகல் கல்வெட்டுக்களின் எழுத்துக்களுக்கு முந்தியவை என்று உறுதியாகச் சொல்லலாம். இந்த நேரத்தில் எழுத்து வளர்ச்சி மெதுவாகவே ஏற்பட்டிருக்கக் கூடுமாதலால் பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக்கள் கி.பி.500க்கு முந்தியது என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது. என்றாலும் வேறு உறுதியான சான்றுகள் கிடைக்கும் வரையில் இவற்றின் காலம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு என்று கொள்வதே நல்லது. சக ஆண்டடிப்படையில் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு எனத் திரு. நாகசாமி வெளியிட்ட கருத்து அவ்வளவு வலுவுடையதாகத் தெரியவில்லை. இவற்றின் எழுத்துக்கள் பிராமி, வட்டெழுத்தாக மாறக்கூடிய நிலையில் உள்ளன. இக் கல் வெட்டுக்களில் தனி மெய்கள் யாவும் புள்ளி பெற்றுள்ளன. மேலும் உயிரெழுத்துக்களில் எ, ஒ ஆகிய இரண்டும் புள்ளியிட்டெழுதப்பெற் றுள்ளன. அதாவது புள்ளியிடாதவை நெடில்களாகக் கொள்ளப்பட் டுள்ளன. இலக்கணவழுக்கள் இல்லையெனும் அளவுக்கு மொழி நடை உள்ளது. வேள் கூரு, அவரு, கேட்டாரு, செஇதாரு என்ற சில பேச்சு வழக்குகள் விரவி வந்துள்ளன.

## செய்தித் தொகுப்பு :

முதலில் நல்ல நிலையில் உள்ள வலப்பக்கக் கல்வெட்டை எடுத்துக் கொள்ளலாம். இது சேந்தன் கூற்றன் என்ற அரசன் ஆட்சியில் நூற்றுத் தொண்ணூற்றிரண்டாம் ஆண்டில் பதிக்கப்பட்டது. இவ் வாண்டு இவ்வரசன் முடிசூட்டியதிலிருந்து கணக்கிட்ட ஆட்சியாண்டு என்று கூறமுடியாது. ஏதோ ஒரு பழைய தொடராண்டு போல் உள்ளது. திரு. நாகசாமி இதனைச் சக ஆண்டு வரிசையில் சேரும் என்று கொண்டு இக்கல்வெட்டின் காலம் கி.பி. 270 (192+78) என்று கணக்கிட்டுள்ளார். இக்கல்வெட்டின் எழுத்தமைதி அவ்வளவு பழமையாக இருக்க முடியாது. இப்போதைக்கு இத்தொடராண்டு எது என அறுதியிட்டுச் சொல்ல இயலவில்லை. ஆண்டுக்குப்பின் குறிப்பிடப்படும் நாள் முப்பத்தாறு எதைக் குறிக்கிறது என்பது புதிராக உள்ளது. பக்கந் தைப்பிறை என்பது தைமாதத்தில் வளர்பிறையா? தேய் பிறையா? அதற்கு அடுத்து வரும் 'நாள்' திதியைக் குறிக்கிறதா? இப்படி எழும் பல கேள்விகளுக்கு விடை காண்பது கடினம்.

தேதிக்குப் பின் வரும் செய்திகள் பெரும்பாலும் தெளிவாக உள்ளன. முதலில் (வரி 2-5) வேள் மருகண் மகனும் கடலகப் பெரும் படைத்தலைவன் என்ற பட்டத்தைப் பெற்றவனும் ஆன எங்குமான் எழுப்பிய இரு தேவகுலங்களும், ஒரு கோட்டமும் பேசப்படுகின்றன. ஒரு தேவகுலம் ஒல்லையூர்க் கூற்றத்தைச் சேர்ந்த வேள்கூரில் பச்செறிச்சில் என்ற மலைமேல் இருந்தது. இது கல்வெட்டுள்ள பூலாங் குறிச்சி மலையையே குறிக்கும். வரி 8-9 இதைத் தெளிவுபடுத்தும். இரண்டாம் தேவகுலம் முத்தூற்றுக் கூற்றத்தைச் சேர்ந்த விளமர் என்ற ஊரில் இருந்தது. முத்தூற்றுக் கூற்றம் இன்றைய அறந் தாங்கி, திருவாடானை வட்டங்களை உள்ளடக்கிய நிலப்பிரிவு. பூலாங்குறிச்சியிலிருந்து விளமர் சுமார் 50-60 கி. மீ. தொலைவில் இருந்திருக்கவேண்டும். மூன்றாவதாக வரும் வாசிதேவனாருக்குரிய கோட்டம் மதிரையில் உலவியத்தான் என்ற குளத்துக்கு வடக்கில் இருந்த தாபதப்பள்ளியுள் எழுப்பப்பட்டது. மதிரையை இன்றைய மதுரையாகவே கொள்ளவேண்டும். அதுவும் பூலாங்குறிச்சியிலிருந்து 50-60 கி.மீ. தொலைவில் உள்ளது. தேவகுலங்கள், திரு. காசிநாதன் கருத்துத் தெரிவித்தபடி, பெரும்பாலும் சிவன் அல்லது விஷ்ணு கோயில் களாகலாம்.[1] பூலாங்குறிச்சி மலைமேல் இப்பொழுது ஒரு சிவன் கோயில் உள்ளது. ஆனால் இப்போதுள்ள கட்டிடம் அவ்வளவு பழமை யானதல்ல. விளமரின் சரியான இலக்கு இன்னும் தென்படவில்லை. வாசிதேவனார் கோட்டம் தாபதப் பள்ளியைச் சேர்ந்தது எனப்படுவதாலும், தாபதப்பள்ளி ஜைன சமய நிறுவனம் என்று பரவலாகத் தெரிவதாலும் வாசிதேவனார் கோட்டம் ஒரு ஜைனக்கோயில் எனலாம்.[2]

அத்திகோயத்தார், உள்மனையார், நான்கு வகைத் திணைகள் ஆகியோர் இம்மூன்று கோயில்களுக்கும் வேண்டியதைச் செய்வதாக ஏற்றுக்கொண்டனர். இக்கோயில்களில் வழிபாடு நடத்துபவரை நியமிக்கும் பொறுப்பு பாண்டங்கர், சேவுக்கர், விரும்மசாரிகள், தருமிகள், ஊர்காவல் கொண்டார் என்ற குழுக்களைச் சேர்ந்தது என்றும் அவர்களால் நியமிக்கப்படுவோர் தவிர பிறர் வழிபாடு நடத்தக்கூடாது என்றும் விதிக்கப்பட்டது. மேலும் குழலூருத்துஞ்சிய உடையார் என்பவரால் இக்கோயில்களில் ஒன்றான பச்செறிச்சில் மலைக்கோயிலுக்கென்று குடும்பியர் வேள்கூரில் (அதாவது உள்ளூரில்) ஏற்றப்பட்டனர் என்றும், இக்குடும்பியர் தவிர வேறு குடும்பியர் (குடும்பு) தவிர்க்கப்பட வேண்டும் என்றும் விதிக்கப்பட்டது. அடுத்து, பொதுப்பட 'கோயிலுக்கு வேண்டியது செய்து, தீங்கிழைப்பவரைத் தண்டிப்பீராக' என்று ஆணை கொடுக்கப்பட்டது.

ஆணையை முன்னின்று கேட்டவர் எயினங்குமான் (எஇனங்குமான்), கீரங்காரி, குமாரம் போந்தை என்ற மூவர். ஒவ்வொருவரும் 'ஊர்கிழான்' என்றும், 'உலவியப் பெருந்திணை' என்றும் சிறப்புப் பெற்றவர். இந்த ஆணையை ஓலை எழுதுவான் தமன் காரிகண்ணன் தான் கேட்டவாறு கூற அதை வேண்ணாட்டான் நரியங்காரி என்பவர் எழுதிக்கொடுத்ததாக இறுதியில் உள்ளது. நரியங்காரி கல்லில் பொறித்ததையே 'எழுதிக்கொடுத்ததாகச்' சுட்டப்படுகிறது என்று கொள்ளலாம்.

மேற்கொடுத்துள்ள விவரத்தில் மேலும் விளங்கவேண்டிய இடங்கள் சில உண்டு. கையாளப்பட்டுள்ள சில சொற்களுக்குச் சரியான பொருள் காண்பது அவ்வளவு எளிதல்ல. பாண்டங்கர், சேவுக்கர் முதலிய சொற்கள் மேலும் ஆராயப்படவேண்டியவை. 'குடும்பாடுதல்' என்ற வினை குடிகளின் தொழிலைக் குறிப்பிடுகிறது. உத்தரமேருச் சதுர்வேதிமங்கலம் முதலிய பிரம்மதேயங்களில் வரும் குடும்புக்கு நிகராக இதைக் கொள்ளமுடியாது.[3] அத்திகோயத்தார் என்ற சொல் திரு. ஆர். பூங்குன்றனால் ஆராயப்பட்டுள்ளது. 'கருவூலங் காவல் பூண்ட யானைப்படைத் தலைவர் குழு' என்று அவர் கொடுத்துள்ள ஒரு கருத்து பெரும்பாலும் ஏற்புடையது. உள்மனையார் பின்னால் வரும் அகம்படியார் என்ற சொல்லுடன் ஒப்புநோக்கலாம். 'நாற்பாற்றிணைகள்' நான்கு திசையிலும் உள்ள பல திணைகள் என்று கொள்வது தவறாகாது. திணை 9, 10ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் 'கணக்கு' என்ற பொருளிலேயே வழங்கப்பட்டுள்ளது. பின் வந்த புரவுவரித் திணைக்களம் (அதாவது வருவாய்க் கணக்குத்துறை) இச்சொல்லின் வளர்ச்சியே. காசிநாதன் இதைப் படையென்றுகொண்டிருப்பது பொருத்தமாக இல்லை. இறுதியில் வரும் 'உலவியப் பெருந்

திணை' கணக்கு அலுவலருக்கு வழங்கப்பட்ட ஒரு பட்டம். சோழர் காலப் பட்டங்களை ஒப்பு நோக்கினால் 'உலவியன் என்ற பெயர் அல்லது விருது கொண்ட அரசன் கீழ் பணிபுரியும் மதிப்புமிகு திணை அல்லது கணக்கன்' என்று இதை விரிக்கலாம். திரு. நாகசாமி 'உலவிய' என்பதனைப் பெயரெச்சமாகக் கருதி, 'உலாவும்' என்ற பொருள் கொண்டு, 'ஸஞ்சாரகர்' என்று பிராகிருதச் செப்பேடுகளில் வரும் சொல்லோடு ஒப்பிடலாமா என்று ஐயம் எழுப்பியுள்ளார். 'ப்' சந்தி இருப்பதால் 'உலவிய' பெயரெச்சமாகாது. இதை உலவியன் என்ற பெயரோடுதான் தொடர்புபடுத்த முடியும். உலவியத்தான் குளம் என்ற பெயரைப் பார்த்தால் உலவியத்தான் என்பது ஒரு பெயர் என்பது விளங்கும். உலவியன் உலவியத்தானின் இன்னொரு வடிவ மாகலாம்.

கடலகப் பெரும்படைத்தலைவன் என்பதையும் மேற்கண்டவாறு பொருள் கொள்ளவேண்டும். 'கடல் போன்ற பெரிய படைக்குத் தலைவன்' என்று சொல்வது தவறு. 'கடலகனுடைய மதிப்புமிக்க படைத்தலைவன்' என்பதே சரி. கடலகன் என்ற சொல் பாண்டியர் பெயர்களுள் ஒன்றான 'கடலன்' என்பதோடு தொடர்புடையதுபோல் தெரிகிறது.[4] இந்தக் கல்வெட்டில் உள்ள ஆணையைப் பிறப்பித்தவர் கல்வெட்டின் அரசனான சேந்தன் கூற்றனே என்று கொள்ளவேண்டி யுள்ளது. குழலூருத்துஞ்சிய உடையார் (வரி 9) பெரும்பாலும் இவ் வரசனின் தந்தையாகலாம்.

இடது கோடியிலுள்ள கல்வெட்டில் முன்பகுதி பெரிதும் சிதைந் திருந்தாலும் நல்லவேளையாக அரசன் பெயரும் ஆண்டும் ஓரளவு ஊகிக்கும் நிலையில் உள்ளது. 'ந்தற்கு யாண்டு நூற்றுத்......' என்று வருவது கொண்டு அரசன் பெயர் பெரும்பாலும் சேந்தன் என்றும் யாண்டு நூற்றுத் தொண்ணூறை ஒட்டியது என்றும் ஊகிக்கலாம். அடுத்து ''.....ள் மருகண் மகன் கடலகப் பெ.....'' என்ற பகுதியை யும் மேற்கல்வெட்டுப் பாடத்தோடு ஒப்பிட்டு 'வேள் மருகண் மகன் கடலகப்பெரும் படைத்தலைவன்' என்று நிரப்பலாம். தொடர்ந்து (வரி 5-15) வெள்ளேற்றான் மங்கலம், சிற்றையூர், மூன்றாவது ஓர் ஊர் ஆகிய மூன்று ஊர்களில் நிலங்கள் சுட்டப்படுகின்றன. பின்னவை இரண்டும் பிரம்மதாயங்கள்;[5] வெள்ளேற்றான் மங்கலம் அப்படிச் சுட்டப்படவில்லையென்றாலும் பெயரைக்கொண்டு அதையும் பிரம தாயமாகக் கருதலாம். வரிகள் 7-9-இலும் சில நிலங்கள் குறிப்பிடப் படுகின்றன. அவை நான்காவது ஓர் ஊரைச் சேர்ந்தவையாகலாம். இந்நிலங்களில் ஒன்றுமட்டும் தெளிவாக விற்பனையில் பெறப்பட்டது என்று தெரிகிறது (வரி 12). மற்றவை எந்த வகையில் பெறப்பட்டன என்று தெரியவில்லை, இருப்பினும் அவற்றின் மீதான மீயாட்சி,

காராண்கிழமை ஆகிய இரு உரிமைகளும் பேசப்படுகின்றன. அந்த நிலங்கள் அல்லது அவற்றின் மீதான உரிமைகள் யாரிடம் கொடுக்கப்பட்டன என்ற செய்தி அழிந்துவிட்டது. இருப்பினும் மேலே கண்ட கல்வெட்டின் துணைகொண்டு ஓரளவு ஊகிக்கலாம். அதாவது (பூலாங்குறிச்சி) பச்செறிச்சில் மலைமேல் எழுப்பப்பட்ட தேவகுலம் அல்லது கோயில் இக்கொடையைப் பெற்றது என்று. மேலும் வரிகள் 15-17இல் சுட்டப்படும் 'அவர்' இக்கோயில் மூலவரே என்பதும் தவறாகாது. அம்மூலவருக்கு மேற்குறிப்பிட்ட நில உரிமைகளோடு பாண்டி நாட்டிலும் கொங்கு நாட்டிலும் காராண்கிழமை, களக்கிழமை, மேலாண்மை உரிமைகளும், காலாசமும், தோட்டங்களும் இருந்தன. அவை யாவற்றையும், அவருடைய 'தமரை'யும், அவருடைய குடிகளையும் பிரம்மதாயமுடையார், நாடுகாப்பார், புறங்காப்பார், முப்புருகாப்பார் முதலியோர் பேணிக் காக்கவேண்டும் என்பதும் தீங்கிழைத்தவர்களுக்கு ஆயிரத்தறுநூறு காணம் தண்டம் விதிக்கவேண்டும் என்பதும் ஆணை.

காராண்கிழமை, மேலாண்மை ஆகியவை முறையே மேற்குறிப்பிட்ட காராண்மை, மீயாட்சிக்கு வேறு வடிவங்களே. இவை முறையே நிலத்தை உழும் உரிமையையும், நிலத்தைக் கட்டுப்பாடின்றித் துய்க்கும் மேலுரிமையையும் குறிக்கும். களக்கிழமை என்பது அறுவடைக்களத்தோடு தொடர்புடைய ஏதோ ஓர் உரிமை. 'காலாசம்' கால்நடைச் செல்வத்தைக் குறிக்கலாம். தமர் என்பது சுற்றத்தைக் குறிக்கும்.[6] இங்குக் கோயிலில் வழிபாடு நடத்தும் பூசாரி போன்ற பணியாளர் குழாமாகக் கொள்ளலாம். குடிகள் பெரும்பாலும் உழுகுடிகளாகும். கால்நடை வளர்ப்போர் (திருவிளக்குக்குடி) போன்றோரும் இதில் அடங்கலாம்.

பேணும் பொறுப்பைப் பெற்றவர்களில் பிரம்மதாயமுடையார் என்பவர் பிராமண நிலக்கிழார்கள் ஆகும். இச்சொல்லுக்கு முன்னால் உள்ள '.....உடையார்' யார் என்று உறுதியாகச் சொல்ல இயலவில்லை. பிற நிலக்கிழார்களை அது சுட்டலாம். நாடுகாப்பார், புறங்காப்பார், முப்புருகாப்பார்(?) ஆகியோர் பல நிலைகளில் காவல் தொழில் செய்யும் அரச அலுவலராகக் கொள்ளலாம். எனினும் முப்புருகாப்பார் என்ற சொல் தெளிவாக இல்லை. வரி 18இல்'......தாயந் நெறி அ...செஇதாரு தத்தமானும்' என்ற தொடரை 'தேவதாயந் நெறிஅறஞ் செஇதாரு தத்தமானும்' என்று கொண்டால் தத்தமான் என்பவர் கோயில்களை கண்காணம் செய்த அரச அலுவலர் என்று பொருள்தரும்.

இக்கல்வெட்டை உண்டாக்கியவர் மேற்கல்வெட்டில் குறிப்பிடப்படும் கடலகப் பெரும்படைத்தலைவனே (வரி 4). அந்தக் கல்வெட்டில்

ஆணை பிறப்பித்தவர் அரசனாக இருந்தால் இக்கல்வெட்டிலும் அதே போலத்தான் கொள்ளவேண்டும். ஆணையைக் கேட்டவர்கள் மூன்று பெருந்திணை அலுவலர். இங்கும் மூவரும் ஊர்கிழார்களாகக் காணப் படுகிறார்கள். ஒருவர் மேல் கல்வெட்டிலும் காணப்படுகிறார். ஓலை எழுதிய அலுவலர் பெயர் தமன் வடுகங்குமான். இறுதி வரி முற்றிலும் சிதைவுற்றதால் கல்லில் பொறித்தவர் யார் என்பது தெரியவில்லை.

இவ்விரு கல்வெட்டுக்களில் வரும் அரசருக்குள் உள்ள உறவு வெளிப்படையாகத் தெரியவில்லை. இருப்பினும் சேந்தன் கூற்றன் தந்தையென்றும் இடது பக்கத்துக் கல்வெட்டுக்குரிய [சே]ந்தன் முன் னவனின் மகன் என்றும் கொள்வது பெரும்பாலும் சரியாக இருக்கும். சேந்தன் கூற்றன் கல்வெட்டு 192ஆம் ஆண்டைச் சேர்ந்தது. சேந்தன் கல்வெட்டு 193-199 ஆண்டுகளுள் ஒன்றில் பொறிக்கப்பட்டிருக்க வேண்டும். அதாவது இரண்டுக்கும் இடைவெளி நான்கைந்து ஆண்டு கள் தானிருக்கும். ஒரு பெருந்திணை அலுவலரும், கடலகப் பெரும் படைத்தலைவனும் இரு கல்வெட்டுக்களிலும் வருவது இதனை உறுதிப் படுத்தும்.

இக்கல்வெட்டுக்கள் தமிழ்நாட்டுப் பண்டைக்கால அரசியல், சமுதாய வரலாற்றுக்குப் பல அரிய செய்திகளைக் கொடுக்கின்றன என் பது மேற்போக்காகப் பார்த்தாலே புரியும். இக்கல்வெட்டுக்களில் வரும் அரசர் களப்பிரரா, பாண்டியரா என்பதை எளிதில் முடிவுசெய்ய இய லாது. பாண்டியர்களுள்ளும் சேந்தன் என்ற பெயர் ஏழாம் நூற்றாண் டின் இறுதியில் காணப்படுகிறது. கடலகன், கடலன் ஒப்புமை மேலே சுட்டப்பட்டது. களப்பிரர் என்று கொண்டால் அவர்கள் பாண்டியர் குலமரபை தங்களதாகப் பாவிக்கத் தொடங்கிவிட்டார்கள் எனலாம். எப்படியிருப்பினும் இவ்விரு அரசர்கள் பாண்டி நாட்டையும் கொங்கு நாட்டையும் ஒரு சேர ஆண்டுவந்தார்கள் எனத் தெரிகிறது. வேண் ணாடு, அம்பர், ஆலத்தூர் போன்ற பெயர்கள் சோழநாட்டோடு தொடர்புடையனவாகத் தோன்றுகின்றன. அப்படியானால் சோழ நாடும் இவ்வரசர்கள் கட்டுப்பாட்டில் இருந்திருக்கலாம். அரசியலைப் பொறுத்தவரையில் சங்ககால அரசுக்கும் இக்கல்வெட்டுக்கள் காட்டும் அரசுக்கும் அமைப்பில் வேறுபாடுகள் உள்ளன. பின்னது சிலப்பதி காரம், பெருங்கதை முதலிய காவியங்கள் காட்டும் அரசமைப்போடு பெரிதும் ஒப்புமையுடையதாகக் காண்கிறோம்.[7]

தேவகுலம், தாபதப்பள்ளி, வாசிதேவனார் கோட்டம், விரும்மச் சாரிகள், தருமிகள் முதலிய சொற்களும் சமய உலகில் வடக்கிலிருந்து வந்த தாக்கத்தை வெளிப்படுத்துகின்றன. பிரம்மதாயங்கள் (பிரம தேயங்கள்) பல்கத் தொடங்கிய காலம் இது என்பதை வெள்ளேற்றான்

மங்கலம், சிற்றையூர் பிரம்மதாயம் முதலியன உணர்த்தும். இவற்றின் விளைவாக நில உரிமைகளில் வேறுபாடுகள் தோன்றத் தொடங்கி விட்டன. நிலக்கிழார், உழுவோர் என்ற வேறுபாடுகளும் நிலக்கிழமை (மீயாட்சி) வேறு, உழும் உரிமை (காராண்மை) வேறு என்றும் சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகள் தெளிவாகத் தொடங்கிவிடுகின்றன. இங்கும் காவியகாலச் சமுதாயத்தை ஒப்பிட்டுப் பார்ப்பது சங்க மருவிய கால வரலாற்றுக்குப் புதிய விளக்கத்தைப் பெற உதவும்.

---

## அடிக்குறிப்புகள்

1 தேவகுலம் வட இந்தியாவில் கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்தே வழக்கில் இருந்ததாகத் தெரிகிறது. முதலில் இது நீத்தோர் படிமைகளை வைத்து வணங்கும் கூடமாக இருந்தது என்று டி. ஆர். பந்தர்கர் குறிப்பிடுகிறார். **Epigraphia Indica**, Vol. 21, p. 4-5.

2 ஜைன புராண மரபுப்படி போற்றுதலுக்குப் பெரியார் (சலாகா புருஷர்) அவர்களுள் தீர்த்தங்கரர் இருபத்துநால்வர், சக்ரவர்த்திகள் பன்னிருவர், வாஸுதேவர் ஒன்பதின்மர், பலதேவர் ஒன்பதின்மர், பிரதிவாஸுதேவர் ஒன்பதின்மர். P. B. Desasai, **Jainism in South India and some Jaina Epigraphs** (Sholapur, 1957), p. 123.

3 குடும்பு, பிரமதேய ஊர்களில் உள்ள ஊரிருக்கையின் உள்பிரிவு (ward) என்று நீலகண்ட சாஸ்திரி முதலியோர் கருதியுள்ளனர். ஆனால் அது விளைநிலங்களைத் தரத்தின் அடிப்படையில் தொகுதி தொகுதியாக அமைக்கப்பட்ட ஒன்று என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. (எ. சுப்பராயலு, 'சில அரிய சொற்கள்', தமிழ்க் கல்வெட்டியலும் வரலாறும் (நூல் தட்டச்சுப்படி), கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம் 1991.

4 அகநானூறு 81இல் கடலன் என்ற ஓர் அரசன்/குறுநிலத் தலைவன் பேசப்படுகிறான். ஆனால் பாண்டியன் என்று குறிப்பில்லை. மாங்குளம் பிராமி கல்வெட்டில் கடலன் வழு(த்)தியை நிச்சயமாகப் பாண்டியனாகத்தான் கொள்ளளேண்டும்.

5 பிரம்மதாயம், பிர(ம்)மதேயம், இரண்டும் ஒன்றே. பிராமணர்களுக்குக் கொடையாகக் கொடுக்கப்பட்ட ஊர்கள் அல்லது நிலங்களை இவை குறிக்கும்.

6 கல்வெட்டுக்களில் அரச அலுவலரை அரசுச்சுற்றம் என்ற பொருளில் கோயிற்றமர் என்ற சொல் ஆளப்படுகிறது. (எ. சுப்பராயலு, 'சில அரிய சொற்கள்'.)

7 ஒப்பிடுக: ப. அருணாசலம், சிலப்பதிகாரச் சிந்தனை, (தமிழ்ப் புத்தகாலயம், 1971.)

---

## சுட்டுநூல் பட்டியல்


சுப்பராயலு, எ. & இராசு, செ. (பதிப்பு), தமிழ்க் கல்வெட்டியலும் வரலாறும் (நூல் தட்டச்சுப்படி), (தமிழ்ப் பல்கலைக் கழகம், கல்வெட்டியல் துறை, 1991).

பூங்குன்றன், ஆர், 'அத்திகோசத்தார்', தொல்லியல் கருத்தரங்கு, தொகுதி 2 (தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, 1983), ப. 157 - 65.

வேதாசலம், வெ, 'பூலாங்குறிச்சிக் கல்வெட்டு எழுத்துக்கள்' தென்னிந்திய பிராமி எழுத்து வளர்ச்சிக் கருத்தரங்கு. (தமிழ்ப் பல்கலைக்கழகம், 1988 மார்ச்.)

Govindaraj, R, 'Report on Palaeographical Study of Scripts in Tamil Nadu A. D.500 - 980. (Mimeo). (Tamil University, Department of Epigraphy, 1991.)

Kasinathan, Natana., 'Pulankuricci Inscription - a Relook' தொல்லியல் கருத்தரங்கு, தொகுதி 2, (மேலது), ப. 157 - 65.

Nagasamy, R, 'An Outstanding Epigraphical Discovery of Tamil Nadu' (Mimeo). (V World Tamil Conference, Madurai, 1981, Jan.)

Subbarayalu, Y, 'A note on the Socio - economic Milieu of the Pulankurichi Inscriptions' (Mimeo) (XVII Annual Congress of Epigraphical Society of India, Tamil University, Thanjavur, 1991 Feb.)

இடப்புறம் உள்ள கல்வெட்டு*

1 ---ந்தற்கு யாண்டு நூற்றுத் --- --- --- **

2 நா[ற்] --- ர.ப. --- --- --- --- ---

3 [னு] --- --- ளள் [ளை] --- --- ---

4 --- --- --- --- [ள்] மருகண் மகன் [க]டலகப் பெ.

5 --- --- --- --- ன் ஒல்லையூருக் கூற்[ற]

6 --- --- --- --- --- --- ---

7 --- செ --- வகள வய --- --- ---

8 --- --- --- --- --- --- ---

---

* இக்கல்வெட்டுக்களின் பாடங்கள் 1983இல் எடுத்த மைப்படி கொண்டு முதலில் எழுதப்பட்டன. மீண்டும் 1990 மார்ச் மாதம் ஒரு மைப்படி எடுக்கப்பட்டு திருத்தப்பட்டன. அண்மையில் மைய அரசுத்துறையின் மைப்படிகளை அதன் இயக்குநர் முனைவர் கே. வி. ரமேஷ் ஒப்புநோக்க அனுமதித்ததோடு அவரும் கூடவே இருந்து படித்து உற்சாகமளித்தார் என்பதை நன்றியோடு குறிப்பிடவேண்டும். இப்பாடங்களின் குறைகளுக்கு இறுதிப் பொறுப்பு நாங்களே ஏற்றுக்கொண்டாலும், இப்பாடங்களை நிறைவாக்கப் பலர் உதவிபுரிந்துள்ளனர் என்பதை மறக்க இயலாது. சிறப்பாக தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையைச் சேர்ந்த திருவாளர்கள் சு. இராஜகோபால், வெ. வேதாசலம், சொ. சாந்தலிங்கம், மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பேராசிரியர் விஜய வேணுகோபால் ஆகியோரின் உதவியைக் குறிப்பிடவேண்டும். முதன்முறை படியெடுக்கும்பொழுது மதுரை காமராசர் பல்கலைக் கழக வரலாற்றுத்துறை ஆய்வு மாணவர் திரு. வெங்கடாசலபதி உதவினார். இரண்டாம் முறை படியெடுத்த பொறுப்பு தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல்துறை விரிவுரையாளர் திரு. கா. ராஜன், ஆய்வாளர்கள் திரு. பா. ஜெயக்குமார், திரு. இரா. கோவிந்தராஜ், உதவியாளர்கள் திரு. செல்வராஜ், திரு. கருப்புசாமி ஆகியோரைச் சேர்ந்தது.

** அழிந்த பகுதிகள் ஓரெழுத்து ஒரு புள்ளி என்றும், ஒரு சொல்லுக்கு மேற்பட்டிருந்தால் அப்பகுதி '---' என்றும் காட்டப்பட்டுள்ளன. ஊகித்த அல்லது ஐயத்திற்கிடமான பகுதி பகர அடைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

9 [பெ]--- --- ரு நிலனும் புன்செஇ வெள்ளேற்றான் மங்கலமென்

10 --- [ழுவரும்] . ரு . . ங் கூடலூரு நாட்டுப் பிரம்மதாயஞ் சிற்றையூருப் பிரம்மதாயக்கி

11 --- [ழமை]யும் [மீயா]ட்சியுங் கொண்டாளும் மவூருப் படுங் கடைய வயலென்னும்

12 --- --- --- புலத்தவன் விற்றுக்கொண்டு கொடுத்த புன்செ நிலனு

13 --- --- --- --- துப் பிரம்மதாயத்துட் பிரம்மதாயக் கிழவரா[ன]

14 --- றராலும் பிரம் --- யுங் காராண்மையு மாகக் கொண்டாளுந் நீர் நிலனும் புன்

15 ... நிலனும் பிறவுஞ் --- பாண்டி நாட்டுங் கொங்கு நாட்டும் மவரு காராண்கிழமையுங் கல

16 க் கிழமையும் மேல்[லாண்மை] கொண்ட[ன]வும் மவருடைய காலாசமுந் தோட்டங்களும் மவரு தமரையும் ம

17 வரு குடிகளையும் --- --- டையாரும் பிரம்ம தாயமுடையாருந் நாடுகாப்பாரும் புறங்காப்

18 பாரும் முப்பு [ரு காப்பாரு] --- --- தாயந் நெறி அ . . . செஇதாரு தத்தமானும் வேறு வேறு ஆஇரத்தறுநூ

19 று காணந் . . று . . . டு வே --- ன்ற . . . ரு கேட்டாருல வியப் பெருந்திணை நல்லங்கிழா னெஇனங்கு

20 மானும் முலவி --- --- ம . . . ங்கிழான். ளங் கூற்றனும் முலவியப் பெருந்திணை ஆலத்தூர் கி

21 --- --- --- ---லை .. துவான் [றமன்வ] ஙிகங் குமான் ..டைப்பி [ஓ] ---

22 ...[தளருக்கு] --- --- ---

வலப்புறம் உள்ள கல்வெட்டு

1 கோச் சேந்தங் கூற்றற்கு யாண்டு நூற்றுத்தொண்ணூற்றி

2 ரண்டு நாண் முப்பத்தாறு பக்கந் தைப்பிறை நாள் ப[ன்னிரண்டு] வேள் மரு கண் மகன் கடலகப் பெரும்படைத்

3 தலைவன் எங்குமான் னொல்லையூருக் கூற்றத்து வேள்கூருப் பச்செறிச்சின் மலை மேற் செஇவித்த தேவகுலமும்

4 முத்தூற்றுக் கூற்றத்து விளமரு[ச்] செஇவித்த தேவகுலமும் மதிரை உலவியத்தான் குளத்தின் வடபக்கத்துச் செஇவி

5 த்த தாபதப்பள்ளியுள் [வா]சி தேவனாரு கோட்டமும் மவை அத்திகோயத்தாரு முள்மனையாருந் நாற்பாற்றிணைகளுந் தமக்கு காவலாக

6 அவற்றுக்குற்றது செ[யக்] கொண்டமையால் லவற்றை வ[ழிபடு வது]ம் மவற்றுக்குப் பெயப்பட்ட அறப்புறந் நடையாட்டுவதூஞ் செயும்

7 பாண்டங்கருஞ் சேவுக்கரும் [வி]ரும்மச்சாரிகள்ளுந் தருமிகளு மூ[ர்] காவல் கொண்டா[ருஆ]ராஇந்து வைஇக்கப் பட்டாரு அல் லது வழிபடப்

8 பெறாமையும் மவற்றுட் பச்செறிச்சி[ல்] மலைமேற் செஇவி[த்த தேவகு] லத்துக்குக் குடும்பியராவாரு குழ

9 [லூ]ருத் துஞ்சிய உடையாரால் வேள்கூருப் பெயப்பட்ட குடும்பி [யர் வழியல்லது வேறொரு] குடும்பாடப் பெறாமையும்

10 மத் தேவகுலத்துக் குற்றது செய்து வல்லக்குற்றந் தொழில் செய...க[ளு]..[டஞ்] செயவும் மெழுதி வைக்கென் றருள்ளித்தாரு

11 கேட்டாருலவியப் பெருந்திணை நல்லங்கிழானெஇ னங்குமானும் முலவியப் பெருந்திணை ப.. ஆறு கிழான் கீரங்காரி

12 யு முலவியப் பெருந்திணை அம்பருகிழான் குமாரம் போந்தையுங் கேட்டு வந்து கூறின [னோ]லை எழுதுவான் [றம]ன் காரி

13 கண்ணன் இது கடைப்[பி] ஓலை காற் கண்டெழுதிக் கொடுத் தேன் [வே]ண்ணாட்டான் [ந..ரி] நாரியங்காரி.

# 6. காந்தள்

வே. கல்பகம், இரா. கலைக்கோவன்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்.

தொல்காப்பியப் பொருளதிகாரப் புறத்திணை இயலில் வெட்சித் திணையின் துறைகளைப் பட்டியலிடும் பகுதி மூன்று நூற்பாக்களாக அமைந்துள்ளது. இவற்றுள் மூன்றாம் நூற்பா, 'வெறி அறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தளும்' என்று தொடங்குகிறது. இந்த வரிக்கு 'வெறி ஆடுதலை அறியும் சிறப்பினை உடைய வெவ்விய வாயினையுடைய வேலன் வெறியாடிய காந்தளும்' என்று இளம்பூரணர் விளக்கம் தருகிறார்.[1] 'தெய்வத்திற்குச் செய்யும் கடன்களை அறியும் சிறப்பினையும், உயிர்க்கொலை கூறலின் வெவ் வாயினையும் உடையனாகிய வேலன் தெய்வமேறி ஆடுதலைச் செய்த காந்தள்' என்று நச்சினார்கினியர் விளக்குகிறார்.[2]

இந்த இரண்டு விளக்கங்களைப் படித்த பின்பும் பல கேள்விகள் எழுகின்றன. தொல்காப்பியரின் நூற்பாக்கள் சொற் சுருக்கத்துக்கும், பொருட் பெருக்கத்துக்கும் பெயர் பெற்றவை. 'வேலன் அயர்ந்த காந்தள்' என்றோ, 'வெறியாட்டயர்ந்த காந்தள்' என்றோ சொல்லி யிருக்க வெண்டிய செய்தியைப் பல சொற்கள் சேர்த்து நீட்ட வேண் டிய தேவையென்ன? வேலன் என்றாலே வெறியாட்டும், வெறியாட் டென்றாலே வேலனும் நினைவுக்கு வரும்போது இரண்டில் ஒன்றைச் சொல்லியிருந்தால் போதுமானதாக இருந்திருக்குமே. வேலன் வெறி யாடுதலைச் செய்வதால் அவன் வெறி அறி சிறப்பினனாகத்தான் இருக்க முடியும். இருந்தும் அதைச் சொல்லி வேலனைக் காட்ட வேண்டிய அவசியம்? அப்படியானால் வெறி அறியா வேலர்களும் இருந்தனரா? இந்தக் கேள்விகளை யெல்லாம் மீறிக்கொண்டு எழும் மிகப்பெரிய கேள்வி காந்தள் என்றால் என்ன?

பேரகராதி காந்தளைக் கார்த்திகைப் பூ என்கிறது. பிற பொருள் களாகக் காமிகள் மடல் மா ஏறுதல், உழிஞைத்திணைத் துறைகளுள் ஒன்று, சவுக்காரம் என்பன சுட்டப்படுகின்றன.[3] 'காந்தள் என்பதனை மடலேறுவதற்குப் பெயராகக் கூறுவார் உளர் ஆதலின் வெறியாட்டு அயர்ந்த காந்தள் என்றார்' என்று தொல்காப்பியர் சொல்லாட்சிக்கு விளக்கம் தரும் முகத்தான் நம் முதல் கேள்வியின் ஒரு பகுதிக்கு விடை யிறுப்பதுடன் காந்தளின் பொருளைப் பிரித்துக் காட்டுகிறார் இளம் பூரணர்.[4] இதன் வழி காந்தள் வெறியாட்டில் சேர்ந்ததென அறி கிறோம்.

புறப் பொருள் வெண்பா மாலையில் உழிஞைத்திணையின் துறை களுள் ஒன்றாகக் காந்தள் காட்டப்படுகிறது. கருங்கடலில் சூரபன்மா

வைக் கொன்ற முருகனின் செழிப்புடைய காந்தட் பூவின் சிறப்பைச் சொல்லும் துறை இதுவெனக் கொளு பேகிறது.[5] காந்தள் முருகனுக் குரிய பூ. முருகன் கடல் போரில் சூடிய பூ. வெற்றி கருதிப் போரில் இறங்குவோர் தம்மை இன்னார் என அடையாளம் காட்டிக் கொள்ளும் திணைப் பூக்களோடு காந்தளும் சூடினர். காந்தள் வெற்றிக்குரிய பூவாகக் கருதப்பட்டது போலும். இப்பூவைச் சூடி வேலன் ஆடிய வெறியாட்டுதான் காந்தளா? நச்சினார்க்கினியர் அப்படித்தான் கருதுகிறார். 'காந்தளைச் சூடி வேலன் ஆடியதால்தான் காந்தள் என்றார் தொல்காப்பியர்' என்பது நச்சினார்க்கினியர் விளக்கம்.[6] வேலன் ஆடலுக்குக் காந்தட் கூத்தென்று மறுபெயரும் இருந்தது என் றும்,[7] காந்தளைச் சூடி ஆடியதால் காந்தள் எனப்பட்டது என்றும்[8] சில ஆய்வறிஞர்கள் கருதுகின்றனர்.

வேலனின் வெறியாடல் பற்றிப் பல சங்க இலக்கியப் பாடல்கள் பரக்கப் பேசுகின்றன. தலைவியின் காதல் அறியாத் தாயும் செவிலி யும் தலைவியை வாட்டுவது எதுவென்றறிய எடுத்துக்கொள்ளும் முயற்சிகளுள் ஒன்றே வெறியாடல். இந்த வெறியாடலை வேலன் செய்ததாகவே இலக்கியங்கள் பேசுகின்றன. வெறி அயர்ந்த களம், அதை அமைத்த முறை, அங்கு நிகழ்ந்த வெறியின் அமைப்பு, அதன் முடிவு என்று பல செய்திகள் விளக்கமாகக் கிடைக்கின்றன. இந்த வெறியாடலில் வேலன் காந்தள் சூடியிருந்தான். அது குருதி ஒண்பூங் காந்தள், வெண்காந்தள், கடவுட்காந்தள் என்று பலபடப் போற்றப் பட்டது.

காந்தள் சூடி வேலன் ஆடிய இந்த வெறியாடல் அகத்திணைக் குரியது. இதுதான் காந்தளென்றால் இதைப் புறத்திணைக்குரிய தாகத் தொல்காப்பியர் கூறியது எப்படிப் பொருந்தும்?இந்த இடத்தில் தான் இளம்பூரணர் சிக்கலைத் தீர்க்க உதவுகிறார்.'அன்றியும் காந்தள் என்பது மடலேறுதலான் அத்துணை ஆற்றாளாகிய பெண்பால் மாட்டு நிகழும் வெறி காந்தள் எனவும் பெயராம். இதனாலே காம வேட்கை யின் ஆற்றாளாகிய பெண்பாற் பக்கமாகிய வெறியும், அந்நிலத் துள்ளார் வென்றி வேண்டி ஆடும் வெறியும் கொள்ளப்படும்.'[9] இத னால் காந்தளை வெறிக் கூத்தாக இனம் கண்டு உறுதிப்படுத்திக் கொள்ள முடிவதுடன், இருவகையாகப் பிரிக்கவும் முடிகிறது. ஒன்று அகக்கூத்து. மற்றது புறக்கூத்து. அகக்கூத்தில் காமவேட்கை ஆற்றாளாகிய பெண் வெறியாடுகிறாள். புறக்கூத்தில் வெற்றி கேட்டு வெறியாட்டம் நிகழ்கிறது. இத்தெளிவான பிரிப்பால் காந்த ளைச் சூடி வேலன் ஆடிய தலைவி நோயறியும் வெறியாட்டு காந்த ளல்ல என்பதும், அது முற்றிலும் அகஞ்சார்ந்த வெறிக்கூத்து என் பதும் புலனாகின்றன.

அகஞ்சார்ந்த வெறியாட்டு இரண்டாகும். ஒன்று வேலன் ஆடியது. மற்றது காமவேட்கை ஆற்றாப் பெண் ஆடியது. இந்த இரண்டாம் வகை வெறியாட்டு காந்தள் எனப் பெயரிடப்பட்டதுடன் அகப்புறக் கூத்தாக இனம் பிரிக்கப்பட்டது. தலைவியின் ஒழுக்கப் பண்புகளை வரையறுக்கும் தொல்காப்பிய நெறியிலிருந்து சற்று வழுவிய நிலை இது என்பதால் அகப்புறமானது. மகளிர் வெறியாடியமைக்கு இலக்கியச் சான்றுகள் உள்ளன. ஆனால் அது எத்தகு வெறியாட்டு, அதன் அமைப்பு முறை என்ன, ஆடிய காரணம், பின்னணி யாவை என்பதற்கான விளக்கங்கள் பாடல்களில் இல்லை. இவ்வகை வெறியாட்டைச் சுட்டும் இளம்பூரணரே எடுத்துக்காட்டுப் பாடலைப் புறப்பொருள் வெண்பா மாலையில் இருந்துதான் தருகிறார். பெருந்திணைப் படலத்தில் வெறியாட்டு என்னும் தலைப்பிலுள்ள இத்துறையின் கொளு, தலைவி தலைவனின் அன்பு வேண்டித், தாய் அது அறியா வண்ணம், முருகனுக்கென்று ஆடிய வெறிக்கூத்து என்று இவ்வகைக் கூத்தை அடையாளம் காட்டுகிறது.[10]

'ஆற்றாமையாலே வெவ்விதாக நெடுமூச்செறிந்து தலைவன் தனக்குத் தண்ணளி செய்தலை நினைந்து மயக்கத்திணையுடைய அயல் மனை மகளிருடனே தன் தாயின் சொல்லுக்கு அஞ்சித் தன் இல்லத்தே தன் ஐயம் நீங்கும்படி வெறிக் கூத்தாடினாள்' என்று புறப்பொருள் வெண்பா மாலையின் வெறியாட்டுப் பாடல் விளக்கம் தருகிறது.[11]

சங்க இலக்கியப் பெண் வெறியாடியதற்கும் புறப்பொருள் காலத்துப் பெண் வெறியாடியதற்கும் பல வேறுபாடுகளைக் காண்கிறோம். 'கடியுண் கடவுட்கு இட்ட செழுங்குரல் அறியாதுண்ட மஞ்ஞை ஆடுமகள் வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்', என்ற குறுந்தொகைப் பாடல்[12], ஆடுமகள் வெறியாடும் அழகை மயிலைக்கொண்டு உவமிக்கிறது. உடல் சிலிர்த்து, நடுக்குற்று நிகழ்ந்த வெறியாடலின் மெய்ப்பாட்டு விளக்கத்தை இங்குப் பெறமுடிகிறது. ஆநிரை துள்ளியதுபோல் இவ்வெறியாட்டு இருந்ததாக மற்றோர் பாடல் பேசுகிறது[13]. வெறியாடிய மகளிர் பொலிவிழந்த காட்சியை அகம் காட்டுகிறது.[14] இவ்வெறியாடல், மகளிரால் தனித்த நிலையில் நிகழ்த்தப்பட்டதாகவே பாடல்கள் சுட்டுகின்றன. ஆனால் புறப்பொருள் வெண்பாமாலை காட்டும் மகளிர் வெறியாடல் குழு ஆடலாகக் காட்சியளிக்கிறது. சங்கப் பாடல்கள் சுட்டும் மகளிர் வெறி எதற்காக நடந்தது, எப்படி நடந்தது என்ற அடிப்படைகளை நம்மால் அறியக்கூடவில்லை. ஆனால் அந்த வெறியாட்டில் மயக்கம் இருந்தது. ஆடிய மகளிர் அழகுநலம் இழக்கும் அளவு விரைவும் சுழற்சியும் இருந்தன. புறப்பொருள் வெறியாட்டிலும் மயக்கம் இருந்தது. அதனாலே சுழற்சியும் இருந்திருக்கும். இது காமவயப்பட்ட பெண் காதலன் துணை தேடி

ஆடியதெனப் பாடல் தெளிவுறுத்துவதால் தவிப்பும், விரைவும் தவிர்க்க முடியாத மெய்ப்பாடுகளாய் இருந்திருக்கும்.

சங்க காலத்தில் வேலன் ஆடிய வெறியாட்டிற்கும், மகளிர் ஆடிய வெறியாட்டிற்கும் வேறுபாடுகள் இருந்தன. வேலன் வெறியாட்டில் வேலன் மட்டுமே களம் அமைத்து ஆடினான். அங்கே தலைவியின் நோய்க்குக் காரணம் அறிய வெறியாட்டு நிகழ்ந்தது. நடத்தியவள் தாய். சங்க மகளிரின் வெறியாட்டு எதற்காக நடந்தது என்பது தெரியவில்லையாயினும், பயன்பாட்டு முறையில் அது வேலன் வெறியாட்டிலிருந்து மாறுபட்டிருந்ததை உணர முடிகின்றது. இம்மகளிர் ஆடுமகளிர் என்றழைக்கப்பட்டிருப்பதால் இது தொழில்முறைக் கூத்தாக இருந்திருக்கலாமென்பதை ஊகிக்கலாம். இத் தொழில்முறைக் கூத்தே பின்னாளில் மகளிர்க்குத் தங்கள் உணர்வுகளை வெளிப்படுத்திக் கொள்ள ஒரு சாளரமாய் அமைந்து, அந்த முறை பலராலும் பின் பற்றப்பட்டிருக்கலாம் என்பதற்குப் புறப்பொருள் வெண்பாமாலை காட்டும் மகளிர் வெறியாட்டு சிறந்த சான்றாகும்.

காந்தள் காமவயப்பட்ட மகளிர் ஆடிய வெறிக்கூத்து என்றுரைக்கும் இளம்பூரணர், வென்றி கேட்டு ஆடும் வெறியும் காந்தளே என்கிறார். இவ்வகை வெறிக்கு அவர் சிலம்பில் சாலினி ஆடும் ஆடலை எடுத்துக்காட்டாகத் தருகிறார். சிலம்பின் வேட்டுவ வரி ஓர் அற்புதமான பகுதியாகும். கொற்றவை வழிபாட்டின் பல்வேறு படிநிலைகளையும் விளக்கமாகப் பேசும் இப்பகுதியில் எயினர் வெற்றி கேட்க, எயினப் பெண் சாலினி ஆடியபடியே, பலி தந்தால் வெற்றி கிடைக்கும் என்கிறாள். 'கலையாகிய ஊர்தியைப் பொருந்திய கொற்றவை தான் கொடுத்த வெற்றிக்கு விலையாகிய உயிர்ப்பலியை உண்ணக் கொடுப்பின் அல்லது நும் வில்லுக்குப் பொருந்திய வெற்றியைக் கொடுப்பாள் ஒருத்தி அல்லள்'; இது சாலினி கூற்று.[15] உடன் எயினர்கள் எயினப் பெண் ஒருத்தியைக் கொற்றவை போல் அழகு செய்து, பலிப்பொருட்கள் ஏந்தி, வழிபாடு செய்து பலியிட்டு மகிழ்கின்றனர். வேட்டுவர் வெற்றி வேண்டும் இக்கூத்தை ஆடியது பெண்.

காந்தள் கூத்தின் இரண்டு பிரிவுகளான வெறிக் கூத்தும், வெற்றிக் கூத்தும் பெண்களாலேயே நடத்தப்பட்டுள்ளன. ஒன்று காதல் சார்ந்த வெறி. மற்றொன்று வீரம் சார்ந்த வெறி.

புறப்பொருள் வெண்பா மாலையில் வெட்சித்திணைப் பகுதியில் வெறியாட்டு என்றொரு துறை.[16] அழகிய அணிகலன்களையுடைய மறக்குடி மகளிர், தம் கணவர் மேற்கொண்ட போர்த்தொழில் நன்றாகி முடிதற் பொருட்டு வேலனோடு வள்ளிக்கூத்து ஆடியதே வெறியாட்

டென்று இத்துறையின் கொளுப்பொருள் கூறுகிறது. கொளுவில் 'வேலனொடு வெறியாடியன்று', என்று மட்டுமே உள்ளது. 'வெட்சி மறவன் மனைவி முருகக் கடவுளைத் தன் உடலில் நிறுத்தி வேற் படையை உடைய முருகனுக்கு ஆடிய வள்ளிக்கூத்து கண்டால் சிவனும் மகிழ்வான்' என்று இத்துறைப் பாடலின் பொருள் பேசுகிறது. பாடலீல் வள்ளிக்கூத்து என்னும் பெயரே இடம் பெறவில்லை. 'ஆடும் வெறி' என்று மட்டுமே உள்ளது. கொளுவிலும், பாடலிலும் வள்ளிக்கூத்து குறிக்கப்படாத நிலையிலும், பொருள் விளக்கம் வள்ளிக்கூத்தை வலிந்து இணைத்து இன்பம் காண்கிறது. இந்த வெறியாட்டு வெற்றியைக் குறித்து வெற்றியை வேண்டி வெட்சிப் பெண்களால் நிகழ்த்தப்பட்டது.

இதனால் வெற்றி கேட்டு ஆடிய அல்லது வெற்றி கருதி ஆடிய காந்தள் வகை வெறிக்கூத்து சிலப்பதிகாரக் காலத்திலும், புறப்பொருள் காலத்திலும் பெண்களால் நிகழ்த்தப்பட்டது உறுதியாகிறது. பிற் காலத்தில் பெண்கள் மேற்கொண்ட இக்கூத்தைத்தான் தொல்காப்பியர் காலத்தில் வெட்சிக்காக வேலன் செய்தான்.

சங்க காலத்தில் வேலன் வெறியாடல் மட்டுமே செய்துள்ளான். வெற்றிக் கூத்தான காந்தளை ஆடியதற்குச் சான்றுகள் இதுவரையிலும் கிடைக்கவில்லை. மகளிர் வெறிக்கூத்து ஆடியுள்ளனர். அதைக் காந்தள் வகைக் காமவெறியின் முதற்படி என்றே கொள்ளலாம். இது வேலன் ஆடிய வெறியிலிருந்து வேறுபட்டது. இந்த நிலை தொல்காப்பியர் காலத்திலேயே இருந்திருக்க வேண்டும். அதனால்தான் வேலன் வெறியாட்டயர்ந்த காந்தள் என்று இனம் பிரிக்கவேண்டியிருந்தது. வெறியாட்டயர்ந்த காந்தள் என்று மட்டும் கூறியிருந்தால் அது மகளிர் வெறியாடலைக் குறித்துவிடலாமென்று தொல்காப்பியர் கருதியிருக் கலாம். காந்தள், வெறியாட்டு வகைக் கூத்தென்பதாலும், அதை மட லேறுதலில் இருந்து பிரித்துக் காட்டுவதற்காகவும் வெறியாட்டயர்ந்த காந்தள் என்று சிறப்பிக்க வேண்டியதாயிற்று.

'வெறி அறி சிறப்பின்' என்ற சொற்கள் பொருள் கருதியே தரப் பட்டுள்ளன. வெறியாட்டு பல வகைகளாக இருந்தமையாலும், வேலன் அவற்றை நன்கு அறிந்தவன் என்பதாலும், 'வெறி அறி' என்னும் சொற்கள் சேர்க்கப்பட்டன. இக்கூத்தின் வழி வேலன் சொல்லும் சொற்கள், அது எவ்வகை வெறியாய் இருப்பினும், வெவ்விய சொற்களாகவே அமைந்தமையின், 'வெவ்வாய்' என்ற சொல் பெறப் பட்டது. 'சிறப்பின்' என்ற சொல் காந்தளைச் சேர்ந்து பொருள் கூட்டும். வெறிவகைகளை நன்கறிந்து வெவ்விய சொற்களையுடைய வேலன் வெறியாடிச் செய்த சிறப்புக்குரிய காந்தள் என்பதே நூற்பா வின் பொருளாக அமையும்.

இந்நூற்பாவின் உதவியால் வெறி, வேலன் ஆடிய அகவெறி, மகளிர் ஆடிய அகப்புறவெறி, வேலனும் மகளிரும் ஆடிய புறவெறி என மூவகைத்தாய் இருந்தமை தெரியவந்துள்ளது. பின்னவை இரண்டும் காந்தள் என்ற பெயரின்கீழ் வகைப்படுத்தப்பட்டன. மேலும் தொல் காப்பியர் காலத்தில் வேலனே அகவெறியையும், புறவெறியையும் நிகழ்த்தியுள்ளான். அகப்புறவெறி தொல்காப்பியர் காலத்தில் நிகழ்ந் தமைக்குச் சான்றில்லை எனினும் சங்கப் பாடல்கள் கொண்டு, நிகழ்ந் திருக்கலாம் என்று ஊகிக்க இடமுண்டு. தொல்காப்பியர் காலத்தில் வேலன் என்னும் ஆணிடம் இருந்த புறவெறியாடும் சிறப்புரிமை சிலப் பதிகாரக் காலத்தில் சாலினி என்னும் வேட்டுவப் பெண்ணை அடைந்து விடுகிறது. இந்த மரபுமாற்றம் புறப்பொருள் வெண்பா மாலைக் காலத்திலும் பின்பற்றப்பட்டுள்ளது. பழைய நினைவின் எச்சமாக இங்கு வேலனும் சேர்த்துக்கொள்ளப்படுகிறான். தொல்காப்பியர் காலத்தில் சுட்டப்படாத அகப்புறவெறி, சங்க காலத்தில் தலை யெடுத்து, புறப்பொருள் காலத்தில் பரவலாகி, ஒப்புக்கொள்ளப்பட்ட ஓர் ஒழுகலாறாகவே இடம்பெற்றுவிடுகிறது.

காந்தள் கூத்தை கருங்கூத்தென்கிறார் நச்சினார்க்கினியர்.[17] கருங்கூத்தென்பது எதைக் குறிக்கிறதென்பதற்கு நச்சினார்க்கினிய ரிடம் விளக்கமில்லை. இதையே தம் நூலில் கையாளும் திரு. ஜாண் ஆசீர்வாதம், காந்தட்கூத்து, கண்டனத்திற்குரிய கூத்து என்ற பொருளில் கருங்கூத்தானதாகத் தவறாகப் பொருள் கொண்டு வழி மாறுகிறார்.[18] மேலும் இக்கூத்துவகையை இழிகுலத்தார் ஆடிய கூத்தாகவும் அவர் குறிக்கிறார். காந்தள் கூத்து இழிகுலத்தார் ஆடிய கூத்தென்று எந்த நூலும் குறிப்பிடவில்லை. சிலப்பதிகார உரையில் கூத்து பற்றிப் பேசும் அடியார்க்கு நல்லார், 'வெறியாட்டை விநோதக் கூத்தில்சேர்த்து ஏழென்பாரும் உளர்' என்கிறார்.[19] இதன் அடிப்படை யில் காந்தளை விநோதக் கூத்து வகைகளில் ஒன்றாகக் கொள்வதே பொருந்தும். சங்க வழிவந்த குரவை கூட விநோதக் கூத்தாகவே வகைப்படுத்தப்பட்டுள்ளது.[20] காந்தளைப் போலவே குரவையும் காமம், வெற்றி இவற்றைப் பொருளாகக் கொண்டது.[21] இது குரவைச் செய்யுள் பாட்டாகக், குழுவாய்க் கை பிணைந்தாடும் கூத்து வகை யாகும். மகளிர் ஆடிய காமக் காந்தள் புறப்பொருள் காலத்தில் குழு ஆடலாக மாறியது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

## அடிக்குறிப்புகள்

1 தொல்காப்பியம், பொருளதிகாரம் – இளம்பூரணம், கழக வெளியீடு, 1956, பக். 81.

2 தொல்காப்பியம், பொருளதிகாரம் – நச்சினார்க்கினியம், கழக வெளியீடு, 1970, பக். 142.

3 மதுரைத் தமிழ்ப் பேரகராதி, பக். 477.

4 தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், பக். 81.

5 புறப்பொருள் வெண்பா மாலை, கழக வெளியீடு, 1978, பக். 117.

6 தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், பக். 142.

7 ஜாண் ஆசீர்வாதம், தமிழர் கூத்துகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடு, 1985, பக். 88.

8 தொல்காப்பியம், ஆராய்ச்சிக் காண்டிகையுரை, பொருளதி காரம் - 1, பாவலரேறு ச. பாலசுந்தரம், தாமரை வெளியீட்டகம், தஞ்சாவூர், 1989, பக். 144.

9 தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணம், பக். 81.

10 புறப்பொருள் வெண்பா மாலை, பக். 333.

11 மேற்படி., பக். 334.

12 குறுந்தொகை, உ. வே. சா. உரை, 1937, பக். 276, பாடல் எண். 105.

13 புறநானூறு, உ. வே. சா. உரை, 1956, பக் 435, பாடல் எண். 259.

14 அகநானூறு, நித்திலக்கோவை. ந. மு. வேங்கடசாமி நாட்டார், நா. வேங்கடாசலம் பிள்ளை உரை, கழக வெளியீடு, 1944, பக். 726, பாடல் எண். 370, வரி, 14-15.

15 சிலப்பதிகாரம், உ. வே, சா. உரை, தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, 1985, பக். 311, வரி 16-17, பக். 321, உரை விளக்கம்.

16. புறப்பொருள் வெண்பாமாலை, பக். 29.
17. தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், பக்.143.
18. ஜாண் ஆசீர்வாதம், தமிழர் கூத்துகள், பக், 93.
19. சிலப்பதிகாரம், பக். 80.
20. மேலது, பக். 80.
21. மேலது, பக். 80.

## 7. பெருமைச் சுவடுகள்

தொல்லியல், கல்வெட்டியல், வரலாறு, கோயிற்கலைகள் போன்ற தொடர்புடைய துறைகளில் தம் உழைப்பை முதலாக்கித் தமிழகத்தின் வரலாற்றுப் பக்கங்களுக்குப் பெருமை சேர்த்த பேரறிஞர் பெருமக்களை ஆவணம் மிகுந்த நன்றியுணர்வுடன் நினைவு கூர்கிறது. வளரும் ஆய்வுத்தலைமுறையினர்க்கு அச்சான்றோர்களை அடையாளம் காட்டிடும் எளிய முயற்சியாக இப்பகுதி இடம் பெறுகிறது.

### கல்வெட்டாராய்ச்சி அறிஞர் தி. நா. சுப்பிரமணியம்

கலாநிதி க. கைலாசபதி
சிரேஷ்ட விரிவுரையாளர், இலங்கைப் பல்கலைக்கழகம்,
கொழும்பு வளாகம்.

தமிழியலின் சிற்சில துறைகளிலே இந்நூற்றாண்டில் நடைபெற்ற குறிப்பிடத்தக்க ஆராய்ச்சிகள் சில பல்கலைக்கழகங்களுக்குப் புறத்தே, தனிப்பட்ட ஆய்வாளர்களால் நிகழ்த்தப்பெற்றிருக்கின்றன. இத்தொடர்பில், வெ. சாமிநாதசர்மா, பொ. திருகூடசுந்தரம்பிள்ளை, ச. கு. கணபதி ஐயர், மயிலை சீனி வேங்கடசாமி, தி. வீரபத்திர முதலியார் முதலியோரைக் குறிப்பிடலாம். இவர்களோடு வைத்து எண்ணப்பட வேண்டியவர், சென்ற வருடம் முற்பகுதியில் மரணமடைந்த தி. நா. சுப்பிரமணியம் அவர்கள். பல்லாண்டுகளாக அடக்கமாக இருந்து பொதுவாக வரலாற்றியலுக்கும் சிறப்பாகக் கல்வெட்டாராய்ச்சிக்கும் அரும்பணி ஆற்றிவந்திருக்கும் சுப்பிரமணியன் ஆராய்ச்சியாளர் மட்டுமல்லர்; ஆக்க இலக்கியத்துறையிலும் வல்லவர்.

தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓடையலூரிலே அறுபத்து ஒன்பது வருடங்களுக்கு முன் (19-4-1904), இவர் பிறந்தார். இவரது முழுப் பெயர் திப்பிராஜபுரம் நாராயண சுவாமி சுப்பிரமணியன் என்பதாகும். திப்பிராஜபுரம், கும்பகோணம் வலங்கைமான் மார்க்கத்தில் குடந்தையிலிருந்து ஐந்தாவது மைலில் உள்ளது.

பள்ளிப்படிப்புக்குப்பின் கல்லூரியில் F. A. எனப்படும் (பழைய) இன்டர்மீடியட் தேர்வுடன் படிப்பை நிறுத்திக்கொண்டார். அக்காலத்திலேயே அவருடைய கவனம் சாசன ஆராய்ச்சியில் திரும்பியிருந்தது. பொழுதுபோக்காகத் தொடங்கிய ஈடுபாடு நாளடைவில் முழுநேர உழைப்பாகிவிட்டது. ஏனெனில் ஏறத்தாழ நான்கு தஸாப்தங்களுக்கு மேலாக சுப்பிரமணியம் அவர்கள் கல்வெட்டு ஆராய்ச்சியையே பிரதான பணியாகச் செய்துவந்திருக்கிறார்; கல்வெட்டாராய்ச்சித் துறையில் தவம்புரிந்த கர்மயோகி என்றுகூட அவரை வருணித்தல் தகும்.

மாணவனாக இருந்த காலத்திலே கல்வெட்டாராய்விற் கொண்டிருந்த ஆர்வத்தினால் அவர் பலருடன் தொடர்புகொண்டிருந்தார். அவர்களில் முக்கியமானவர் புதுச்சேரியில் இருக்கின்ற பிரெஞ்சுக் கல்லூரியிலே பேராசிரியராய் இருந்த ழுவோ துய்ப்ரேய் (Jouveau Dubreuil) என்பவர். பல்லவர்களைப்பற்றிய ஆராய்ச்சியிலே முன்னோடியாய் விளங்கிய அப்பிரஞ்சு ஆய்வாளர், இளம் வயதிலேயே சுப்பிரமணியம் சாசனவியலிற் காட்டிய ஆர்வத்தையும் அக்கறையையுங் கண்டு பலவாறு பாராட்டி உற்சாகப்படுத்தினாராம். 1966 ஆம்ஆண்டு தமிழ் வரலாற்றுக் கழக வெளியீடாக தி. நா. சுப்பிரமணியம் பதிப்பித்த பல்லவர் செப்பேடுகள் முப்பது என்ற நூல் வெளிவந்தது. பல்லவர்காலக் கட்டடங்கள், கல்வெட்டுக்கள் முதலியவற்றை ஆராய்ந்து கண்டறிந்து தமிழ் நாட்டாருக்குத் தெரியப்படுத்திய பிறநாட்டறிஞரின் செயல்முறை இறுதிவரை சுப்பிரமணியத்திற்கு முன்மாதிரியாய் இருந்தது என்று கருத இடமுண்டு; இரண்டாவது உலகப்போருக்கு முன்னதாக துய்ப்ரேய் தாயகம் திரும்புகையிற் சுப்பிரமணியத்தைப் பாரிஸ் நகருக்கு உடன் அழைத்துச் செல்ல விரும்பினாராம். ஆனால் பல காரணங்களினாற் சுப்பிரமணியம் போக இயலவில்லை.

படிப்பை முடித்துக்கொண்ட பின் இரண்டொரு வர்த்தக நிறுவனங்களிலே எழுதுவினைஞராகப் பணிபுரிந்தபின் டி. எஸ். சொக்கலிங்கத்தின் தினசரி பத்திரிகையிற் சேர்ந்து சில காலம் பணிபுரிந்தார். இக்காலத்திலிருந்து வரலாற்று நவீனங்கள் பல எழுதி வந்தார். தினசரிப் பத்திரிக்கை நின்றுபோனதும், சென்னை ஓலைச்சுவடி நூல் நிலையத்திற்கு, தென்னிந்திய கோயிற்சாசனங்கள் பதிப்பிக்கும் பாரிய பணியை ஏற்றார். இது தமிழாராய்ச்சிக்குக் கிடைத்த நற்பேறு என்பதில் ஐயமில்லை.

சுமார் இருபத்தைந்து வருடங்களுக்கு மேலாக அயராது (இடைவிடாது தொல்லை கொடுத்த நோய்களோடு போராடிக் கொண்டே) தென்னிந்திய கோயிற் சாசனங்கள் என்னும் மாபெரும் ஆராய்ச்சி நூலை மூன்று பாகங்களாக (நான்கு பகுதிகளில்) வெளியிட்டார். இந் நூலிற் பதிப்பிக்கப் பெற்ற சாசனங்களின் மொத்தத் தொகை 1299 ஆகும். இஃது ஓர் அசுர சாதனை என்பதில் ஐயமேயில்லை. இந்நூலின் மூன்று பாகங்களும் மும்மணிகள்; எனினும் அவற்றுள் இறுதிப் பாகம், தி. நா. சு. வின் பெரும்பணிக்குச் சிகரம் வைத்தாற்போலமைந்தது. சாசனங்களைத்தவிர, 'இராமாநுஜர் காலத்தைப் பற்றிய குறிப்பு', வரலாற்று ஆராய்ச்சிக் குறிப்பு', 'தென்னிந்திய சாசன இயல்', 'தமிழ் எழுத்துக்களின் வரிவடிவ வளர்ச்சி', 'சாசனச் சொல் அகராதி' என்பன அநுபந்தங்களாக உள்ளன. ஒவ்வொன்றும் அரிய தனி நூலாக விளங்கும் தகைமை உடையன; ஓலைச்சுவடி நூல் நிலையத்தின் மற்றொரு

வெளியீடாக 1959 இல் சாமுத்திரிகா லட்சணம் என்ற செய்யுள் நூலை ஆராய்ச்சியுரையுடன் பதிப்பித்தார். கோயிற் சாசனப் பதிப்பு முடிந்த பின், குடும்பத்தில் நிகழ்ந்த சில துன்பநிகழ்ச்சிகளினாலும், உடல்நலக் குறைவாலும், வீட்டை விட்டுச் செல்லாமல் தம்முடைய கவனம் முழுமையையும் கல்வெட்டு வரலாற்று ஆராய்ச்சியிற் செலவிட்டார்.

அதுமுதல் ஏறக்குறைய பத்தாண்டுக் காலம் அவர் பல்லவர் வரலாற்றிலும். தென்கிழக்கு ஆசியாவில் தமிழக மன்னர்களுடைய ஆட்சி பற்றிய ஆராய்ச்சியிலும் முழுவேகத்துடன் ஈடுபட்டார். இக்காலப் பகுதியில் அவர் கண்ட முடிபுகள் சில, இத்துறையில் ஈடுபட்டுள்ள ஆராய்ச்சியாளர் சிலரைச் சிந்திக்க வைத்துள்ளன; தாம் கண்டறிந்த செய்திகளையும், முடிபுகளையும் ஆங்கிலத்தில் வெளியிடுவது பயனுடைத்து எனக் கருதி 'தென் கிழக்கு ஆசியாவும் தமிழ் நாடும்' என்ற தொடரில் ஆறு புத்தகங்கள் எழுதினார்.

1. Pallavas of Kanchi in S. E. Asia
2. Pandyas in S. E. Asia
3. Cholas in S. E. Asia
4. Cheras in S. E. Asia
5. Srivijaya or Srivishaya (Merchant Guild)
6. Tamil nadu-Twelve and Eighteen

இவற்றில் முதல் புத்தகமே இதுவரை வெளிவந்திருப்பதாய்த் தெரிகிறது. வெளியிட்டோர் சுதேசமித்திரன் பதிப்பகத்தார். தமிழ் நாட்டிலே வரலாற்று ஆராய்ச்சிக்கு உதவும் பொருட்டு நண்பர்கள் சிலருடன் சேர்ந்து ஏழுவருடத் திட்டம் ஒன்று தயாரித்து மாநில, மத்திய அரசாங்க உதவியையும் பெற்று தமிழ் வரலாற்றுக் கழகம் என்ற நிறுவனத்தை உருவாக்கினார். ஆனால் அந்நிறுவனத்தில் நடந்த கசப்பான சம்பவங்களினால் அதினின்றும் வெறுப்புடன் வெளியேறினார்.

கல்வெட்டு வரலாற்று ஆராய்ச்சி விஷயங்களில், கே.ஜி.கிருஷ்ணன், கலாநிதி என். வேங்கடராமையா, கே.ஏ. நீலகண்டசாஸ்திரி, கே.ஆர். ஸ்ரீநிவாசன், கே.வி. சௌந்தரராஜன், டி.வி. மஹாலிங்கம், கே.கே. பிள்ளை, ஸ்ரீராமதேசிகன், இரா. நாகசாமி ஆகியோருடன் அடிக்கடி தொடர்பு கொண்டு உழைத்தார். உ.வே. சாமிநாத ஐயருடனும் சில காலம் தொடர்பு கொண்டு இலக்கிய ஆராய்ச்சிநிகழ்த்தியிருக்

கிறார். ஆக்க இலக்கியங்களும் ஆராய்ச்சி நூல்களுமாகப் பதினெட்டு நூல்கள் அவர் எழுதி வெளி வந்துள்ளன.

1. பண்டைத்தமிழ் எழுத்துக்கள் (1938)
2. கங்கை கொண்ட சோழன்
3. பல்லவ மகேந்திரவர்மன்
4. ஹைதர் காலம்
5. தோட்டியை மணந்த அரசகுமாரி
6. காட்டு மல்லிகை (நாட்டார் பாடல் தொகுப்பு)
7. மயூரன்
8. சின்னாதேவி } நாடகங்கள்
9. ராஜசுந்தரி }
10. நாட்டியக்காரி
11. கோயிற்சாசனங்கள் (பதிப்பு)
12. பல்லவர்செப்பேடு முப்பது (பதிப்பு)
13. அமரதீபம்
14. பெண்வேஷம் (சீனக்கதை மொழி பெயர்ப்பு)
15. Pallavas of Kanchi
16. கட்டபொம்மு
17. தமிழகம் பஞ்சாயத்தின் தாயகம்
18. சாமுத்திரிகா லட்சணம்

1930ஆம் ஆண்டளவிலே எழுதத் தொடங்கிய தி. நா. சு. மேற் காட்டிய நூல்களைவிட, சஞ்சிகைகளுக்கு எழுதியுள்ள கட்டுரைகளும் கதைகளும் குறிப்புகளும் நூற்றுக்கணக்கானவை. ஆக்க இலக்கியத் திலாயினும் சரி, அறிவு இலக்கியத்திலாயினும் சரி, ஆய்வறிவுக்கும், உண்மைக்கும், நேர்மைக்கும் அவர் அளித்த முக்கியத்துவமே, இன்றைய தமிழ்நாட்டு ஆராய்ச்சியாளர் பெரும்பாலாரிலிருந்து அவரை வேறுபடுத்துகிறது. இது விஷயத்தில் அவரை எஸ். வையாபுரிப்பிள்ளை யுடன் ஒப்பிடுதல் பொருத்தமாயிருக்கும்.

நவீன தமிழிலக்கியத்திலே சுப்பிரமணியன் அவர்களது ஸ்தானம் இன்னும் தகுந்த முறையில் நிர்ணயிக்கப் படவில்லையாயினும் தமிழாராய்ச்சித் துறையில் அவருக்குரிய உறுதியான இடம் பற்றி

எத்தகைய சர்ச்சைக்கும் இடமில்லை. சுமார் முப்பத்து ஐந்து வருடங்கட்கு முன்னரே (1938) பண்டைத்தமிழ் எழுத்துக்கள் என்ற நூலைத் தமிழில் எழுதித் தமிழியல் உலகைத் தமக்குக் கடமைப்படுத்திவிட்டார். பல காரணங்களுக்காக இந்நூல் விதந்து குறிப்பிடத்தக்கது. அதற்கு முன் ஏ. ஸி. பெர்ணல் என்ற மேனாட்டு ஆய்வாளரும், து. அ. கோபிநாதராயர் என்ற தென்னிந்தியருமே தென்னகத்தில் எழுத்துக்களின் வரி வடிவ வளர்ச்சி பற்றிக் குறிப்பிடத்தக்க ஆராய்ச்சி நூல்கள் எழுதியிருந்தனர். அவர்கள் இருவரும் ஆங்கிலத்திலேயே எழுதினர். 'ஆராய்ச்சி மொழி ஆங்கிலமே' என்றிருந்த தி.நா. சுப்பிரமணியன் தனது நூலைத் தமிழில் எழுதி உதவினார். அதற்குப் பின்னரும் கலாநிதி ஸி. சிவராமமூர்த்தி என்பார் 1952இல் 'இந்திய சாசனவியலும் தென்னிந்திய எழுத்துக்களும்' என்ற நூலை ஆங்கிலத்திலேயே எழுதினார். அது சென்னை அரசாங்க நூதன சாலை வெளியீடுகளில் ஒன்றாகப் பிரசுரிக்கப்பட்டுள்ளது. தாய் மொழி மூலம் உயர்கல்வியும் ஆராய்ச்சிகளும் நடைபெற வேண்டும் என்று சுப்பிரமணியன் ஆரம்பத்திலிருந்தே கருதி வந்தமைக்கு இம்முயற்சியும் சிறந்த சான்றாகும்.

என்னைப் பொறுத்தவரையில் திரு. சுப்பிரமணியனது சிறப்பியல்பு அவரது நடுவுநிலைமையாகும். கடந்த முப்பது நாற்பது வருடங்களாகத் தமிழகத்து 'ஆய்வாளர்' பலரை ஆட்டிப்படைத்து வரும் மனக்கோட்டங்களுக்கும் துவேஷங்களுக்கும் அப்பாற்பட்டவராய் ஒருபாற் கோடாமல் விடயங்களை நோக்கி ஆராய்ந்தார் அவர். பிராமண சமூகத்தைச் சேர்ந்தவராய் இருந்தபோதிலும் சமஸ்கிருத வெறி அவரிடத்துக் கிஞ்சித்தும் காணப்படவில்லை. அதைப்போலவே ஆராய்ச்சியைப் பொழுது போக்காய்க் கொண்டவராய் இருந்தபோதும் மேற்போக்காகக் கலையில் ஈடுபட்ட dilettante அல்லர். கண்டிப்பான அளவு கோல்களைக் கடைப்பிடிப்பவராய் விளங்கினார்; போலிப் பேச்சுப் பாவனையும் அவரிடம் இருந்ததில்லை.

அவர் செய்த செயற்கரிய பணிகளையும் செய்ய விரும்பியவற்றையும் சிந்திக்கும்பொழுது அறுபத்தெட்டு வயதில் (30-1-1972) அகால மரணமடைந்தார் என்றே கூறத் தோன்றுகிறது.*

---

*நன்றி: 'பூர்வகலா', எண். 1, 1973, யாழ்ப்பாணத் தொல்பொருளியல் கழக இதழ், யாழ்ப்பாணக் கல்லூரி, வட்டுக்கோட்டை.

## 8. ஐயம் தவிர்க

கல்வெட்டு, தொல்லியல், வரலாறு, இலக்கியம், கோயிற் கலைகள் போன்ற துறைகளில் ஆய்வாளர்களுக்கும், ஆர்வலர்களுக்கும் ஏற்படும் நியாயமான ஐயங்களைத் தெளிவு செய்வதற்காகவே இப்பகுதி தொடங்கப்படுகிறது. ஐயங்களை ஆய்வர்கள் ஆவணத்திற்கு எழுதினால், அவ்வத் துறைசார்ந்த அறிஞர் பெருமக்களைக் கேட்டு விளக்கங்களை ஆவணம் வெளியிடும். கல்வெட்டுகளில் ஏற்படும் ஐயங்களை எழுதும்போது குறிப்பிட்ட கல்வெட்டின் முழுப்பகுதியையும் அனுப்பவேண்டும். சிற்பங்கள், கட்டட அமைப்புகள், பிற தொல்லியல் சான்றுகள் குறித்த ஐயமென்றால், ஒளிப்படங்கள், ஐயத்திற்குரிய பொருள் பற்றிய தெளிவான விளக்கம், வரைபடம் ஆகியவற்றை இணைத்து அனுப்பலாம்.

இந்தப் பகுதிக்கான முதலிரு கேள்விகளை டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கோயிற்கலைப் பட்டயக் கல்வி மாணவர்கள் அர. அகிலா, இரா. லலிதாம்பாள் ஆகியோர் அனுப்பியுள்ளனர்.

முதற் கேள்வி: அர. அகிலா, திருச்சி-620 005.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிப

2 ன்மற்க்கு யாண்டு பதினாலாவ

3 து உறையூர்க் கூற்றத்து நின்று

4 துணிஞ்சு போய தரம்பற்றூர் னா

5 ட்டு படையேவிய பிரம்மதேயம்

6 ஈசாந மங்கலத்து நன்பகலாவணத்

7 துயன்ற பூமிவிலை ஆவணமாவது இவூர்

8 வாச்சியன் சாத்தஞ் சேன்தநேன் எங்

9 கள் பிரமதேயத்து நீர்நிலத்து தென் புல

10 த்து பள்ளத்து உலகு வாக்கால் வட உல

11 .கு வாக்கால் செய் நான் சிரிதனம் பெற்று உடை

12 ய அரைக்காலும் நானே விலை கொண்டு உ

13 டைய அரைக்காலும் ஆக இக்கால் செய்யும்

14 நங்கை பூதி ஆதிச்ச பிடாரியார்க்கு விற்றதுக்கு இசைஞ்ச எல்லை வ

15 ட உலகுவாயும் மற்றும் ஊர் அறிஞ்ச பந்நான்கு எல்லையில்

16 அகப்பட்ட கால் செய்யும் உண்ணிலம் ஒழிவின்றி நங்கை பூ

17 தி ஆதிச்ச பிடாரியார்க்கு விற்று (கல்வெட்டு முடிவடையவில்லை)
[தெ. க. தொ. VIII - 604]

i) இக்கல்வெட்டில் அடிக்கோடு இடப்பெற்றிருக்கும் பகுதியின் திரண்ட பொருள் என்ன? (கல்வெட்டு எண் 612இல் இதே பகுதி காணக்கிடக்கிறது)

ii) இதுபோல் வேறெந்த ஊரைச் சார்ந்த கல்வெட்டுகளிலாவது குறிப்புகள் கிடைக்கின்றனவா?

[இவ்வினாக்களைத் துறைவல்ல நால்வருக்கு அனுப்பியிருந்தோம். நால்வரும் விடையளித்துள்ளனர். விடையனுப்பிய பெருமக்கள் அனைவர்க்கும் ஆவணத்தின் நன்றி–ஆர்.]

**திரு. என். சேதுராமன், கும்பகோணம்.**

உறையூர் கூற்றத்து (......?) பிர்மதேயம் ஈசான மங்கலம். இங்கிருந்து துணிந்து தரம்பற்றூர் நாட்டின் மீது படையெடுத்துள்ளனர் (சோழர்). தரம்பற்றூர் நாடு பாண்டி மண்டலமா, கொங்கு மண்டலமா, நடுவில் தொண்டை மண்டலமா தெரியாது. இது ஆதித்யா கல்வெட்டாகலாம். ஆனால் தொண்டை, நடுவில் மண்டலம், பாண்டி மண்டலம் இருக்க வழியில்லை. தரம்பற்றூர் நாடு கொங்கு அல்லது சேலம், தர்மபுரி வட்டாரம் ஆக இருக்கலாம். கல்வெட்டுகளில் உள்ள முழு நிலப்பரப்பியல் (Geography) தெரிந்தால்தான் தரம்பற்றூர் நாட்டை அறியமுடியும்.

செயசிங்க குலகாலபுரம், மஹிபால குலகாலச்சேரி, சோழந்தக சதுர்வேதி மங்கலம் இது போல ஏதோ ஒரு படையெடுப்பில் கண்ட வெற்றியை முன்னிட்டு ஈசான மங்கலத்திற்கு ஓர் அடையாக இது வந்திருக்கலாம்.

திரு. இல. தியாகராசன்,
வரலாற்றுத்துறை, அரசு கலைக் கல்லூரி, அரியலூர்.

கருத்து ஒன்று :

இத்தொடருக்கு பின்வரும் பொருளைக் கூறலாம். 'துணிஞ்சு போய்' என்ற சொல்லுக்குத் துணித்தல், துண்டாக்குதல், பிரித்தல், தனித்துநீக்குதல், எனப் பொருள்கொண்டால் பிரம்மதேயம் ஈசான மங்கலம் எனும் ஊர் உறையூர்க் கூற்றம் எனும் நாட்டுப் பிரிவிலிருந்து பிரிக்கப்பட்டு (அ) நீக்கப்பட்டு தரம்பற்றூர்நாடு எனும் நாட்டுப் பிரிவின்கீழ் சேர்க்கப்பட்டது எனலாம்.

ஒரு நாட்டுப்பிரிவின் கீழ் இருந்த ஊர் வேறு ஒரு நாட்டுப்பிரிவுக்கு மாற்றப்பட்டதைப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

சான்றுகள் :

(i) ''கிடாரங்கொண்ட சோழவளநாட்டிந் நின்றும் வேறிட்டு விக்கிரமசோழ வளநாட்டிலே வண்ணமான மதுராந்தகநல்லூர்.'' (61/1914, என்னால் படிக்கப்பட்ட கல்வெட்டு)

இதில் ஊர் மாற்றப்பட்ட செய்தி 'வேறிட்டு' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

(ii) ''வடகரை அண்டாற்றுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவதானந் திருப்புறம்பியம்'' (79/1897)

இதன்படி திருப்புறம்பியம் எனும் ஊர் தேவதானம் (இறையிலி) என்ற தகுதி உடைய கிராமமாக மாற்றப்பட்டுவிட்டபடியால் அது கூற்றம் (நாடு) எனும் வருவாய்த்துறைப் பிரிவிலிருந்து நீக்கப்பட்டது என அறியலாம்.

மேற்சொன்னவாறு பிரிக்கப்பட்ட செய்தி குறிப்பிடப்படாமலேயே ஊர்கள், முதலில் ஒரு நாட்டுப்பிரிவின் கீழும், பிறகு மாற்றப்பட்டபின் வேறு ஒரு நாட்டுப் பிரிவின் கீழும் இருந்துள்ளதையும் கல்வெட்டுகளில் காணலாம்.

சான்றுகள் :

(i) ''தாமர்க்கோட்டத்து வல்லநாட்டு ஸ்ரீ கோவிந்தபாடி நின்றருளிய பெருமானடிகள்'' (முதலாம் இராசராசன், 19-வது ஆண்டு, 322/1906)

ii) ''மணையிற்கோட்டத்து புரிசைநாட்டு ஸ்ரீ கோவிந்தபாடி நின்றருளிய பெருமானடிகள்'' (முதலாம் இராசேந்திரன், 21-வது ஆண்டு, 317/1906).

அடுத்து ஒரு ஊரிலிருந்து பெறப்படும் வருவாய் (முதல்) முதலில் ஒரு நாட்டுப் பிரிவின் கணக்கிலும், அவ்வூர் மாற்றப்பட்ட பிறகு மாற்றப்பட்ட நாட்டுப்பிரிவின் கணக்கிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சான்றுகள் :

i) ''விருதராஜபயங்கர வளநாட்டு மேற்காநாட்டு ஜயங்கொண்ட சோழச் சதுர்வேதிமங்கலத்து திருத்தினை நகர் (116A/1904)

ii) ''விருதராஜ பயங்கர வளனாட்டு நின்றும் இராஜராஜவளநாட்டு முதலான மேற்காநாட்டு பிரம்மதேயம் ஜயங்கொண்ட சோழச் சதுர்வேதிமங்கலத்துப்பிடாகை திருத்தினை நகர் (116/1904)

மேலே எடுத்துக் காட்டப்பட்டுள்ள கல்வெட்டுக்களின் பின்னணியில் பார்த்தோமானால் ஈசானமங்கலம் எனும் ஊர் உறையூர் கூற்றம் எனும் பிரிவிலிருந்து தரம்பற்றூர் நாட்டுப் பிரிவுக்குக்கொண்டு செல்லப் பட்டுள்ளது எனக்கொள்ளலாம்.

கருத்து – இரண்டு :

'தரம்பற்றூர் நாட்டுப் படை ஏவிய' என்ற தொடர் ஈசானமங்கலத்து ஊர்ப் பெயருக்கு முன் உள்ளது. படை ஏவிய என்பதற்கு சாதாரணமாக படை செலுத்திய அல்லது இராணுவ நடவடிக்கை மேற்கொண்ட எனக்கூறலாம். அதாவது உறையூர் கூற்றத்தின் கீழ் இருந்த ஈசானமங்கலம் என்ற ஊர் தரம்பற்றூர் நாட்டின் படையை (துணிந்து முன்னின்று?) நடத்திச் சென்றது என இத்தொடர் முழுவதுக்கும் பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு இக்கருத்தைக் கூறி இக்கல்வெட்டை ஆராய்ந்துள்ள பேராசிரியர் எ. சுப்பராயலு இத்தகைய பொருளில் இத்தொடர் எழுதப்பெற்றிருக்க முடியாது என்றும், உறையூர் கூற்றத்து ஊரான ஈசானமங்கலம் ஏதோ ஒருவகையில் தரம்பற்றூர் நாட்டுடன் தொடர்புடையதாக இருந்துள்ளது என்று மட்டும் கூறலாம் என்றும் குறிப்பிட்டுள்ளார். (The Political Geography of the Chola Country P.24)

ஈசானமங்கலத்துக் கல்வெட்டு போன்றே வேறுசில ஊர்க் கல்வெட்டுக்களும் உள்ளன.

i) '' இடையாற்று நாட்டு திருக்கடைமுடி மகாதேவர்க்கு ஆர்க்காட்டு கூற்றத்துப் படை ஏவிய தத்தக்குடி, தத்தக்குடி உடையான் தாமோ திரன்னய தீரன் ஒரு நொந்தா விளக்கு '' (தெ. க. தொ. VII-511)

இதில் ஈசானமங்கலத்து கல்வெட்டு கூறுவதுபோன்று ' துணிஞ்சு போய் ' (அதாவது பிரிந்துபோய் என்ற பொருளில்) என்ற சொல் இல்லை. அடுத்து,

i) '' அம்பர் நாட்டுப் படை ஏவிய திருக்கடவூர் '' (முதலாம் இராச ராசன் 16-வது ஆண்டு, தெ. க. தொ. XXII-27)

ii) ''ஆக்கூர் நாட்டுத் திருக்கடவூர்'' (இரண்டாம் குலோத்துங்கன், 4-வது ஆண்டு, 39/1906)

iii) '' ஆக்கூர் நாட்டு அம்பர் நாட்டு பட[யெ]விய திருக்கடவூர் ''. (இரண்டாம் இராஜராஜன், 14-வது ஆண்டு. தெ. க. தொ. XXII-41)

திருக்கடவூர், தத்தமங்கலம் பற்றிய கல்வெட்டுக்களை ஆய்ந் துள்ள பேராசிரியர் எ. சுப்பராயலு ஈசானமங்கலத்துக் கல்வெட்டுக்கு கூறியுள்ள கருத்தையே கூறியுள்ளார் (பக்கம் 24).

திருக்கடவூர் பற்றி

ஆனால் படை ஏவிய எனும் தொடர் திருக்கடவூரைப் பொறுத்த வரையில் ஓரளவுக்கு சமய அடிப்படையில் பொருந்திவருகிறது எனக் கூறலாம். அதாவது சிவலிங்கத்தைத் தழுவிநின்ற மார்க்கண்டேயன் மீது யமன் பாசக் கயிறை வீசுகிறான். மார்க்கண்டேயனைக் காப் பாற்ற சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்ட சிவன் யமனைக் காலால் உதைத்துக் கீழே தள்ளி சூலாயுதத்தால் அவனைக் கொன்றார் என இவ்வூர் தலபுராணமும், உற்சவ மூர்த்தி, சிற்பங்களும் தெரிவிக்கின் றன. இவ்வாறு சிவன் தன் படைகொண்டு யமனைக் கொன்றதால் படைஏவிய திருக்கடவூர் எனப் பெயராயிற்று என ஊகிக்கலாம்.

வியாக்கிரபாதர் (புலியின் பாதங்களைப் போன்ற கால்களை உடையவர்) வழிபட்ட தலமாக புலியூர் என்ற பெயரில் பல ஊர்கள் உள்ளன (திருப்புலிவனம், பெரும்பற்றப்புலியூர், ஒமாம்புலியூர், கானத்தம்புலியூர், எருக்கத்தம்புலியூர், பாதிரிப் புலியூர்). அதுபோலவே மார்க்கண்டேய புராணத்தினை அடிப்படையாகக் கொண்டு, படை ஏவிய கடவூர், படைஏவிய தத்தங்குடி, படைஏவிய ஈசான மங்கலம் என்ற ஊர்ப்பெயர்கள் ஏற்பட்டிருக்கலாம்.

புலவர் செ. இராசு,
இணைப் பேராசிரியர், கல்வெட்டியல்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்.

திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருச்செந்துறை சந்திரசேகரர் கோயிலில் உள்ள இரு கல்வெட்டுக்களில்,

'உறையூர்க் கூற்றத்து நின்றும் துணிந்துபோய தரம்பற்றூர் நாட்டுப் படைஏவிய பிரமதேயம் ஈசான மங்கலத்துத் திருச்செந்துறை'

என்ற தொடர் காணப்படுகிறது. இவ்விரு கல்வெட்டுக்களும் 9-10 ஆம் நூற்றாண்டுக்குரியவை. இவ்விரு கல்வெட்டுக்களிலும் உள்ள அரிய தொடர்கள்பற்றி 'சோழநாட்டு அரசு நிலவியல்' (Political Geography of the chola country) என்னும் தன் ஆங்கில நூலில் பேராசிரியர். எ. சுப்பராயலு மிகவும் விளக்கமாக விவாதித்துள்ளார்.

## பொருள் கொள்ளல்

திருச்செந்துறையின் வேறு பெயர் ஈசான மங்கலம். அல்லது ஈசானமங்கலத்தின் ஒரு பகுதியாகவும் திருச்செந்துறை இருக்கலாம். ஈசானமங்கலம் ஒரு பிரமதேய ஊர். அது உறையூர்க் கூற்றத்திலிருந்து பிரிந்துசென்ற தரம்பற்றூர் நாட்டைச் சேர்ந்தது. பிரமதேயம் ஈசான மங்கலத்திற்குப் 'படை ஏவிய' என்ற அடைமொழி உண்டு என இவ்வாறு ஒருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

## பிரிந்து சென்றது எது?

உறையூர்க் கூற்றத்திலிருந்து பிரிந்து சென்றது தரம்பற்றூர் நாடா? தரம்பற்றூர் என்ற நாட்டுடன் இணைந்த பிரமதேயம் ஈசான மங்கலமா? இருவகையாகவும் பொருள் கொள்ள மேற்கண்ட தொடர் இடம் தருகிறது.

உறையூர்க் கூற்றத்திலிருந்து திருச்செந்துறை, ஈசானமங்கலம் என்று பிரமதேய ஊராகப் பெயர் மாற்றம் பெற்று நாட்டிலிருந்தும் பிரிந்து சென்று 'தனியூர்' போல அமைந்திருக்கலாம். நாட்டு ஊர்கள் தான ஊராக மாறும்போது நாட்டு ஊரிலிருந்து மாற்றப்படுவதைக் கொங்கு அரையநாட்டில் காணுகிறோம்.

இவ்வாறு பிரிந்து செல்லுதல் பழங்காலத்தில் பல இடங்களில் நிகழ்ந்துள்ளது. 'வடகரை இராசேந்திரசிங்க வளநாட்டு அண்டாட்டுக் கூற்றத்து நின்று நீங்கிய தேவதானம் திருப்புறம்பியம்' என்ற தொடரால் இதனை அறியலாம்.

ஒரூரைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக வேறோர் ஊரைப் பதிலாக அளிக்கும் வழக்கத்தைக் கல்வெட்டு 'தலைமாறுவித்த' 'தலைமாறுவிட்ட' என்று குறிக்கும்.

ஒரு வளநாடு வேறு வளநாடாகப் பெயர் மாற்றம் பெறுவதும், ஒரு வளநாட்டின் பகுதி வேறு வளநாடாகப் பிரிந்து பெயர் மாறுவதும் ஒரு நாட்டிலிருந்து வேறு தனி நாடுகள் உருவாவதும் தமிழகம் எங்கும் பண்டைக் காலத்தில் நடைபெற்றுள்ளது.

படை ஏவிய

இத்தொடரின் பொருள் வெளிப்படையாகவே உள்ளது. பிரம தேயம் ஈசானமங்கலம் யார்மீது எப்போது எதற்காகப் படை ஏவியது என்ற விபரம் தெரியவில்லை.

படை ஏவிய பிரமதேயம் ஈசானமங்கலம் தரம்பற்றூர் நாட்டைச் சேர்ந்ததாகவும் கொள்ளலாம். அல்லது தரம்பற்றூர் நாட்டின்மீது படை ஏவியதாகவும் கொள்ளலாம். முதலில் உள்ளவாறு பொருள் கொண்டால் ஈசானமங்கலம் தரம்பற்றூர் நாட்டைச் சேர்ந்ததாகவும், இரண்டாம் வகையாகப் பொருள்கொண்டால் ஈசானமங்கலம் தரம் பற்றூர் நாட்டைச் சேராததாகவும் கொள்ளலாம்.

திருக்கடையூர்க் கல்வெட்டில்,

'அம்பர் நாட்டுப் பட ஏவிய திருக்கடையூர்'
'அம்பர் நாட்டுள் பட ஏவிய திருக்கடையூர்'

என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இரண்டாம் தொடரில் பதிப் பாசிரியர் ஐகாரக் குறியைச் சேர்த்துப் 'படை ஏவிய' என்று படித் துள்ளார்.

[புலவர் செ. இராசு, பொருள் கொள்ளல் என்ற தலைப்பின் கீழ், 'திருச்செந்துறையின் வேறு பெயர் ஈசானமங்கலம், அல்லது ஈசான மங்கலத்தின் ஒரு பகுதியாகவும் திருச்செந்துறை இருக்கலாம்' என்று கூறியுள்ளார். ஈசானமங்கலத்தின் ஒரு பகுதியாகத்தான் திருச்செந் துறை இருந்தது. அதில் ஐயத்திற்கே இடமில்லை. ஈசானமங்கலம் என்ற பரந்துபட்ட நிலப்பரப்பின் மற்றொரு பகுதியாகத் திருப்பராய்த் துறை இருந்தது. 'பிரம்மதேயம் ஈசானமங்கலத்துப் பருடையோம், இவூர் திருச்செந்துறைக் கற்றளிப் பெருமாநடிகளுக்கு' என்ற கல்வெட்டு வரியும் (தெ. க. தொ. VIII–630), 'ஈசான மங்கலத்துத் திருச்செந் துறை' என்ற கல்வெட்டு வரியும், (தெ. க. தொ. III-96), 'ஈசான மங்கலத்துப் பராய்த்துறை' என்ற கல்வெட்டு வரியும் (தெ. க. தொ. VIII-566) இதை மெய்ப்பிக்க வல்லன - ஆர். ]

திரு. நடன. காசிநாதன்,
இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்பொருள்ஆய்வுத்துறை, சென்னை.

உறையூர்க் கூற்றத்தில் இருந்து துண்டிக்கப்பட்டு (பிரிந்து போய்) தரம்பற்றூர் நாட்டில் சேகரிக்கப்பட்டுள்ள படை ஏவிய பிரமதேயம் ஈசான மங்கலத்து என்பது பொருள்.

படை ஏவிய பிரமதேயமாக விளங்கிய ஈசானமங்கலம் முதலில் உறையூர்க் கூற்றத்தில் இருந்ததாகவும், பின்னர் அது மாற்றம் செய்யப் பட்டு தரம்பற்றூர் நாட்டில் சேர்க்கப்பட்டதாகவும் பொருள் கொள்ள லாம். பிரமதேயமாக விளங்கிய ஈசானமங்கலம் பிற்காலத்தில் அரச னுக்குப் படை அனுப்பிய காரணத்தினால் 'படை ஏவிய பிரமதேய ஈசானமங்கலம்' என்ற பெயர் பெற்றிருக்கலாம். மற்றொரு கல்வெட் டில் படை ஏவிய 'திருக்கடவூர்' என்று வழங்கப்பட்டிருப்பதாகவும் அறிய முடிகிறது.

இரண்டாம் கேள்வி: இரா. லலிதாம்பாள், தஞ்சாவூர் 613 001.

1 .........ரிஷப நாயற்று அபர பக்ஷத்து தெசமியும் புதன் கிழமையும் பெற்ற திருவோணத்தி நாள் வடகரை இராசஇராச வளநாட்டு வடவழிநாட்டு உடையார் திருப்பைஞ்ஞீலியுடைய நாயனார் கோயில் ஆதி சண்டேசுர

2 தேவர் தேவகன்மி கோயிற் கணக்கநுக்கு மிலாடாகிய செனநாத வளநாட்டு ஆற்றூர் கூற்றத்து வீரசோழநல்லூர் சிறுபாக்கமுடை யாந் சோழந் களப்பாளராயனேன் நிலவிலைப் பிரமாண இசைவு தீட்டு இராசராச வளநாட்டு பாச்சில் கூற்றத்து மேல்பலாற்று பழுவூ

3 ர் கிழவந் அரயன் மழவராயன் மகன் முதலியாண்டாந் பக்கல் விலை கொண்டுடையேநாய் எந்நிதான காணி நெல்வேலியில் நாந் இவர்களுக்கு விற்றுக் குடுத்த நிலமாவது, இவ்வூர்ப் பிறிந்த தியாக சமுத்திர நல்லூர் கார் மறு நிலத்துக்கு எல்லையாவது, கீழ்பாற்கெ

4 ல்லை சோதி சதுரத்துக்கு மேற்கும், விளாகமுடையானுக்கு மேற்கும், தென்பாற்கெல்லை சுளகு முக்கிக்கும், தச்சன்செய்க்கும், காதாட்டிக்கும், கங்கைதரையன் செக்கைக்கும் வடக்கு, இந்நிலம் உட்க்கிடைதுறை முகநிலம் அரைக்காணியும் பெரிய வளவன் வாக்காலு

5 க்கு தெற்கு, கிளிநல்லூர் எல்லைக்கு வடக்கு, சென்தாமரைக் கண்ணநல்லூர் கீழ்போகிக் குழுமிக்கு கிடக்கு நிலம் அரைக் காணியும் மீபாற்கெல்லை செந்தாமரைக் கண்ண நல்லூரெல்லைக் குக் கிழக்கும் வடபாற் கெல்லை நீர் முக்காலு

6 க்கும் பள்ள வாக்காலுக்கும் தெற்கும் சனி மூலையில் ஆயந்செய்க்கு மேற்கும் ஆக இன்நான்கெல்லை நடுவுபட்ட கார் மறுநிலம் ஆறு வேலி இன் நிலம் ஆறு வேலியும் விற்றுக் குடுத்து கொள்வதான எம்மி

7 லிசைந்த விலைப் பொருள் அன்றாடு நற்காசு பதின் ஐயாயிரம் இக் காசு பதின் ஐயாயிரமும் ஆவணக்களியே காட்டேற்றிக் கைச் செலவற கொண்டு விற்று விலைப் பிரமாண இசைவு தீட்டு குடுத்தேன் ஆதிசண்டேஸ்வர தேவகன்மி கோயிற் கணக்கநுக்கு சிறுபா

8 க்கமுடையான் சோழன் களப்பாளராயநேன் இந்நிலம் அறு வேலிக்கும் இக்காசு பதின் ஐயாயிரமே விலையாவதாகவும் இதுவே விலைபிரமாண இசைவு தீட்டவதாகவும் இதுவே பொருள் மாவறு திப் பொருட் செலவோலையாவுதாகவும் இதுவல்லது வே

9 று பொருள் மாவறுதிப் பொருள் செலவோலை காட்டக் கடவ திலாதாகவும் விற்றொற்றி பிரதிக்கியங்களுக்கும் தான தன்ம விக் கிரயங்களுக்கும் உரித்தாவதாகவும் ஒரு காலாவதும் இரு காலா வதும் முக்காலாவதும் விலைக்குற விற்று பொருளறக் கைக் கொண்டு

10 விற்று விலை பிரமாண இசைவு தீட்டுக் குடுத்தேன் ஆதிசண்டேசு வர தேவர் தேவகன்மி கோயில் கணக்கநுக்கு சிறுபாக்கமுடை யான் சோழக் களப்பாளராயநேன் இன் நிலத்துக்கு இவகள் வேண்டினபோதே பிரமாணம் பண்ணிக் குடுக்க கடவேனாகவும் குடுத்திலேநாகில் இப்பிரமாண

11 இசைவு தீட்டே பிரமாணமாவதாகவும் இப்படிச் சம்மதித்து விலைப் பிரமாண இசைவு தீட்டு குடுத்தேன் உடையான் திருப்பஞ் ஞீலியுடையார் கோயில் ஆதிசண்டேசுவர தேவர்கன்மி கோயில் கணக்கனுக்கும் சிறுபாக்கமுடையான் சோழன் கள

12 ப்பாளராயநேன் இவர்கள் வேண்டிக் கொள்ள இப்பிரமாணம் எழுதிநேன் திருவெள்ளறை உடையாந் மலைக்கினிய நின்றான் சீரிளங்கோவான கம்பிக்காத பிரியனேன் எழுத்து. இப்படிக்கு இவை சிறுபாக்கமுடையான் சோழன் களப்பாளராயன் எழுத்து. இப்படிக்கு இவை சிறுபாக்க

13 முடையான் சோழந் பொன் பரப்பினான் எழுத்து. இப்படி அறி வேந் எதிர்மலையுடையான் அளகராயநேன் எழுத்து. இப்படி அறிவேந் பாலையூர் கிழவன் திருச்சிற்றம்பலமுடையான் உய்ய நின்றாடுவானேன் எழுத்து.

i) இக்கல்வெட்டில் வரி ஏழில், 'ஆவணக் களியே காட்டேற்றிக் கைச் செலவறகொண்டு விற்று விலைப் பிரமாண இசைவுதீட்டு குடுத்தேன்' என்று வருகிறது. இவ்வரியின் திரண்ட பொருள் என்ன? 'ஆவணக்களி' எதைச் சுட்டுகிறது? விலைப் பிரமாண இசைவுத் தீட்டு என்பது என்ன?

ii) வரி எட்டில், 'பொருள் மாவறுதிப் பொருட் செலவோலையாவுதாக வும்' என்று வரும் சொற்றொடர்க்கு என்ன பொருள்?

iii) பத்து, பதினொன்றாம் வரிகளில் 'இன்நிலத்துக்கு இவகள் வேண் டினபோதே பிரமாணம் பண்ணிக் குடுக்க கடவேனாகவும் குடுத் திலேநாகில் இப்பிரமாண இசைவுத் தீட்டே பிரமாணமாவதாக வும்' என்று சொல்லப்பட்டுள்ளது. இங்குக் குறிப்பிடப்படும் 'பிர மாணம்' என்ற சொல் எதைக் குறிக்கிறது? 'பிரமாண இசைவுத் தீட்டு' என்பதற்கும் 'விலைப் பிரமாண இசைவுத்தீட்டு' என்பதற் கும் என்ன வேறுபாடு?

இவ்வினாக்களை மூன்று அறிஞர்கட்கு அனுப்பியிருந்தோம். இருவர் விடையளித்துள்ளனர். அவர்கட்கு ஆவணத்தின் நன்றி.

முனைவர் ப. சண்முகம்,
தொல்லியல் துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

நில விற்பனையைத் தெளிவாகக் குறிப்பிடும் இப்பகுதி, நிலப்பத்தி ரங்கள் இடைக்காலத்தில் எவ்வாறு எழுதப்பட்டன என்பதற்குத் தக்க சான்றாகத் திகழ்கிறது.

சிறுபாக்கமுடையான் சோழன் களப்பாளராயன், கோயில் கணக்க னுக்கு ஆறு வேலி நிலத்தை விற்கிறார். அதன் மொத்த விலையாக 15,000 காசுகள் நிர்ணயம் செய்யப்பட்டு முழுத் தொகையும் பெற்றுக் கொள்கிறார். பணம் பெற்றுக் கொண்டதற்கு இரசீதும் (Receipt) கொடுத்து பத்திரமும் எழுதிக் கொடுக்கிறார். இப்பகுதியில், விலை நிர்ணயம் செய்தது, பொருள் பெற்றுக் கொண்டது, அதற்கு இரசீது கொடுத்தது, பத்திரம் எழுதிக் கொடுத்தது, இந்நில விற்பனையில் பின்னால் தோன்றும் பிரச்சினைகளைத் தீர்த்துக்கொடுப்பேன் என்று வாக்குறுதி அளித்தது, ஆகிய அனைத்து செய்திகளும் கூறப்பட் டுள்ளன.

கல்வெட்டுப் பகுதியைக் கீழ்க்கண்டவாறு மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

முதல் பகுதி

| | |
|---|---|
| வரி 7-8 | விலைப்பணம் பெற்றுக்கொண்டு விற்பனைப் பத்திரம் கொடுப்பதாகக் கூறுதல். |

இரண்டாம் பகுதி

| | |
|---|---|
| வரி 8-9 | விற்பனைப் பத்திரமும் இரசீதும் இவையே என விளக்கிக் கூறல். |
| வரி 9 | நில விற்பனையில் என்னென்ன உரிமைகள் மாறின எனல். |

மூன்றாம் பகுதி

| | |
|---|---|
| வரி 10-11 | விற்பவர் வாங்குபவர்க்குக் கொடுக்கும் உறுதிமொழி. |

முதற்பகுதியில், விலையாக நிர்ணயித்த 15,000 காசுகளை ஆவணம் எழுதிய இடத்திலேயே மற்றவர்கள் (சாட்சிகள்) பார்க்க, விற்கிறவர் தன் கையால் பெற்றுக்கொண்டதும், 'நில விற்பனையை' உறுதி செய்து பத்திரம் (ஓலை) எழுதிக்கொடுத்ததும் சொல்லப்பட்டுள்ளது. 'விலைப் பிரமாண இசைவு தீட்டு' (வி. பி. இ. தீ.) என்ற சொற்றொடருக்கு ''விற்பனைப் பத்திரம்'' (Sale deed) என்று பொருள் கொள்ளலாம். இங்கு 'விலை' என்பது 'விற்பனை' என்ற சார்புப்பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. வி. பி. இ. தீ. என்பதற்கு 'விற்பனையை உறுதி செய்து மனமொப்பி எழுதிக்கொடுத்த பத்திரம்' என்று விளக்கமாகப் பொருள் கொள்ளலாம்.

ஆவணக்களி என்பதைப் பத்திரப் பதிவு செய்யும்/சேகரித்து வைக்கும் இடம் (Record Office) என்று ஒரு கருத்து நிலவுகிறது. ஆயினும் இப்படி ஒரு அலுவலகத்தையோ, பத்திரங்களைப் பதிவு செய்தல், சேகரித்து வைத்தல் போன்ற செயல்முறைகளைப் பற்றியோ நேரடியான சான்றுகள் இதுவரை கிடைக்கவில்லை. இச்சொல்லுக்குப் 'பத்திரம் எழுதிய/எழுதப்பட்ட இடம்' என்ற பொருளே பொருத்த முடையதாகத் தோன்றுகிறது. எழுதிய ஆவணத்தையும், விலையாகத் தரப்பட வேண்டிய பொருளையும் அனைவருக்கும் அவ்விடத்திலேயே காட்டிய (காட்டேற்றி) செய்தி சொல்லப்பட்டுள்ளது. மேலும் 'கைச் செலவறக் கொண்டு' என்பதனை, விற்பவர் வாங்குபவரிடமிருந்து நேரடியாக நிலத்தின் விலைப் பொருள் முழுவதையும் பெற்றுக்

கொண்டு என்று விளக்கவேண்டும். எனவே, இப்பகுதியில், நிலம் விற்றோர் தமக்கு வரவேண்டிய பொருள்களை எவ்விதக் குறைவுமின்றி பத்திரம் எழுதப்பட்ட இடத்திலேயே, சாட்சிகள் முன்னிலையில் தம் கையால் பெற்றுக்கொண்டார் என்பதையே இப்பகுதி தெளிவுபடுத்துகிறது.

மேற்குறிப்பிட்ட பரிவர்த்தனையை மீண்டும் வற்புறுத்துவதே இரண்டாம் பகுதி. பணம் பெற்றுக் கொண்டதற்கான அசல் (Original) இரசீது இது என்றும், இவ்வகையில் வேறு இரசீது வழங்கப்படவில்லை என்பதையும் இப்பகுதி உறுதி செய்கின்றது. ஒன்றுக்கு மேற்பட்ட இரசீதுகள் அல்லது படிகள் (Copy / Duplicate) உண்டானால் பின்னால் பிரச்சினைகள் எழ வாய்ப்புண்டு. எனவே இரசீதின் உண்மைத் தன்மையை உணர்த்தும் வகையில் இப்பகுதி அமைந்துள்ளது.

மூன்றாம் பகுதியில் நில விற்பனையாளர், வாங்குவோருக்குத் தரும் மற்றுமொரு உறுதிமொழி குறிக்கப்பட்டுள்ளது. இவ் உறுதிமொழி மூலம் நில விற்பனையாளர் அது தொடர்பான பிரச்சினைகளை தீர்த்துக் கொடுப்பேன் என்று வாக்குறுதி அளிக்கிறார். இவ்வகைப் பிரச்சினைகள் பலதரப்பட்டவையாகும். நில உரிமையின்பால் தோன்றும் பழைய, புதிய உரிமைப் பிரச்சினைகள், நில எல்லைத் தகராறுகள் ஆகியன சில. இதுபோன்ற பிரச்சினைகளில் சில, நிலம் விற்போரால் தீர்த்துத் தரப்பட வழியுண்டு. பிரமாணம் என்ற சொல்லுக்கு ஆவணம் என்ற பொருளுடன், உறுதிமொழி என்ற பொருளும் உண்டு. வி. பி. இ. தீ. ஏற்கனவே கொடுக்கப்பட்டுவிட்டது (பகுதி 2). எனினும் இந்நிலத் தொடர்பான பிரச்சினைகள் எதிர்காலத்தில் எழுந்தால் நேரிலோ அல்லது எழுத்து மூலமாகவோ உறுதிமொழி கொடுப்பேன் என்பது விற்பனையை மீண்டும் உறுதி செய்கிற முகத்தான் கூறுவதாகும். அவ்வாறு உறுதிமொழி/சாட்சி கொடுக்க இயலாமல் போனால் இந்த விலைப் பிரமாண இசைவு தீட்டே முக்கியமான ஆவணம் / சாட்சியாகும்.

**முனைவர் எ. சுப்பராயலு,**

**தலைவர், கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்.**

திரு. சண்முகம் கொடுத்துள்ள விளக்கம் எனக்கும் உடன்பாடே. அதில் விடுபட்டுப் போன, ஆனால் தொடர்புடைய சில செய்திகளை மட்டும் கீழே தருகிறேன். விற்பனைப் பத்திரம் முதலிலிருந்து 12ஆம் நூற்றாண்டு வரை ஆவணம் என்றும் சில சமயம் விலை சிராவணை என்றும் குறிக்கப்பட்டது. ஓரிருமுறை விலைக்கலம் என்ற சொல்லும்

ஆளப்பட்டது. அதற்குப் பின்பே விலைப் பிரமாணம் அல்லது விலைப் பிரமாண இசைவு தீட்டு என்பவை ஆளப்பட்டன.

ஆவணக்களி அல்லது ஆவணக்களரி என்பது கடைத்தெரு என்று கொள்ளலாம். ஆபணம் என்ற வடமொழிச் சொல்லோடு தொடர்புடையதுஇது. விற்பனைப் பத்திரம் என்று பொருள் தரும் ஆவணம், இதிலிருந்து கிளைத்த சொல்லா என்பதை ஆராய வேண்டும்.

''கைச்செலவறக் கொண்டு'' என்ற சொற்றொடர் கைச்செலவு முற்றிலும் கொண்டு என்று பொருள்படும். செலவு என்பது செலுத்தப்படும் பொருள் (இக்காலத்தில் தீர்ந்து போதல், அதாவது expenses என்று வழங்கும் பொருள் சார்புப் பொருள் ஆகும்). ஆகவே கைச் செலவு என்பது கையால் செலுத்தப்படும் பொருள், அதாவது நேரடியாக ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்குக் கொடுக்கப்படுவது. இங்கு நிலத்துக்கான விலைப்பொருளை வாங்குபவர் விற்பவருக்கு நேரிடையாக ஒருசேரக் கொடுத்தார் என்று பொருள் கொள்ள வேண்டும். விலைப்பொருள் நாணயமாகவே வழங்கப்பட்டது. நாணயம்நன்கு வழக்கத்திற்கு வருமுன் தங்கமாகக் கொடுக்கப்பட்டது. இது சிறு மூட்டையாகக் கட்டிக் கொடுக்கப்பட்டது என்பதை உணர்த்த கிழி என்ற சொல் பல கல்வெட்டுக்களில் கையாளப்படுகிறது.

எ.டு. விலைப்பொருள்.........காசு .... ஆவணக்களியே
கிழி கைச்செலவறக் கொண்டு.........

(தெ.க. தொ. VII-776)

திரு. சண்முகம் விளக்கியபடி மூன்றாம் பகுதி, எதிர்காலத்தில் எதுவும் பிரச்சினை எழுந்தால் விற்பவர் தாம் விற்ற நிலஉரிமைகளுக்குத் தாமே சான்று பகர்வதாகவே கொள்ள வேண்டும். இதனையே வேறு வகையாகச் சில கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

எ.டு: 1) பூமி விலையாவணக் கையெழுத்து......இவ்விற்று குடுத்த நிலத்துக்கு எப்பேர்பட்ட கலமும் இறையும் இல்லை. கலந் தோன்றிலும் இறை தோன்றிலும் ஸபையோமே தீர்த்தும் இறுத்தும் குடுக்கக் கடவோமாகவும். (தெ. க. தொ. VII-442)

2)விலைப் பிரமாண இசைவு தீட்டுக்குடுத்தோம் ...... இந்நிலத்துக்கு எப்பேர்ப்பட்ட கலனும் இல்லை கலனுளவாய்த் தோன்றினால் நாங்களே தீர்த்து குடுக்கக் கடவோம். (தெ.க.தொ. XII-190)

இறுதியாக ஒன்று. 'பிரமாண இசைவு தீட்டு' என்று முதலில் வருவது இக்காலத்தில் விற்பனைத் தொடக்கத்தில் செய்து கொள்

ளும் ஒப்பந்தச் சீட்டு (A Deed of Agreement) எனவும், மூன்றாம் பகுதியில் குறிப்பிடும் பிரமாணம், இறுதியாகப் பதிவாளர் முன்னிலையில் பதியப்படும் விற்பனைப் பத்திரம் (Sale Deed) எனவும் கொள்ளலாமா என்ற கேள்வி எழலாம். இப்படி முற்காலத்தில் விற்பனையில் இரு நிலைகள் இருந்தன என்பதற்கு சான்றுகள் இல்லை. இக்கல்வெட்டில் வரும் மூன்றாம் பகுதி பெரும்பாலான கல்வெட்டுகளில் வரவில்லை என்பதையும் குறிப்பிட வேண்டும்.

[ஐயம் தவிர்க பகுதியில் வெளியாகியுள்ள வினாக்களையும் விடைகளையும் படிக்கும் ஆய்வறிஞர்கள் இவைகுறித்து மேலும் புதிய தகவல்களைத் தரவிரும்பினால் ஆவணத்திற்கு எழுதலாம். அடுத்த இதழில் அவை வெளியிடப் பெறும்-ஆர்.]

---

## 9. யாவரும் கேளிர்

**1.** கரு. இராசேந்திரன்: திரு. கருப்பையா, திருமதி. அழகம்மை மகனார். பள்ளி இறுதித் தேர்வு; இடைநிலை ஆசிரியர், ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி, பன்னீர்ப்பள்ளம், நச்சாந்துபட்டி அஞ்சல், புதுக்கோட்டை மாவட்டம். இல்லம்: மேலப்பனையூர் அஞ்சல், விரையாச்சிலை (வழி), புதுக்கோட்டை மாவட்டம், 622 420. கண்டுபிடிப்புகள்: 150 புதிய கல்வெட்டுகள். குறிப்பிடத்தக்கவை - பூலாங்குறிச்சிக் கல்வெட்டுகள், 25க்கும் மேற்பட்ட குமிழிக் கல்வெட்டுகள், 40 புதிய செப்பேடுகள். வெளியீடுகள்: தினமணி, தினமலர், கதிரவன், தேவர் முரசு ஆகிய இதழ்களில் கட்டுரைகள். ஆர்வம்: கோனாடு, புதுக்கோட்டை மறவர்கள் பற்றிய ஆய்வு.

**2.** ஆறுமுக சீதாராமன்: 20-1-63. திரு. சோமஆறுமுகம் மகனார். முதுகலை வரலாறு இரண்டாமாண்டு மாணவர். 11, உமா நகர், கூட்டுறவு காலனி, தஞ்சாவூர் 613 007. கண்டுபிடிப்புகள்: பல அரிய காசுகள், மோதிரங்கள், குறிப்பிடத்தக்கவை - இரும்புறை பெயர் பொறித்த சேரர் காசு, சங்ககால வெள்ளி முத்திரை, மோதிரங்கள் (பெயர்ப் பொறிப்புடன் கூடியவை), நான்கு வேந்தர் அடையாளம் பொறித்த பல்லவர் காசு, சங்கச் சேரர்தம் வெள்ளி முத்திரைக் காசு, சீன எழுத்துக்கள் பொறித்த வெண்கலமணி, இராசராசனின் புதிய காசுகள். வெளியீடுகள்: தினமணியில் பல கட்டுரைகள், அரிய தமிழ்க் காசுகள் நூல். ஆர்வம்: அரிய காசுகள் ஆய்வு.

3. வே. ரா. கோவிந்தராஜன்: திரு. ராஜகோபால், திருமதி. நீலாம் பாள் மகனார். பள்ளி இறுதித் தேர்வு. பணி: பாத்திரம், பழங்கலைப் பொருள் விற்பனை, 31, குதிரைக்கட்டித்தெரு, கருந்திட்டைக்குடி, தஞ்சாவூர் 613 002. வகிக்கும் பொறுப்புகள்: விலங்குவதைத் தடுப் புச் சங்கச் செயலர், கரந்தை இறைப்பணி மன்ற உதவித் தலைவர், திருக்குறள் பேரவையின் பொருளாளர், மனையேரிப்பட்டி தொழு நோய் மறுவாழ்வு இல்லப் புரவலர். குழந்தைகள் காப்பகம், கரந்தை நகராட்சி நடுநிலைப்பள்ளி, கரந்தைத் தமிழ்ச் சங்கக் கலைக் கல்லூரி போன்ற நிறுவனங்கட்குக் கொடைகள். வெளியீடுகள்: தித்திக்கும் முத்துக்கள், கருந்திட்டைக்குடி மகாதேவர் திருக்கோயில் வரலாறு, திருக்குறள்நூறு. ஆர்வம்: தென்னிந்தியப் பழங்காசுகள் சேகரிப்பு - ஆய்வு.

4, நா. வள்ளி: தந்தை—திரு. நாகப்பன், கணவர் - திரு. கி. சொக்க லிங்கம். தமிழில் முதுகலை, இளங்கலைக்கல்வியியல், தொல்லியல் கல் வெட்டியல் பட்டயச் சான்றிதழ், முனைவர் பட்ட ஆய்வர்-நகரத்தாரின் அறப்பணிகள். முதுநிலை விரிவுரையாளர், இராமசாமி தமிழ்க் கல் லூரி, காரைக்குடி, பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம். இல்லம்: 11,லெட்சுமணன்செட்டியார்வீதி, காரைக்குடி 623 001.வெளியீடுகள்: பல கட்டுரைகள், சிற்பக்கலையின் சிறப்பும் சிற்பக்கலைக்கு முகவை யின் பங்கும் (தமிழ்ப் பல்கலைக்கழக ஆய்வேடு), திருப்பத்தூர் (தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு). கண்டுபிடிப்புகள்: கிழ வன் சேதுபதியின் துணைவி காதலி நாச்சியாரின் செப்பேடு. பல ஓலைச் சுவடிகள், நேமத்தான் பட்டியில் தொல்லியல் சின்னங்கள்.

5. சு. இராசகோபால்: 5-3-1950. ஆத்தங்குடி, குன்றக்குடி வட்டம். திரு. வெ. மு. சுப்பையா, திருமதி. வள்ளியம்மை மகனார். முது கலை வரலாறு, தொல்லியல் கல்வெட்டியல் பட்டயச் சான்றிதழ், சமஸ்கிருதப் பட்டயச் சான்றிதழ், முனைவர் பட்ட ஆய்வு - தமிழகத் தில் ஆவணப்பதிவுகள் (மதுரை காமராசர் பல்கலைக் கழகம்). தேர்வு நிலைக் கல்வெட்டாய்வாளர், கல்வெட்டுப் பயிற்சி நிறுவனப் பயிற்று நர், தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை 625 001. இல்லம்: மெய்யப்பா இல்லம், 4/295, சித்தி விநாயகர் கோயில் தெரு, தாசில்தார் நகர், மதுரை 625 020.வெளியீடுகள்: திருவையாறு (தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு); மற்றும் ஐம்பதுக்கும் மேற்பட்ட தொல்லியல் ஆய்வுக் கட் டுரைகள்.

6. இரா.பாலச்சந்திரன்:1946,ஆலமாத்துப்பட்டி,காமராசர்மாவட்டம். விடுதலைப் போரில் பங்கு பெற்று மைய அரசின்ப் தாமிர பட்டயம்

பெற்ற திரு. இராமச்சந்திரன், திருமதி. சீதாலட்சுமி மகனார். அஞ்சல் வழியில் இளங்கலை,முதுகலை வரலாறு. கள அலுவலர், ஒருங்கிணைந்த கூட்டுறவு வளர்ச்சி திட்டம், இராமநாதபுரம் மாவட்ட கூட்டுறவு மைய வங்கி, விருதுநகர். இல்லம்: 19, முனியாண்டி நாடார் சந்து, கீழத்தெரு, திருத்தங்கல் 626130, காமராசர் மாவட்டம். கண்டு பிடிப்பு: குளிராட்டிக் குகை ஓவியங்கள். ஆர்வம்: செப்புப்பட்டயம், நாணய சேகரிப்பு, திருத்தங்கலைச் சுற்றி நதிக்கரைகளில் தொல்லியல் ஆய்வு.

7. வெ. இரா. துரைசாமி: 5-4-1942. திரு. இராமசாமி, திருமதி. இராசாயம்மாள் மகனார். தமிழில் முதுகலை, இளங்கலைக் கல்வியியல், தொல்பொருள் ஆய்வுத் துறையின் கல்வெட்டுப்பயிற்சி பெற்றவர். தமிழாசிரியர், அரசு மேனிலைப்பள்ளி, நாமகிரிப்பேட்டை, சேலம் 637406. இல்லம்: கோயில்காடு, வெள்ளக்கல்பட்டி அஞ்சல், நாமகிரிப் பேட்டை வழி, இராசிபுரம் வட்டம், சேலம் 637406.கண்டுபிடிப்புகள்: கொல்லிமலை, கல்ராயன்மலை, போதமலை, அருநூத்துமலை ஆகிய மலைப் பகுதிகளில் புதிய கல்வெட்டுகள், கூலிப் பட்டியில் ஆதித்த கரிகாலன் காலத்து நடுகற்கள், பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கொல்லி மலைச் செப்பேடு. படைப்புகள்: பல கருத்தரங்குகளில் கட்டுரைகள். ஆர்வம்: கொல்லிமலை மக்கள் வரலாறு, பண்பாடு முழு ஆய்வு செய்தல்.

8. கா. இராசன்: 12-4-1955, திரு. காரே கவுடர், திருமதி. முத்தம்மாள் மகனார். முதுகலை-தொல்லியல், சமூகவியல்; தொல்லியல் முதுகலைப்பட்டயம்; சான்றிதழ்கள்-கணிப்பொறி, கடலியல், சமஸ்கிருதம். விரிவுரையாளர், கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613005. கண்டுபிடிப்புகள்: மத்திய பிரதேசம் நர்மதா நதிப் பள்ளத்தாக்கில் பழைய கற்காலப் பண்பாடுகள்; பஞ்சாப், அரியானா, ராஜஸ்தான் மாநிலங்களில் சிந்து சமவெளி ஊர் இருக்கைப் பகுதிகள், குஜராத் மாநிலக் கடற்கரைப் பகுதியில் தொன்மையான துறைமுகங்கள், உத்தரப் பிரதேசத்தில் கங்கை நதிப் பள்ளத்தாக்கு நாகரிகச் சின்னங்கள், தமிழக மாவட்டங்களில் தொல்லியல் சின்னங்கள். அகழாய்வுகள்: அப்புக்கல்-வடஆர்க்காடு மாவட்டம், இராமாபுரம்-கர்நூல் மாவட்டம், வல்லம்-தஞ்சாவூர் மாவட்டம், பெரியபட்டினம்-இராமநாதபுரம் மாவட்டம், கொடுமணல்-பெரியார் மாவட்டம். துவாரகை, கிராண்டி தீவு-கடல் அகழாய்வு. வெளியீடுகள்: பெருங் கற்படைச் சின்னங்கள், கற்பாறை ஓவியங்கள், குறியீடுகள், பிராமி எழுத்துக்கள், முத்திரை நாணயங்கள், நடுகற்கள், கடல்அகழாய்வு மற்றும் தமிழகத் தொல்லியல் தொடர்பாக நாற்பதுக்கும் மேற்பட்ட கட்டு

ரைகள். வல்லம் அகழாய்வு, துவாரகை கடல் அகழாய்வு, தர்மபுரி மாவட்டத் தொல்லியல் கள ஆய்வுத் திட்ட அறிக்கைகள். திட்டப் பணிகள்: கொடு மணல் அகழாய்வு, வடஆர்க்காடு மாவட்டத் தொல்லியல் கள ஆய்வு.

9. மு. ம. கோபாலன்: 10-6-1939. உறையூர், திருச்சிராப்பள்ளி. திரு. மருதநாயகம், திருமதி. வாலாம்பாள் மகனார். பள்ளி இறுதித் தேர்வு, அரசு ஓவியத் தேர்வில் முதல்நிலை தேர்ச்சி, முதுகலை வரலாறு அஞ்சல்வழி மாணவர். டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கோயிற்கலைப் பட்டயக்கல்வி மாணவர். சிறுநிதி நிறுவன உரிமையாளர், 24, பஞ்சவர்ணசுவாமி கோயில் தெரு, உறையூர், திருச்சி 620003. அறங்காவலர், அ/மி கருப்பண்ணசாமி கோயில், திருச்சி-2. துணைத்தலைவர், பஞ்சவர்ணசுவாமி கோயில் வார வழிபாட்டு மன்றம்; உறுப்பினர்-தமிழக, தென்னிந்திய நாணயவியல் கழகங்கள். வெளியீடுகள்: மெய்கண்டார் இதழில் பல கட்டுரைகள், டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையக் கருத்தரங்குகளில் ஆய்வுக் கட்டுரைகள். கண்டுபிடிப்புகள்: தஞ்சை ராஜராஜீசுவரம் கோயிலின் உச்சித்தளம் ஒரே கல்லால் ஆனதல்ல என்பதை வரலாற்றாய்வு மைய உதவியுடனும் இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் அன்பான ஒத்துழைப்புடனும் மெய்ப்பித்தமை. ஆர்வம்: ஓவியம் தீட்டுதல், பழங்கால நாணயங்கள் சேகரித்தல்-ஆய்வு, இலக்கிய ஆய்வுகள்.

10. பா. ஜெயக்குமார்: 11-11-1961. திரு. தே. பாக்கியம், திருமதி. பா. அழகம்மாள் மகனார். தொல் வரலாறு, தொல்லியலில் முதுகலை, எம்.ஃபில் தமிழகக் கிழக்குக் கடற்கரையின் தொல் துறைமுகங்களின் வரலாறு, தொல்லியல் சிறப்புகள் குறித்த முனைவர் பட்ட ஆய்வு. முதுநிலை ஆய்வாளர், தொழில்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613005. இல்லம்: ஆரியபட்டி கிராமம், உசிலம்பட்டி வட்டம் மதுரை மாவட்டம். படைப்புகள்: மரபுவழி கப்பல்கட்டும்முறை, கப்பல் கட்டுதல் பற்றிய ஆய்வறிக்கை உட்படப் பல்வேறு ஆய்வுக்கட்டுரைகள் பங்கேற்பு: தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் கல்வெட்டியல் துறை நடத்திய கொடுமணல் அகழாய்வுகள், பல்வேறு கருத்தரங்குகள், பணிப் பட்டறைகள்.

11. ச. கிருஷ்ணமூர்த்தி: 4-4-1949. திரு. சடைசாமி, திருமதி. பூமாது அம்மாள் மகனார். முதுகலை தமிழ், வரலாறு; தொல்லியல் கல்வெட்டியல் பட்டயச் சான்றிதழ். தொல்பொருள் அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை, 176, ஓ. எஸ். தீன் பில்டிங், மேலரதவீதி, சிதம்பரம்

608001. இல்லம்: 121, புதுப்பேட்டை வடக்குத் தெரு, சிதம்பரம் 608001. வெளியீடுகள்: தொல்லியல், வரலாறு தொடர்பாகத் தமிழிலும், ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள். ஆர்வம்: தொல்லியல், வரலாறு தொடர்பான ஆய்வுகள்.

12. எஸ். இராமச்சந்திரன்: 1-1-1953. திரு. இரா. ஸ்ரீநிவாசன், திருமதி. ந. சீதாலட்சுமி மகனார். தமிழில் முதுகலை, கல்வெட்டியல் தொல்லியல் பட்டயச் சான்றிதழ், அருங்காட்சியக அரும்பொருள் பாதுகாப்புச் சான்றிதழ். காப்பாட்சியர், மராட்டியர் அரண்மனை அகழ்வைப்பகம், தொல்பொருள் ஆய்வுத்துறை, தஞ்சாவூர் 613009. கண்டுபிடிப்புகள் தனியாரிடமிருந்து டேனிஷ்-தமிழ் ஒலை ஆவணங்கள், துப்பாக்கி, வாள் முதலிய கருவிகள், பல்வகைடேனிஷ்-தமிழ்க் காசுகள், கப்பல் பாகங்கள். பீங்கான் குடுவைகள், கடலில் மூழ்கியகப்பலின் நங்கூரம்-மீனவர்கள் உதவியுடன், முதல் துளஜாவின் திருமுல்லைவாசல் கல்வெட்டு, கல்வெட்டுடன் கூடிய விநாயகர் சிற்பம், பத்தொன்பதாம் நூற்றாண்டு எழுத்துப் பொறிப்புகளுடன் மைல்கற்கள், திருக்குறுங்குடி வட்டெழுத்துக் கல்வெட்டுகள், கீழப்பாவூர் கல்வெட்டுகள், அரிமழம் ஓணான்குடிக் கல்வெட்டு எனப் பல கல்வெட்டுகள். வெளியீடுகள்: திருமழபாடி-ஆய்வுநூல், கல்வெட்டு இதழில் கட்டுரைகள். ஆர்வம்: கல்வெட்டு, கலை, மாந்தவியல்.

13. இல. தியாகராசன்: 1956, திரு. ம. இலட்சுமணன், திருமதி. அரங்கநாயகி அம்மாள் மகனார். வரலாற்றில் முதுகலை, எம்.ஃபில்., கல்வெட்டியல் தொல்லியல் பட்டயச் சான்றிதழ், இளங்கலைக் கல்வியியல். முதுநிலை வரலாற்று விரிவுரையாளர், அரசு கலைக் கல்லூரி, அரியலூர் 621713, திருச்சி மாவட்டம் கண்டுபிடிப்புகள்: நூற்றுக்கணக்கான புதிய கல்வெட்டுகள். வெளியீடுகள்: சம்புவராயர் வரலாறு (பேரா. கோ. தங்கவேலு அவர்களுடன் இணைந்து), சோழ கேரளன் மற்றும் பல ஆய்வுக் கட்டுரைகள்.

14. கோ. வேணிதேவி: 17-9-1952. திருமதி. சுபத்ரா மேனன் மகளார். வரலாற்றில் முதுகலை, எம்.ஃபில். முதுநிலை விரிவுரையாளர், வரலாற்றுத்துறை, சீதாலட்சுமி ராமசாமி மகளிர் கல்லூரி, திருச்சி 620 002. டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கோயிற்கலைப் பட்டயக்கல்வி மாணவர். பங்கேற்பு: சென்னை அமெரிக்கத் தகவல் தொடர்பு நிறுவனத்தின் பன்னாட்டுக் கருத்தரங்கு, பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் ஆங்கிலத்துறை கருத்தரங்கு போன்ற பல கருத்தரங்குகள். வெளியீடுகள்: பல ஆய்வுக் கட்டுரைகள்

குறிப்பாக குமாரவெங்கலப்பா பற்றிய ஆய்வேடு. ஆர்வம்: கல்வெட்டியல், கோயிற்கலைகள்.

**15.** வே. கல்பகம்: 28-11-1968. திரு. சுப. வேங்கடராமன், திருமதி. சுந்தரி மகளார். முனைவர் பட்ட ஆய்வாளர், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், டாக்டர். மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கோயிற்கலைப் பட்டயக்கல்வி மாணவர். பரதநாட்டியக் கலைஞர். தில்லை நாட்டியாஞ்சலி, மைசூர் பல்லவோத்ஸவம், பொள்ளாச்சி தமிழிசைச் சங்கவிழா மற்றும் பல நிகழ்ச்சிகளில் சிறப்பான பங்கேற்பு, இசை ஓவியம் இரண்டிலும் திறன்படைத்தவர். மரபுவழி தஞ்சை ஓவியங்கள் அமைப்பதில் வல்லுநர். சென்னை மாநிலப் பூப்பந்தாட்டக் குழுவில் இடம் பெற்றுப் பல போட்டிகளில் வென்றவர். ஆர்வம்: கோயிற்கலைகள், கல்வெட்டு, இலக்கியம்.

**16.** அர. அகிலா: 30-6-1967. திரு. சு. அரங்கசாமி, திருமதி. அ. விசாலம் மகளார். முதுகலை வரலாறு, முனைவர் பட்ட ஆய்வு—பழுவூர்க் கோயில்கள். டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் கோயிற்கலைப் பட்டயக் கல்வி மாணவர். இல்லம்: தமிழ்க்குடில், 43, கொண்டையம்பேட்டை அக்கிரகாரம், திருவானைக்கா, திருச்சி. 620 005. வெளியீடுகள்: வேங்கடத்தான் துறையூர், ஆரண்ய விடங்கர், காலத்தை வென்று நிற்கும் கலைக் கோயில்கள் போன்ற ஆய்வுக் கட்டுரைகள். கண்டுபிடிப்புகள்: சமயபுரம் மதுரகாளியம்மன் கோயிலில் ஆடற் கரணச் சிற்பத் தொகுதிகள், பல புதிய கல்வெட்டுகள். ஆர்வம்: கல்வெட்டு, கோயிற் கலைகள்.

---

## கீழிருந்து மேலாக...

அறச்சலூர் அறச்சாலையம்மன் கோயில் வாயிற்படிக் கல்வெட்டு கீழிருந்து மேல்நோக்கிப் படிப்பதுபோல் புதுமையான முறையில் வெட்டப்பட்டிருப்பதாக இவ்விதழில் தகவல் தரப்பட்டுள்ளது.

இந்தப் புதுமையான பொறிப்பு முறை மிகப் பழங்காலத்ததான அமராவதித் தூண் ஒன்றில் காணப்படுகிறது. சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருந்த இந்த எண்பட்டைத் தூணின் மூன்று புறங்களில் வடமொழிக் கல்வெட்டொன்று கீழிருந்து மேலாகப் படிக்கும் விதத்தில் பொறிக்கப்பட்டிருந்ததாகத் திரு. ஹுல்ஷ் தம்முடைய 20-9-1887ஆம் நாள் கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். – ஆர்.

—A. R. E. 1887, பக்கம் 2.

# 10. அங்கும் இங்கும்

இப்பகுதியில் தமிழ்நாடு, இந்தியா, மற்றும் வெளிநாடுகளில் நடைபெறவுள்ள கோயிற்கலை, கல்வெட்டியல், தொல்லியல், வரலாறு தொடர்பான கருத்தரங்குகள், மாநாடுகள், பணிப்பட்டறைகள், ஆய்வரங்குகள் பற்றிய செய்திகளை ஆவணம் தொடர்ந்து வெளியிட வுள்ளது. நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்யும் அறிஞர்கள் அருள்கூர்ந்து ஆவணத்துடன் தொடர்பு கொள்க. தேசிய அல்லது பன்னாட்டுக் கருத் தரங்குகள் பற்றிய தகவல்களைப் பெறுவோர், அன்புகூர்ந்து ஆவணத் திற்கு அவற்றைத் தெரிவித்தருள்க.

**1. சுற்றுலா கருத்தரங்கம்:**

திருச்சி சீதாலட்சுமி ராமசாமி மகளிர் கல்லூரியில் 23-10-1991 புதன்கிழமையன்று சுற்றுலா பற்றிய கருத்தரங்கு நடைபெறும்.

தொடர்பு முகவரி: தலைவர், வரலாற்றுத்துறை, சீதாலட்சுமி ராமசாமி மகளிர் கல்லூரி, திருச்சிராப்பள்ளி 620002.

**2. இடைக்கால இந்திய வரலாற்றில் பணிப்பட்டறை:**

அலிகார் முஸ்லிம் பல்கலைக்கழகத்தின் வரலாற்று உயராய்வு மையம் 10-11–1991 இல் இருந்து 24-11-91 வரை இடைக்கால இந் திய வரலாற்றுப் பணிப்பட்டறை ஒன்றைத் தமிழ்நாடு, பாண்டிச்சேரி மாநில வரலாற்றாய்வர்களுக்காக நடத்தவுள்ளது.

தொடர்பு முகவரி: Prof. Irfan Habib, Co-ordinator, centre for Advanced Study in History, Aligarh Muslim University, Aligarh - 202 001.

**3. பேராசிரியர் தி.வை. சதாசிவப் பண்டாரத்தார் நூற்றாண்டு விழாக் கருத்தரங்கம்:**

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் அரிய கையெழுத்துச் சுவடித்துறை யின் சார்பில் பேராசிரியர் தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் நூற் றாண்டு விழாக் கருத்தரங்கு இரண்டு நாள் நிகழ்ச்சியாக நவம்பர்த் திங்களில் நடைபெறவுள்ளது.

தொடர்பு முகவரி: முனைவர் பா. சுப்ரமணியன், பேராசிரியர் & துறைத் தலைவர், அரிய கையெழுத்துச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613005.

4. வரலாற்றுப் புவியியல்-அறிமுகக் கருத்தரங்கம்:

டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையத்தின் சார்பில் இவ்வாண்டு டிசம்பர்த் திங்களில் வரலாற்றுப் புவியியல் பற்றிய அறிமுகக் கருத்தரங்கம் நடைபெறவுள்ளது.

தொடர்பு முகவரி: செல்வி மு. நளினி, கல்வெட்டாய்வாளர், டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், 48, புத்தூர் நெடுஞ் சாலை, திருச்சிராப்பள்ளி-620 018.

5. தென் இந்திய வரலாற்றுக் கழகக் கருத்தரங்கம்:

தென் இந்திய வரலாற்றுக் கழகத்தின் பத்தாம் ஆண்டு மாநாடும், கருத்தரங்கமும், பெங்களூர் தூய வளனார் கல்லூரி வரலாற்றுத்துறை யின் சார்பில், அக்டோபர் 19,20 தேதிகளில் பெங்களூரில் நடைபெறும்.

தொடர்பு முகவரி: திரு. டி. பி. ஜே. பாரதி, செயலர், தென்னிந்திய வரலாற்றுக் கழகம், 3-D/2 பைபாஸ் ரோடு, வேலூர் (சேலம்) 638182.

6 **XVIII Annual Congress of the Epigraphical Society of India:**

Conference will be held at Pune, under the auspices of the Bharat Itihas Samshodhak Mandal, 1321-Sadashiv, Pune.
Local Secretary: Mrs. R.S Thipse

7. **Fifty Second Session of Indian History Congress:**

Conference will be held at Ujjain from 28 to 30, December, 1991 under the auspices of Vikram University, Madhya Pradesh.

**Local Secretary**: Prof. (Kum.) Sushila Pant, Head, School of Studies in Ancient Indian History, Culture and Archaeology, Vikram University, Ujjain (M.P.), 456 010.

8. **XII Session of Sonth Indian History Congress:**

Conference will be held at Karnataka University, Dharwad in November, 1991.

**Local Secretary:** Prof. S. Settar, Dept. of History and Archaeology, Karnataka University.

9. **Indian Archaeological Society and Indian Society for Prehistoric and quaternary Studies.**

Date: 16-18th December, 1991.
Venue: Bhopal.

**Local Secratery**: Dr. O.P. Misra, Dept. of Archaeology and Museums, Govt. of Madhya Pradesh, Banganga Road, Bhopal-4 62 003.

# 11. ஆங்கிலப் பகுதி

# New Inscriptions

(Summaries)

Y. Subbarayalu

1) Nagapattinam, Nagapattinam Tk.Thanjavur Dt. On a loose slab at Naganathar temple. Palaeographically datable to the 8th - 9th centuries A. D. Fragment. Refers to a gift of gold for a lamp which was entrusted to the care of the Sabha of Perungadambur. Written by the goldsmith called Nagaip - peruntattan... Duttamallan.

2) Arundavapuram, Nidamangalam Tk. Thanjavur Dt. On the door jamb of the Ulagamadevar temple near the local tank. Chola king Kulottunga III. A. D. 1187. Construction (or renovation) of the temple called Irajagambhirisvaram - Udaiyar at Chendamangalam in stone by a Vattaraya - nadalvar. Refers to expenses incurred for bringing stones from a hill quarry.

3) Ariyur, Madurai Tk. Madurai Dt. On a rock called Muniyandavar - parai near the village. Pandya king Srivallabha. A. D. 1124. Royal order relating to the rates of assessment of the land tax (**Kadamai**) from two Nadus, viz., Mel - Iraniyamuttam and kil - Iraniyamuttam from the 3rd year of the king. The measuring rods and the grain measures to be used are indicated.

4) 1. Abinimangalam, Tiruchirappalli Dt. On the side of a stone slab buried in the soil in between the Pillaiyar and Perumal temples. Dated in Saka 1666 etc equivalent to A. D. 1745 Jan. 21. Gift of Avanimangalam, a village in Turaiyur simai by Venkatachala-reddiyar, son of Linga - reddiyar of Chettikulam for feeding charities at Ramesvaram and Kasi. Gift of the portion meant for Ramesvaram was given to the charge of Giridanashkudi Nattiriyan of Ramesvaram.

2. On the other side of the above slab. Duplicate of the Same record. Dated (a few days later) in 1745 Februvary. The portion meant for Kasi was given to the charge of Kasivasi Thillai nayaka Tambiran.

3. On a stray pillar in a field in the above village. Seems to record the construction of a sluice to the tank called **Akara** vallavan.

5) Tivattipatti, Dharmapuri Dt. On the door jambs of the Termutti Perumal temple. Pandya King Jatavarman Sundara pandya. C. 13th Century. Gift of a village called Sadirnelli as devadana to the temple of Sikayilayam - Udaiyar at ponnarkudal in Mukainadu in Kongu by the nattavar of Mukai - nadu.

6) Dasasamudram, Dharmapuri Dt. On a slab by the side of the Kannimar temple near the local tank. Chola king Rajaraja III. Records construction of a tank by two brothers.

7) 1. Tiruttalaiyur, Tiruchirappalli Dt. At the entrance to the Saptarishisvara temple. Fragment. Chola king Kulottunga III (1178 - 1218). Refers to a vattarayan who seems to be a high official (**mutali**) and gift of a lamp by him.

2. Same place. Fragment. Seems to record a cash gift for lamp in the temple of Elumarudandurai - udaiya - nayanar at Tiruttalaiyur.

8) Kalpalayam, Musiri Tk. Tiruchirappalli Dt. C. 13th century. Refers to the digging of a big canal and some tanks by Puttambadaiyan Paluvettaraiyar, a **kani** holder of Jananathanallur.

9) Irattinakudi, Tiruchirappalli Dt. On a step in the bathing ghat of Peruvalai canal. A. D. 1797. The Tamil text has a mixture of Persian/Arabic words. Related to the construction of a **kalingu**, (waste wein) by the **peshkar** Arunachalam Pillai.

10) 1. Chetti Tirukkonam, Ariyalur Tk, Tiruchirappalli Dt. On the north, west and south walls of the central shrine and ardhamandapa in Ranesvarar Temple. Chola king Rajadhiraja I. A. D. 1049. Records a resolution of the **nagaram** of Madurantakapuram that they would hereafter enjoy their properties according to the new apportionment (**kuru**) made by Sembiyansikamani - Pallavaraiyan, the supervisor of the village, as directed by Mahipalarajan who was holding the village as his **jivita** (life-time tenure). Signatories to this document belonged to both the **saliyar** and **Sankarappadiyar** groups.

2. Periya Tirukkonam, same Tk and Dt. On the northern wall of the ardha mandapa and central shrine of Adimadyarjunesvarar temple. Chola king Rajendra II. A. D. 1055. Arrangement to burn 23 Sandhi lamps made by the **Sankarappadi nagaram** in the shrine of Durgaiyar in the temple of Madurantakisvaram at Madurantakapuram.

3. On the western wall of the central shrine of the same temple. Chola king Rajendra II. A. D. 1055. Gift of land for a special service called Vijjayi archanai to same deity (here called Rajendra nangaiyar) by the **nagaram** of Madurantakapuram.

4. On the South wall of the Mahamandapa in the same temple. Chola king Vikrama. A. D. 1127. Records the decision of **the nagaram** of the village that on account of the dry conditions prevailing that year there was no water in the river Rajendra cholaperaru and therefore they should pay (to the Government) the land tax on the basis of **madakku** measurement only and that too only on the lands owned by the local villagers. They also exempted some land under arecanut cultivation from assessment.

5. Same village. Sundara perumal temple. On the north, west and south walls of the central shrine. Chola king Adirajendra. A. D. 1070. Records that the **nagaram** of Madurantakapuram assembled on the bank of the river Rajendrachola - peraru and decided to assign many plots of land for the celebration of festivals on the days of equinoxes, solstices and eclipses for lighting lamps; for expenses in the matha, etc., in the temple of Rajendra - alvar alias Melkoyil. For the gifted fields both ordinary measurements and their equivalents in standard measure (**madakku**) are given.

6. Same temple. On the South wall of the ardha mandapa. Pandya King Jatavarman Vikrama - pandya. A.D. 1348. Arrangement made by the **nagaram** for desilting Paliyanjippereri and other tanks. It was stipulated that labour for four pits should be contributed for each veli of wet land, and that for one pit on each veli of dry land, etc. Revenue from the taxes **pasippattam** and **vasalkuli** was also to be used for the same purpose.

11) Palangur, Tirukkoyilur Tk, South Arcot Dt. On a pillar of the old sluice of the village tank. Mentions that the sluice

called Titttittuvenran was made by Malaiyan Malaiyan alias Kulot tungachola - Kovalarajan.

12) Soraiyappattu, 7 km from Tirukkoyilur. On a stone mill inside the local tank. C. 9th century. Mentions the name Sri Salivan Perinaranan.

13) 1. Tiruvasi, Tiruchirappalli Dt. On the door jamb in the north western corner of the cloister of the Marrurai Varadisvarar temple. Chola king Parantaka I. A. D. 926. Records that a diadem was made using the gold accrued from the fines collected from the **patipadamulattar** of the Tiruvasramam temple under the supervision of Chendan Nakkan.

2. Same temple. On the eastern wall of the second Gopura. Pandya king J....krama. Fragment. Records that in order to recreate coconut groves that had been destroyed during some Muslim invasion some cess was levied on the houses of the village. Some houses such as those belonging to the servants were exempted from this levy.

3. Same temple. On the wall of the southern cloister. Badly mutilated. Chola king Kulottunga III. Records the sale of some land belonging to the temple to some **Udaiyans** of perumangalam.

4. Same temple. On the wall of the second gopura. Two disjointed portions of an inscription. Records that a number of dancing girls, the temple priests, musicians, and other employees of the temple received from the temple (or from some donor) a fixed amount of gold and undertook to measure out some stipulated quantity of paddy as interest on the gold. It is said that each of the recipient pledged her or his service tenure for the gold. The temple called Tiruvamaliswaram and some "three temples" are referred to.

5. Same temple. On the eastern wall of the second gopura. Records sale of land, free of taxes, to the Tiruvasramam temple by the **sabha** of Tudaiyur.

6. Same Temple. On the east wall of the second gopura. Chola king Rajaraja I. A. D. 1001. Gift of a silver bowl to the deity by a servant maid belonging to the **periyavelam** of the king.

14. Talanthondi (near Tirumullaivasal), Sirkali Tk, Thanjavur Dt. On a stone found on the tank bund near the Sabanayakar - thoppu. At present kept in the Maratha Palace Museum, Thanjavur. Dated in the reign of the Maratha king Tulaja II. A. D. 1770, Feb. 3rd. Records that while Narasinga Kade Ravu was administering the Sirkali simai, Chidambara Padaiyachchi and Tandavaraya Udaiyan of Talantondi made a gift of 2000 kuli of land for lamp service in the Chidambaram temple at the request made by Muthukkumarasami Tambiran of Pullirukkuvelur.

15) The following seven inscriptions were found on sluice stones of the irrigation tanks (**kanmay**) in Pudukkottai Dt. They record the construction of the sluices variously called **kumili, kumarikkal, manavalakkal and kuvam**.

1. Kannanur, Tirumayam Tk. On a square slab lying near the northern sluice of the Periyakulam. Pandya king Chadaiya Maran. C. 9th century. **kumili** constructed in the tank of Kanna nur by Rasingapperaraiyan alias Araiyan Ikalanilai of Turuma in Turuma - nadu in the name of his deceased father.

2. Chettimuttippatti, Kulattur Tk. Old sluice of the local Kanmay. C. 9th century, Kumarikkal fixed by Munai Eluvi, wife of Chevurmangalam - udaiyan Kuvavan Nakkan.

3. Idaiyattur, Tirumayam Tk. Main sluice of the South Kanmay. Chola king Rajakesari. C. 9th - 10th centuries. The **Kumili** constructed by two sons of Karumanikkachetti alias Padaran Kadan of Idaiyarrur in Ollaiyur - kurram.

4. Visalur, Kulattur Tk. Western sluice of the Big Kanmay. C. 9th-10th cents. **Kuvam** made of granite by Vinnannakkan Niraichandiran.

5. Kodumbalur. Southern sluice of the Kanmay near Muchukunthesvarar Temple. [Sluice] made Chattan Nilan and put under the protection of Ainurruvar.

6. Uppilikudi, Kulattur Tk. The Big Kanmay. C. 11th Cent. **Manavalakkal** fixed by Palamudikondachola Peraraiyan alias Pamudi Ettapadam, the udaiyan of Tenkangudi in Kulamangala-nadu,

7. Rasipuram, Kulattur Tk. Big Kanmay - middle sluice. Manavalakkal fixed in course of renovating the sluice (kulumi) of Rajasrayapuram in Michengili - nadu.

16. Inscrip'ions of Vira Ballala III (1291 - 1344) in Periyar Dt.

1. Ennamangalam, Bhavani Tk. On a stone at a garden called vavittottam. A. D. 1334. Reads the gift of some land by the Kurumbar who held the kani rights of Silambur in Vadakarai-nadu to the temple of Pantisvaram - udaiyar at the village. It is said that as the original endowment had become defunct (Irangal) this fresh gift became necessary.

2. Iramakkaranpalayam, Kangayam Tk. On a stone at Nattakkadu. A. D. 1334. Tax free gift of Kavalarnallur alias Rakuttarayanallur, a part of Kiranur in Kangaya - nadu to the temple of Adinatesvaramudaiyar at Kiranur by Irechchaya-dennayak kar son of Rakuttaraya Madappa - dennayakkar, a Mahapradhani.

3. Mosakkuttivalasu, Kangayam Tk. On a slab at Vedankadu. A. D. 1334. Gift of a village Uttamachola - chatur vedimangalam to the Vishnu temple at Sevur alias Sembiyan kila nadi - nallur, Vadaparisara - nadu by Sangama - dennayakkan, son of Madappa - dennayakkan.

4. Paruvachchi, Bhavani Tk. A. D. 1335. Fragment. Refers to Paruvachchi alias akalankanallur in Vadakarai nadu.

5. Mosakkuttipalayam, Perunturai Tk. In the Amai-nachchiamman temple. A. D. 1336. Fragment containing only the name of the place Vayiranpalli alias Uthamachola chaturvedi mangalam.

6. Kugalur, Gopichettipalayam Tk. Madyapurisvarar temple. A. D 1338. Gift of cash for lamp to the deity by a member of Vellalan Pumakal clan of Kuvalur in Kanchikkuval-nadu.

7. Pattilur, Bhavani Tk. A. D. 1338. Renovation of the entire temple by a member of the Vettuva Community.

8. Arachchalur, Erode Tk. Arachalaiamman temple, Door step. Mentions it as the gift of Pallavarayan.

Jothi Printers, Tiruchirapalli–2. Phone: 25416